



# புதிய மெருகு! புதிய சுடரொளி!

## இதுவே விம் தரும் பரிசுத்தம்!




**விம்** பவுடர் போட்டு விறுவிறுவென்று தேய்த்துப் பாருங்கள்; ஒளிப் பிழம்பாக எல்லாமே பளிச்சிடும். கண்ணாடிச் சாமான்கள், பீங்கான் சாமான்கள், சமையல் பாத்திரங்கள், பேஸின்கள், தளங்கள் எல்லாமே பளிச்சிடும். பாடுபடாமல், பிரயாசையில்லாமல் கீறலே விழாத பரிசுத்தம் செய்ய உங்களுக்கு உதவுவது விம். மிகமிக சுலபமான வேலை! ஒரு ஈரத் துணிமீது விம் பவுடரைத் தூவிக்கொண்டு இலேசாகத் தேய்த்துவிட்டுப் பாருங்கள்— அழுக்கும், களிம்பும் இருந்த இடம் எங்கே? பளபளப்புத்தான் அங்கே! மங்காத பெருமை தரும் உங்கள் வீடு மங்களவாசமாக விளங்க விம் உபயோகியுங்கள்.

## விம் பட்ட இடமெல்லாம் ஒளிப்பிழம்பே!




ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

V. 98-30 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.





மலர் 18 | இதழ் 51

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

விகாரி ௵ | ஆடி மீ 3 உ

# அர்த்தமற்ற வெறுப்பு

இன்று காங்கிரஸ் போகிற போக்கைப் பார்த்து மிக வருத்தமடையும் உண்மையான பழம் காங்கிரஸ் வாதிகள் எல்லாம் 'இன்று நம்மிடையே வல்லபாய் பட்டேல் இல்லாமற் போனாரே!' என்றுதான் ஏங்குகிறார்கள். வல்லபாய் பட்டேல் காங்கிரஸ் லட்சியங்களையும், காங்கிரஸ் கட்சி நிர்வாகத்தையும் அப்படிக் கட்டிக் காத்து வளர்த்து வந்தார். பண்டித ஜவாஹர்லால் நேரு வழி தவறிச் செல்லும்போதெல்லாம், கம்யூனிஸ்ட்டுகள் மார்க்கத்தில் இறங்கி நடக்கத் தொடங்கிவிடும் போதெல்லாம் வல்லபாய் பட்டேல், கடிவாளத்தை இழுத்துப் பிடித்து, நேருஜிக்குப் பாதை காண்பித்திருக்கிறார். 'இன்று வல்லபாய் பட்டேல் இருந்தால் தேசம் இவ்வளவு அவல நிலைக்கு வந்திருக்குமா? நேருஜி நாகபுரி நிலத் தீர்மானத்தை ஒப்புக் கொண்டிருப்பாரா?' என்றுதான் பேசிக்கொள்ளுகிறார்கள்.

வல்லபாய் கட்டிக் காத்து வளர்த்த நகரம் பம்பாய். "பம்பாய் ராஜா" என்றே பட்டேலை பம்பாய் மக்கள் போற்றி வந்தார்கள். பம்பாய் பெரும் ஆலை முதலாளிகளும் கோடிக்கணக்கான உழவர்களும் வாழும் ராஜ்யம். இந்த இரண்டு சமுதாயங்களையும் ஒன்றுக்கொன்று அன்யோன்யமாக நியாயத்தின் அடிப்படையில், தர்மத்தின் அடிப்படையில் வாழும் வகையில் காலஞ்சென்ற பட்டேல் கட்டிக் காத்து வந்தார்.

வல்லபாய் பட்டேல் இல்லையே என்று ஏங்கும் பம்பாய் மக்கள், 'சுதந்திரக் கட்சி உருவாகி விட்டது; அதற்கு ராஜாஜி வழிகாட்டும் தலைவராக விளங்குகிறார்' என்று கேட்டவுடன் தனியானதோர் ஆறுதலடைந்திருக்கின்றனர். பம்பாயின் செல்வந்தர்கள் மட்டுமல்ல, முக்கியமாக நடுத்தர மக்களும், பாமர மக்களும் ஒருமுகமாகச் சந்தோஷப் படுகின்றனர். பழம்பெரும் காங்கிரஸ்வாதிகள் ஆறுதலடைந்திருக்கின்றனர். பம்பாயில் ராஜாஜி எங்கெங்கெல்லாம் பேசினாரோ, அங்கெல்லாம் எல்லாச் சமூக மக்களும் உள்ளத்தில் பொறுமை மாற்சரியம் இன்றி அன்போடு இணைந்து தோன்றினர்!

இதைப் பார்த்து நேருஜி, "'போரம் ஆவ் ப்ரீ எண்டர் பிரைஸ்'ஸின் விஸ்தரிப்பே சுதந்திரக் கட்சி" என்று நிருபர்கள் கூட்டத்தில் கூறினார்.

காங்கிரஸ் கட்சியானது, கம்யூனிஸ்ட் கொள்கைகளை மேற்கொண்டு, எந்த ஸ்தாபனத்தையும் தேச உடைமையாக்கும் திட்டத்தில் இறங்கியபோது, பம்பாயிலுள்ள சில முதலாளிகள், தனி மனிதர்கள் சுதந்திரமாகத் தொழில் நடத்தும் உரிமையைச் சர்க்காருக்கு வற்புறுத்த வேண்டும் என்பதற்காக ஒரு சங்கம் அமைத்தார்கள்.

இந்தச் சங்கத்தினரைத்தான் நேருஜி அலட்சியமாகவும், அருவருப்போடும் குறிப்பிடுகிறார். இந்தச் சங்கத்தின் விஸ்தரிப்பே சுதந்திரக் கட்சி என்கிறார்.

சுதந்திரக் கட்சி, ஆளும் கட்சியைப் பற்றிக் கூறும் குறைபாடுகளுக்குத் தக்க பதில் சொல்ல முடியவில்லையென்றால், அதற்காக யார் மேலோ உள்ள அருவருப்பைக் காட்டிக் கொள்வது ஒரு சமாதானமாகாது.

அதிலும் ஒரு தேசத்தின் பிரதம மந்திரியாக இருப்பவர் தகுந்த காரணம் ஏதுமின்றி மக்களில் எந்த ஒரு பகுதியினரின்மீதும் அருவருப்புக் காண்பித்துக் கொள்வது பதவிக்குப் பொருத்தமான செயலுமல்ல.

சாதிப் போராட்டத்தைவிட, ஏழை-பணக்காரர் என்ற வர்க்கப் போராட்டத்தைத் தூண்டி விட்டு, துவேஷத்தை வளர்க்கும் வேலையைக் காங்கிரஸ் செய்து வருகிறது என்று ராஜாஜி சொல்லி வந்தார். அந்தப் பணியையே, இந்த அருவருப்பான வார்த்தைமூலம் நேருஜி தம்மை யறியாமல் செய்திருக்கிறார். அவர் குறிப்பிட்ட அந்தச் சங்கத்தினர் அவ்வளவு அருவருப்புக்கும் 'தகுதி' வாய்ந்தவர்களா என்று ஆராய வேண்டும்.

மேற்கூறிய சங்கத்தினர் ஆலைத்தொழில்களிலும், வியாபாரங்களிலும், மற்ற தொழில்களிலும் ஈடுபட்டவர்கள். அவரவர்கள் தங்களுக்குரிய வகையில் தொழில்செய்து வாழ்வதே உண்மையான தேச பக்திக்கு அடையாளம். அந்த வகையில் அவர்கள் எந்த தேசபக்தருக்கும் குறைந்தவர்கள அல்ல. இந்நிலையில் இவர்கள்மீது அருவருப்புக் காண்பிப்பது உகந்ததல்ல.

நேருஜி இந்தச் சங்கத்தினர்மீது மட்டும் தமது இனம் புரியாத அருவருப்பையும், வெறுப்பையும் காண்பித்துக் கொண்டால், காங்கிரஸ் கட்சி முதலாளிகள் கட்சி அல்ல என்று மக்கள் நினைத்து ஏமாந்து போய் விடுவார்களா? காங்கிரஸ் கட்சிக்குத்தான் பெருந்த முதலாளிகள், கொள்ளை லாபக்காரர்கள் ஆதரவும் பணமும் தந்து வருகிறார்கள்.

தேர்தலின் போது காங்கிரஸ்கட்சிக்குப் பணம் கொடுப்பதால் தங்களுக்கு லாபகரமாக இருக்கும் என்று நினைத்து நிதி வழங்கியவர்களும் பின்னால் சலுகைகள் பெற்றவர்களும் எத்தனையோ பேர். இப்படிப்பட்ட பெரும் சுயநல முதலாளி வர்க்கத்தைக் காங்கிரஸுக்குள் வைத்துக் கொண்டே நேருஜி 'தனித் தொழில் சங்க'த்து அங்கத்தனர்களை ஏளனமாகப் பேச வேண்டியதில்லை. 'போரம்' அங்கத்தினர்களாவது, உண்மையை பகிரங்கமாகச் சொல்லுகிறார்கள். அந்தரங்கமாக காங்கிரஸுக்குப் பணம் கொடுத்து உதவும் முதலாளிகளைவிட இவர்களைத் தான் அதிகமாக வரவேற்க வேண்டும்.

காங்கிரஸ் நாட்டு விவசாயத்தில் நுழைந்து குட்டையைக் குழப்பத் தொடங்கியவுடன் தான், இன்னும் சும்மா பார்த்துக் கொண்டிருப்பதில் பயனில்லை என்று சுதந்திரக் கட்சி துவக்கப்பட்டது. தொழில்கள், வியாபாரங்கள் இவற்றைப் பற்றி சுதந்திரக் கட்சியின் கொள்கைகளோடு, தனித் தொழில் சங்கத்தினர் கொள்கைகளும் ஒன்றுபட்டிருப்பதால் அவர்கள் சுதந்திரக் கட்சியுடன் சேர்ந்து கொண்டனர். ஒத்த எண்ணங்கள் உள்ள மக்கள் அனைவரும் இணைவது இயல்பு. ராஜாஜி எப்பொழுதுமே பரந்த உள்ளம் கொண்டு எந்தக் காரியத்தையும் கவனித்து வந்திருக்கிறார். எந்தத் துறையிலும் தீண்டாமையை அவர் அநுஷ்டிப்பவரல்ல. ஒருவர் ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்தவர் என்பதால் வெறுப்போ, சேராதவர் என்பதால் தனிப்பட்ட அன்போ கொண்டதில்லை. "கம்யூனிஸ்டுகள் என் முதல் எதிரிகள்" என்று






# இரண்டு நிலை




சொன்ன ராஜாஜி, அணுகுண்டு பகிஷ்கரிப்பு விஷயத்தில் கம்யூனிஸ்டுகள் தமது எண்ணங்களையே கொண்டிருக்கிறார்கள் என்றவுடன் கம்யூனிஸ்டுகள் மேடைமீது ஏறிப் பேசினார். ஆட்சிமொழி விஷயத்தில் தி. மு. க.வினர் ராஜாஜியின் கொள்கையையே கடைப்பிடிக்கிறார்கள் என்றவுடன் திரு அண்ணாதுரையுடன் ஒரே மேடையில் ஏறிப் பேசினார். கம்யூனிஸ்டுகளோடாவது தி. மு. க. வினர்களோடாவது அதனால் ஒன்றுபட்டுப் போகவில்லை. எப்போதும் போலவே மற்ற விஷயங்களில் தனித்தே நிற்கிறார். அதே போல் சுதந்திரக் கட்சிக் கொள்கைகளுடன் யார் எல்லாம் இணைந்து வேலை செய்ய விரும்புகிறார்களோ, அவர்களையெல்லாம் வரவேற்கத் தயாராய் இருக்கிறார். இப்படியிருக்க, 'போர'த்தைச் சேர்ந்தவர்கள் பம்பாய்க் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள் என்பதனால் சுதந்திரக் கட்சியை "'போர'த்தின் விஸ்தரிப்பு" என்று சொல்லுவது எவ்வளவு பேதைமை!

சுதந்திரக் கட்சி இளைஞர்களுடைய இயக்கமே. இது ஒரு கட்சி மட்டுமல்ல. எதிர்கால மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்காக இன்றைய இளைஞர்கள், எதேச்சாதிகாரத்துக்கு வழிகோலும் ஆட்சி முறையை எதிர்த்து நடத்தும் தேசிய இயக்கமாகும். காங்கிரஸ் கட்சியானது இளைஞர்களைப் புகவிடாது கதவு மூடிய கட்சியாக இயங்கி வருகிறது. அரசியல் கருத்துக்களைச் சொல்லத் துடிக்கும், அரசியல் வாழ்வை மேற்கொண்டு தேச சேவை புரிய விரும்பும் இளைஞர்களுக்கு வாய்ப்பளிக்கவும் சுதந்திரக் கட்சி தோன்றியிருக்கிறது.

வல்லபாய் பட்டேல் காங்கிரஸிலிருந்து செய்துவந்த பெரும் பணியைச் செய்யவே இன்று சுதந்திரக் கட்சி தோன்றியிருக்கிறது. அதனால்தான் பம்பாயில் அதற்கு அவ்வளவு வரவேற்பு.

# பலாத்கார ஏற்றுமதி

நமது நாட்டின் ஏற்றுமதி வியாபாரம் எதிர்பார்த்த அளவுக்குப் பெருகவில்லையாதலால் கட்டாய முறைகளைக்கூட இது சம்பந்தமாக மேற்கொள்ள வேண்டியிருக்கும் என்று மத்திய சர்க்கார் அமைச்சர் திரு லால்பகதூர் சாஸ்திரி சமீபத்தில் வர்த்தகக் கௌன்ஸில் கூட்டத்தில் தெரிவித்தார். ஆனால் இதற்கு என்ன காரணம் என்பதை அவர் முற்றிலும் ஆராய்ந்து தெரிவித்தாரா அல்லது பதவியிலிருப்பதால் அதிகார தோரணையில் கூறினாரா என்பது தெரியவில்லை.

வெளி நாட்டு வியாபாரம் நம் இஷ்டம் போல் நடத்தப்படுவதன்று. நம்முடைய அதிகாரமும் நம்முடைய வர்த்தகர்களின் அதிகாரமும் வெளிநாட்டுச் சந்தைகளில் விலைபோகாது. நல்ல சரக்கை மலிவாக விற்ருல், வியாபாரமாகும். இல்லாவிட்டால் நம் சரக்கு நம்மிடம் இருக்கும். அவர்கள் தேவைகளைப் பூர்த்தி செய்ய இதர நாடுகள் தயாராகக் காத்துக் கொண்டிருக்கின்றன

நமது பொருள்களின் தரத்தை உயர்த்தவும், விலையைக் குறைக்கவும் நமது தொழில்களுக்கு வாய்ப்பில்லை. நவீன யந்திர சாதனங்களைக் கொண்டு அடக்க விலையைக் குறைக்கலாம். ஆனல் புது சாதனங்களை அனுமதிக்க அரசாங்கம் தயங்குகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் பெருகி விடுமோ என்று பயப்படுகிறது. உளுத்துப் போன யந்திரங்களை வைத்து உற்பத்தி செய்தால், நிலைமையில் மாறுதல் ஏற்படுவதில்லை. பஞ்சாலைகளில் இதக நெருக்கடியை நிதர்சனமாகக் காணலாம்.

இந்த நிலையில் நிர்ப்பந்தமாக ஏற்றுமதி செய்தாக வேண்டும் என்று வற்புறுத்தினல், அதனல் ஏற்படும் நஷ்டத்தை யார் மேற்கொள்வார்கள்?

சர்க்கரை ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று சென்றஆண்டு தீவிரமாக முயற்சி செய்து, நஷ்டமேற்பட்டாலும் பாதகமில்லை என்று வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டது. ஒவ்வொரு சர்க்கரை ஆலையும் நஷ்டத்தைப் பங்கிட்டு செய்து கொண்டது. அதன் விளைவு இந்த வருஷம் சர்க்கரை உற்பத்தி குறைந்து விட்டது. பற்ருக்குறை நிலை ஏற்பட்டிருக்கிறது. அப்படியென்ருல் என்ன என்று கேட்கிறீர்களா? சர்க்கரையின் விலை இப்போது உயர்ந்து விட்டது. கடை வாசலில் அரிசிக்குக் 'க்யூ' வரிசை நிற்பதைப் போல் சர்க்கரைக்கும் இனி நிற்கவேண்டும். சர்க்கரை ஆலைகளின் கேந்திரமாகிய உத்திரப் பிரதேசத்தில் சர்க்கரை ரேஷனே வந்துவிட்டது. நமது ராஜ்யத்தில் வர எவ்வளவு நாளாகும்?

கட்டாய முறை என்ருல் என்ன விளைவுகள் நேரும் என்பதற்கு இவை சில உதாரணங்கள். சில சந்தர்ப்பங்களில் விளைவுகள் உடனடியாகத் தெரியும். சில சமயங்களில் காலங்கடந்தே தெரியும். எப்படியும் பலாபலன்களைச் சாதாரண மக்கள்தான் அனுபவிக்க வேண்டும். நிர்ப்பந்தத்தின் மீது செய்யப்படும் எல்லாக் காரியங்களுமே இப்படித்தான். அதற்காகவேதான் வியாபார விஷயங்களில் அரசாங்கத் தலையீடும் அதிகாரமும் இருக்கக்கூடாது என்று அடிக்கடி சொல்லுகிறேம். அரசாங்கம் அரசு புரியட்டும். வியாபாரத்தை, உள்நாட்டு வியாபாரமாயினும் சரி, வெளிநாட்டு வியாபாரமாயினும் சரி, வியாபாரிகளே கவனிக்கட்டும்.

# என்ன சேதி?

## வைத்தியக் கல்லூரி

சென்னை வைத்தியக் கல்லூரியில் எம். பி. பி. எஸ். படிப்பின் முதல் வருஷ வகுப்பில் இன்னும் 52 இடங்கள் பூர்த்தியாகாமல் காலியாக இருக்கின்றனவாம்! இதற்கு ஒரு காரணமும் சொல்லவில்லை.

இதைக் கேட்பதறகே வியப்பாக இருக்கும். தொழில் கல்விக்கான கல்லூரிகளில் முக்கியமாக என்ஜினீரிங் கல்லூரிகளிலும் வைத்தியக் கல்லூரிகளிலும், ஒருமாணவனுக்கு இடம் கிடைக்க வேண்டுமானல், பகீரதப் பிரயத்தனம் செய்ய வேண்டும். இடம் கிடைப்பது மாணவனின் அதிர்ஷ்டம்; பெற்ருேர்களின் தவப் பயன். இதுதான் சாதாரணமாகக் காணப்படும் நிலைமை. இந்நிலைமையில் இடம் பூர்த்தியாகாமல் காலியாக இருக்கிறதென்ருல் அதிசயமில்லையா?

அதைவிட அதிசயம் மற்றென்று இருக்கிறது. இந்த இடங்களைப் பூர்த்தி செய்ய வேண்டியதில்லை; காலியாகவே விட்டு வைக்கலாம் என்று சென்னை மாநில வைத்தியப் பகுதி நிர்வாகஸ்தர் (டைரக்டர்) சென்னை அரசாங்கத்துக்கு சிபாரிசு செய்திருக்கிறராம்! இது அதிர்ச்சியூட்டும் விஷயமல்லவா?

இந்த இடங்களுக்குத் தகுதி வாய்ந்த மாணவர்கள் விண்ணப்பம் செய்து கொள்ளலாம் என்று ஆண்டுதோறும் விரிவாக விளம்பரம் செய்யப்படுகிறது. இண்டர் மீடியட் அல்லது பி.எஸ்ஸி. படித்த மாணவர்களைத்தான் இதற்கு விரிவான முறைப்படி தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறர்கள். மாணவர்களும் விழுந்தடித்துக் கொண்டு சேர முன் வருகின்றனர். சென்ற ஆண்டில் நான்கு இடங்கள் மட்டுமே காலியாக இருந்தன. இந்த ஆண்டு மட்டும் ஏன் 52 ஸ்தானங்கள் காலியாக விடப்பட்டுள்ளன? திடீரென்று நாட்டில் வைத்தியர்களுக்கு மலிவு ஏற்பட்டு விட்டதா? அல்லது பொதுஜனங்களுக்கு வைத்தியர்களிடம் வெறுப்பு உண்டாகிவிட்டதா? நமக்குத் தெரிந்த வரையில் டாக்டர்களுக்கு இன்னும் பஞ்சம்தான் இருக்கிறது. கிராமப் பகுதிகளில் டாக்டரைக் காண வேண்டுமென்ருல் மைல் கணக்கில் வழி நடந்த பின்னரே காண முடியும். ஐந்தாண்டுத் திட்டங்களும் மேலும் மேலும் என்ஜினீர்களும் டாக்டர்களும் தேவை என்றுதான் கூறுகின்றன.

இந்த நிலைமையில் ஒரு பொறுப்பு வாய்ந்த அதிகாரி, வைத்தியப் பகுதியை நிர்வகிக்கும் உயர் உத்தியோகஸ்தர், மேன் மேலும் வைத்தியக் கல்லூரிகளை ஏற்படுத்த சிபாரிசு செய்து அதிகமான மாணவர்கள் டாக்டர் பட்டம் பெற

உதவ வேண்டிய பொறுப்பை வகிக்கும் அதிகாரி இப்படிக் கண்மூடித்தனமாக ஒரு சிபாரிசு செய்தாரென்றால் அவரைப் பற்றி என்ன சொல்வது? எப்படியும், இந்த அசட்டு நிலைமையை உடனே மாற்றியாக வேண்டும்.

## வேதநாயகர் நினைவு

வேதநாயகம் பிள்ளை அவர்களின் பிரதாப முதலியார் சரித்திரத்தைப் படித்தவர்கள் அந்த ஆசிரியரை மறக்கவே மாட்டார்கள். அந்த நூலின் தெள்ளிய எளிய தமிழ் நடையையும், நகைச் சுவையையும் அனுபவித்தவர்கள் அவர் இன்று நம்முடன் வாழும் ஆசிரியர் என்றே கருதுவார்கள். அவ்வளவு புதுமை அழுக்காடு மிளிர்கிறது. ஆனால் அவரோ எழுபதாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். மாயூரத்தில் நீதிபதியாகப் பணியாற்றி வந்தவர். நல்ல தெய்வபக்தி கொண்டிருந்தவர். ஆயினும் எந்தச் சமயத்தாரிடமும் வெறுப்பின்றி சர்வசமய சமரசப் பாங்குடன் வாழ்ந்தவர். அவரது சர்வ



சமயசமரசப் பாடல்கள் இன்றும் எல்லாச் சங்கீத வித்வான்களாலும் சங்கீத மேடைகளில் பாடப்படுகின்றன.

இத்தகைய தமிழ்ப்பெரியாரான மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்கள் எழுதிய நீதி நூலின் நூறாவது ஆண்டு விழாவும், அவரது எழுபதாவது நினைவு நாளும் இம்மாதம் 21ம் தேதி தமிழகம் முழுதும் கொண்டாட ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. சென்னையில் 21ம் தேதி வேதநாயகர் வாரத்தை டாக்டர் சேதுப் பிள்ளை அவர்கள் துவக்கி வைக்கிறார்கள். கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை தாங்குகிறார்கள்.

காலஞ்சென்ற வேதநாயகர், நீதிபதியாக உத்தியோகம் செய்த மாயூரத்தில் உருவச்சிலை அமைக்கவும் திருச்சி ஜில்லாவில் அவர் பிறந்த குளத்தூரில் ஒரு மண்டபம் எழுப்பி, வாசக சாலை, புத்தக சாலை ஏற்படுத்தவும் திட்டமிட்டிருக்கிறார்கள். இதற்கு நிதி திரட்ட திரு டி. புருஷோத்தம் எம். எல். சி தலைமையில் ஒரு குழு அமைத்திருக்கிறார்கள். வேதநாயகர் ஞாபகார்த்தத்துக்கு நிதி உதவி யளிக்க விரும்புவோர் பின்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்: திரு டி. புருஷோத்தம் எம். எல். சி., 1-29, அருணாசல ஆசாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.

# ஆகாச வெடி

சென்னையிலிருந்து பெங்களூர் வரை பஸ் விடுவதென்று சென்னை அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. —செய்தி

அவ்வளவு தூரம் தள்ளினாலும் நமது பஸ்கள் ஓடும் என்பது என்ன நிச்சயம்?

❋

பம்பாய் பால் பண்ணையிலிருந்து அனுப்பப்பட்ட இரு பால் புட்டிகளில் இரண்டு கண்டெலிகள் இருப்பதை அதிகாரிகள் கண்டுபிடித்தனர். —தினசரி

நல்லவேளை; அவை பெருச்சாளிகளாக மாறுமுன் கண்டு பிடித்தார்களே!

❋

பண்டங்களின் விலை உயர்வை எதிர்த்துக் கல் தூண்களில் ஏறி ஆர்ப்பாட்டம் செய்தவர்களை ஸ்ரீநகர் போலீசார் இறக்கி விட்டனர். —செய்தி

இப்படியே விலை உயர்வுகளையும் அவர்கள் இறக்கிப் பார்க்கக் கூடாதா?

❋

ஒரே நாளில் 32 கிராமங்களில் சூறாவளி சுற்றுப் பிரயாணம் செய்து முதன் மந்திரி காமராஜ் மக்களைச் சந்தித்தார். —செய்தி

"பேச நேரம் இருந்தால் இன்னும் சில கிராமங்களில் சுற்றுப்பிரயாணம் செய்திருக்க மாட்டேனா?" என்று அவர் சென்ற இடங்களில் எல்லாம் கூறியிருந்தால் ஆச்சரியப் படுவதற்கில்லை.

❋

வழுக்கைத் தலையர்களைப் புற்று நோய் அணுகுவதில்லை.
—ஒரு பிரிட்டிஷ் வைத்தியர்

புற்று நோய் பற்றி இப்படிக் கவலைப் படும்படி செய்தால் மற்றவர்கள் தலையும் வழுக்கையாகி விடாதா?

❋

அரச மரத்தைச் சுற்றுவதால் உடம்பிற்கு நல்லது—மந்திரி திரு மாணிக்கவேலு

ஆனால், அரசு புரிபவர்கள் தங்களை ஜனங்கள் சுற்றிவர வேண்டுமென்று தானே நினைக்கிறார்கள்!

❋

வேலூர் நகரசபையில் செருப்புகள் பறந்தன. —செய்தி

பாவம்! அவற்றால் எவ்வளவு காலம் தான் காலடியில் மிதிபட்டுக் கொண்டிருக்க முடியும்?

# சமஷ்டியாட்சியே நல்ல ஆட்சி

கொழும்பு, ஜூலை 8ல.

அகில இலங்கை குழந்தை எழுத்தாளர் சங்கம் இவ்வாரம் இந்நாட்டின் சரித்திரத்தில் வேறு எவரும் சாதித்திராத ஒரு அரிய பெரிய காரியத்தைச் சாதித்து, 'சபாஷ்', என்று எல்லோரும் ஒருமுகமாகப் பாராட்டும்படி செய்தது. இச் சங்கத்தினர் தங்கள் முதலாவது ஆண்டு விழாவையொட்டி, கொழும்பு செனட் பெனிடிக்ட் கல்லூரி மண்டபத்தில் ஒரு சர்வதேசப் புத்தகக் கண்காட்சியை ஏற்பாடு செய்திருந்தார்கள். சிறுவர்கள் நடத்தும் புத்தகக் காட்சிதானே என்று எண்ணி அங்கு போய்ப் பார்த்தவர்கள் அப்படியே மலைத்துப்போய் விட்டார்கள். இப்புத்தகக் காட்சியில் கொழும்பிலுள்ள பல வெளிநாட்டு ஸ்தானிகராலயங்களும் ஒத்துழைத்ததுடன் இந்தியாவிலிருந்தும் குழந்தைக் கவிஞர் திரு அழ வள்ளியப்பாவிடமிருந்து ஏராளமான புத்தகங்கள் காட்சியில் வைக்க வந்திருந்தன.

மேற்படி சங்கத்தின் ஆண்டு விழாவுக்காக விசேஷ அழைப்பின்பேரில் சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கக் காரியதரிசியும் சென்னை குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவருமான திரு. அழ. வள்ளியப்பா விஜயம் செய்திருந்தார். குழந்தை இலக்கியங்களை எழுதுபவர்களின் பொறுப்பு மகத்தானதென்றும் பிஞ்சு உள்ளங்களைப் பக்குவப்படுத்தி நாட்டின் நல்ல பிரஜைகளாக அவர்களை உருவாக்கும் மாபெரும் பொறுப்பு குழந்தை எழுத்தாளர்களிடம்தான் உள்ளதென்றும் திரு அழ. வள்ளியப்பா கூறினார்.

## நாடு சீரழிகிறது

கொழும்பு துறைமுகத்தில் சென்ற சில தினங்களாக நடைபெற்று வரும் வேலைநிறுத்தத்தில் நாடு சீரழிந்துகொண்டிருக்கிறது. ஏற்றுமதி இறக்குமதிகள் ஸ்தம்பித்துப் போயிருப்பதுடன் பொருளாதாரக் கட்டுக்கோப்பு குட்டிச்சுவராகிக் கொண்டிருக்கிறது. எந்த நிலைமையையும் சமாளிக்க அரசாங்கத்தினர் தயாராகி வருகிறார்கள். ராணுவப் படைகளுக்கு ஆயிரக்கணக்கான இளைஞர்கள் அவசரம் அவசரமாகத் திரட்டப்படுகின்றனர். எந்த நிமிடமும் அவசரகாலச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டு ராணுவ ஆட்சியேற்படலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இம்முறை அரசாங்கத்தின் கண்டிப்பான போக்குக்கு மக்களின் பூரண ஆதரவு இருந்து வருகிறது. உதவாக்கரை அரசாங்கத்திடம் மக்கள் எவ்வளவு வெறுப்பு கொண்டிருந்த பொழுதிலும் இடைவிடாத வேலை நிறுத்தங்களை நடத்தி மக்களை இம்சிக்கும் தொழிலாளர் யூனியன்களிடம் மக்கள் தாங்கமுடியாத ஆத்திரம் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் அரசாங்கம் வேலை நிறுத்தங்களுக்கு எதிராக எத்தகைய கண்டிப்பான நடவடிக்கை எடுத்தாலும் மகா ஜனங்களின் ஆதரவு பூரணமாக இருக்குமென்பதை எல்லாப் பத்திரிகைகளும் எடுத்து எழுதியிருந்தன.

## அடக்குமுறைக்குத் தமிழர் அடிபணியார்

சிம்மாசனப் பிரசங்கத்துக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை எதிர்த்துத் தமிழரசுத் தந்தை திரு. எஸ். ஜே. வி. செல்வநாயகம் இவ்வாரம் பார்லிமெண்டில் உணர்ச்சி ததும்பப் பேசியபோது தமிழர்மீது சிங்கள காலனியாட்சியைத் திணிப்பதே இன்றைய அரசாங்கத்தின் இலட்சியமாக இருந்து வருகிறதென்றும், அம்முயற்சியைத் தமிழ் பேசும் மக்கள் கடைசி மூச்சு இருக்கும்வரையில் எதிர்த்துப் போராடியே தீருவார்களென்றும் முழங்கினார். தமிழ் மக்களுக்கு இழந்த சுதந்திரத்தைத் திரும்பப் பெற்றுக்கொடுக்கவே தமிழரசுக் கட்சி பார்லிமெண்டுக்கு வந்தது. நாட்டிலே நல்ல எண்ணமும் வகுப்பு நல்லுறவும் நிலவ வேண்டுமானால் அதற்கு ஒரே வழி சமஷ்டியாட்சி முறையை ஏற்படுத்துவது தான் என்பதை அரசாங்கம் உணரத் தவறிவிட்டது இவ்வாறு திரு செல்வநாயகம் பேசிவிட்டு, சமஷ்டியாட்சி முறையை ஆதரிக்காத எந்த அரசாங்கத்தையும் தமிழ் மக்கள் கடுமையாக எதிர்க்கவே செய்வார்கள் என்றார்.

— ரஜனி

# ஆதரவுபட்ட காதலர்கள்

காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவு
பட்டதே இன்பம். — அவ்வை

மண்ணுலகில் தோன்றிய பொருள் அனைத்தும், ஒன்றையொன்று சார்ந்து ஆதரவுடன் வாழ்கின்றன!

மானிடராய் பிறந்தவர்களைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை.

'காதல்–காதல்' என்று உயிரையே விடுகின்றனர் காதலுக்காக எதையும் செய்யத் துணிகின்றனர். ராம–ராவண யுத்தத்துக்குக் காரணம் காதல் பாரதப் போருக்குக் காரணம் காதல். எட்டாம் எட்வர்டு அரசர் தமது அரச பதவியைத் துறந்ததற்குக் காரணம் காதல்!

இப்படி உலகத்தையே ஆட்டிப் படைக்கும் காதலுக்கு நிறம் உண்டா? உருவம் உண்டா? ஒன்றும் கிடையாது. இதை நினைத்துப் பார்த்துத்தான் ஒரு அமெரிக்க ஆசிரியர் "கட்புலனுக்குப் புலப்படாத விஷயங்களே உலகை இயக்குகின்றன. உதாரணமாக, உஷ்ணம், மின்சாரம், காதல்" என்றார்.

ஆனால் இந்தக் காதலில் ஆதரவும் கலந்து விட்டால் இன்பம் என்றார் தமிழ்ப்பாட்டி அவ்வை.

அப்படி ஆதரவுபட்ட காதலர்களை இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார் ஓவியர் கல்பனா.

# ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர்

ஆய கலைகள் அறுபத்து நான்கு என்றார்கள் பெரியோர்கள். அந்த அறுபத்து நான்கு கலைகளில் கதா காலட்சேபமும் ஒரு கலையோ என்னவோ நாம் அறியோம். ஆனால் அந்த அறுபத்து நான்கு கலைகளுக்கும் சிகரம் போன்ற கலை, கதா காலட்சேபக் கலை என்பதில் நமக்கு ஐயமில்லை. இந்தக் காலட்சேபக் கலையை இவ்வளவு சிறப்பாகச் சொல்வதற்குக் காரணம், இந்தக் கலையில் பரந்த ஞானம், ஆழ்ந்த படிப்பு, உயர்தரமான சங்கீதம், நாடகப் பாங்கு, அற்புத சித்திரத்தையே கண்முன் நிறுத்தக்கூடிய அரிய வாக்குச் சாதுர்யம், உயர்தரமான ஹாஸ்ய உணர்ச்சி — இவ்வளவும் காலட்சேபம் செய்யும் பாகவதர் பெற்றிருக்க வேண்டும். அப்போதுதான் இந்தக் கலை சோபிக்கிறது. இவ்வளவு அம்சங்களையும் பெற்றுத் திகழ்வது சிரமமாக இருப்பதால்தானோ என்னவோ, காலட்சேபக்கலை நம்நாட்களில் குறைந்து வருகிறது. ஆயினும் நம்மிடையே ஓர் இருவர் பழைய பரம்பரையை நினைவூட்டும் வகையில் அற்புதமாகக் காலட்சேபம் செய்வதற்கு இருக்கிறார்கள். அவர்களில் முதன்மையாகக் குறிப்பிடப்பட வேண்டியவர் திருவையாறு ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர் அவர்கள்.

ஸ்ரீ அண்ணாசாமி பாகவதருடைய வழி தனி வழி. அவர் ராகம் பாடும் முறை உள்ளத்தில் ஊடுருவிப் பாயும் முறை. காம்போதி,பைரவி என்று ராக சஞ்சாரம் செய்ய ஆரம்பித்தாரானால், ஆரம்பிக்கும் போதே ராகத்தின் ஜீவகளை அவர் குரலிலிருந்து வெளிப்பட்டு நம் உள்ளத்தில் பாயும். ஆலாபனமும் இரண்டு நிமிஷம், மூன்று நிமிஷம்தான் பண்ணுவார். அந்த மூன்று நிமிஷங்களில் "ஆகா! ஆகா!" என்று மெய்சிலிர்க்கச் செய்து விடுவார்.

அவர் கதைகளில், தியாகராஜர் கீர்த்தனைகள், அருணாசலக் கவி, வால்மீகியின் சுலோகங்கள், வியாச பகவானின் சுலோகங்கள் இன்னும் பல உதிரிக் கவிஞர்கள் பாடியுள்ள நவரஸம் நிறைந்த சுலோகங்கள் எல்லாம் வரும். அவருடைய சம்ஸ்கிருத ஞானம் மிக விரிவானது. முறைப்படி வடமொழி பயின்றவர். கம்பராமாயணப் பாடல்கள், பட்டினத்தார் பாடல்கள், இப்படிப் பல தமிழ்ப் பாடல்கள் விரவி வரும் அவர் கதையில். ஒரு முறை கதையில் நாடோடிப் பாடல் ஒன்று பாடினார். நன்றாக இருந்தது. "இந்தப் பாட்டு கதை பத்ததியிலேயே உண்டோ?" என்று விசாரித்ததில் இல்லை என்றும், தம் வீட்டு வாசலில் யாரோ ஒரு பிச்சைக்காரன் பாடிக் கொண்டு வந்த பாட்டென்றும், அதை அவனைச் சொல்லச் சொல்லி எழுதிப் பெற்றுக் கொண்டது என்றும் தெரிவித்தார். இப்படிப்பட்ட பல அபூர்வமான பாடல்கள் அண்ணாசாமி பாகவதர் அவர்கள் கதையில் கேட்கக்கூடும்.

இவை எல்லாவற்றையும் விட அவரது ஹாஸ்ய ரஸம் மிக மிக உயர்தரமானது. பிறர் மனத்தை நோகாமல் சிரிக்க வைக்கும் ஹாஸ்ய பாணி. தாம் சிரிக்காமல், மெள்ள நாசூக்காகச் சொல்லி வந்து, கடைசி வரியை முடிக்கும்போது, சபையில் 'கொல்' என்று சிரிப்பு எழும்படி செய்வதில் வல்லவர். பொதுவாகக் கதை சொல்லுபவர்கள், ஹாஸ்யத்தில் இறங்கி விட்டார்களானால் சபையிலுள்ள பெண்கள் தலை குனிந்து கொள்ளும்படியான நிலையை உண்டாக்கி விடுவார்கள்.



ஸ்ரீ அண்ணாசாமி பாகவதரும் அவர் தர்மபத்னியும்

அண்ணாசாமி பாகவதர் அவர்களது ஹாஸ்யங்கள் என்றுமே அந்தத் திசையை எட்டிப் பார்த்தது கிடையாது.

அதோடு, தமது இனிமையான சுபாவத்தின்மூலம் தம்மோடு பழகுபவர்களின் உள்ளத்திலே நிலையான இடம் பெற்று விட்டவர் அண்ணாசாமி பாகவதர். இப்படிப்பட்ட உயர்ந்த மனிதருக்குச் சமீபத்தில் அறுபதாண்டு பூர்த்தியாயிற்று. அவரும் அவர் மனைவியாரும் இன்னும் அறுபதாண்டு வாழ்ந்து, பாகவதர் இந்த அரும் காலட்சேபக் கலைக்குக் காவலராகத் திகழ வேண்டும் என்பதே நாம் இறைவனை வேண்டும் பிரார்த்தனை !

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 91

ஊண்உடை எச்சம்
உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாண்உடைமை மாந்தர்
சிறப்பு.

உண்பதும் உடை உடுத்துக் கொள்வதும், ஒழிந்த மற்றவை எல்லாருக்கும் பொது. நன்மக்களுக்குச் சிறப்பான இலக்கணம் நாணம் உடைமை.

நாணம் என்பது பாவச் செயலைப் பற்றிப் பயமும் வெட்கமும். பயனை ஆராய்ந்து விலக்குதல் அல்ல; ஒரு ஆராய்ச்சியும் செய்யாமல் இயல்பாகப் பாவச் செயலை வெறுத்தல் நல்லோருடைய தன்மை. அந்த வெறுப்புக்குப் பெயர் நாணம். ஆராய்ச்சியே வேண்டியதில்லை.

எச்சம்—எஞ்சியது. முனிவர் இச் சொல்லை வைத்து அழகாகக் குறித்தது காமச் செயல்களை.

பாவத்தைப் பற்றி நாணப்படுதல் நல்லோருடைய சிறப்பான பிறவிக் குணம்.

* * *

ஊனைக் குறித்த
உயிரெல்லாம்; நாண் என்னும்
நன்மை குறித்தது
சால்பு.

குறித்த : பன்மை வினைமுற்று

உயிர்கள் எல்லாம் தத்தம் உடம்பைப் பற்றிக் கொண்டு நிற்கின்றன. சால்பு என்னும் மேலோர் குணம் நாணத்தைப் பற்றி நிற்கிறது.

நாணம் இல்லையேல் சால்பு செத்தது. உயிர்ப் பற்றுக்குச் சமமாகும் சான்றோரின் நாணம். எந்தப் புழுவும் பூச்சியும் தன் உயிரை எப்படிக் காக்கிறதோ, அந்த இயற்கை வேகத்துடன் சால்புடையோர் பாவத்தைக் கண்டு நாணுவார். பாவம் செய்ய நேரிட்டால் மரணமடையும் துன்பம் அனுபவிப்பார்.

* * *

அணிஅன்றோ நாணுடைமை
சான்றோர்க்கு; அஃதுஇன்றேல்
பிணிஅன்றோ பீடு நடை.

சான்றோர்க்கு நாணுடைமை ஒரு சிறந்த ஆபரணமாகும். அவர்களுடைய மற்ற நல்ல குணங்களை அது எடுத்துக்காட்டும்; நல்ல ஆபரணமானது இயற்கை அழகை எடுத்துக் காட்டுவது போல். இந்தக் குணம் இல்லாமற் போனால் வேறு காரணங்களைக் கொண்டு ஒருவன் பெருமிதம் கொண்டு நடந்தால் அது பொறுக்க முடியாத நோயைப் போலாகும்.

மற்ற விஷயங்களை எண்ணிப் பெருமிதம் அடைந்து மிடுக்கு நடை மேற்கொள்ளலாம். ஆனால் அந்த மிடுக்கு ஒரு பிணியே ஆகும். பாவத்தைப் பற்றிய அச்சமே மனிதனுக்கு அழகு தரும் குணம்.

* * *

மேலோர் பிறருக்கு வரும் பழியைத் தமக்கு வரும் பழியைப் போல் அஞ்சுவார். அவர்களுடைய பயம், பாவத்தைக் கண்டு. அது யாரிடம் நின்றாலும் அவருக்கு இயல்பான குணத்தினால் நடுங்குவார். தன்னைக் காப்பாற்றிக் கொள்ள மாத்திரம் உண்டாகும் நடுக்கம் அல்ல.—அழுக்கு எங்கிருந்தாலும் நமக்கு அருவருப்பு உண்டாவது போல்.

பிறர்பழியும் தம்பழியும்
நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

அப்படிப் பழியைக் கண்டு நாணுவாரை உலகம் ஏத்தும்.

உறைபதி - இருப்பிடம்.

இந்த நற்குணத்துக்கு வசிக்கும் இடமே இவன் என்று உலகத்தார் அவனைப் போற்றுவார். இப்படி நாணும் சால்புடையவன் தானும் பழிக்கு இரையாக மாட்டான், மற்றவர்களுக்குப் பழி வரும் செயலையும் செய்ய மாட்டான்.

* * *

குலம்சுடும் கொள்கை
பிழைப்பின் நலம்சுடும்
நாண்இன்மை நின்றக்
கடை.

ஆசாரம் தவறினால் குலத்திலிருந்து நீக்கப் படுவாய். ஆனால் பாவத்துக்கு நாணப்படாமற் போனால் நலத்திலிருந்தே நீங்குவாய்.

குலத்தின் ஆசாரத்தை விட மேலானது பொது அறங்கள் என்கிறார். குலத்துக்கும் நலத்துக்கும் உள்ள எதுகையை வைத்து நஷ்டத்தின் அளவு வேற்றுமையைக் காட்டுகிறார்.

* * *

நாண் என்பதன் இரு பொருள்களை வைத்து நாணின் சிறப்பைச் சொல்கிறார்.

நாண் அகத்து இல்லார்
இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி
யற்று.

மனத்தின்கண் பாவத்தைப் பற்றிய அச்சம் இல்லாத மக்களுடைய செயல்களெல்லாம் இயந்திரக் கயிற்றினால் இயங்கப்படும் பொம்மைகளின் ஆட்டமே ஆகும்.

நாண் - நாணம், கயிறு.

மரப்பாவையை ஆட்டக்காரன் பின்னால் நின்று கயிற்றைக் கொண்டு ஆட வைக்கிறான். பாவைக்குச் சுயவேகம் இல்லை. அதைப்போல் உள்ளத்தில் நாணம் இல்லாதவன் வேறு ஏதோ காரணங்களினால் நல்லவனாக ஒழுகலாம். அந்த ஒழுக்கம் அவன் உள்ளத்தில் தோன்றிய குணத்தால் வந்ததல்ல. வெளிக் காரணங்களால் உண்டானது. அவனைப் போற்றுவதற்கில்லை.

உயிர் மருட்டியற்று — உயிருள்ளதாக மயக்குவதுபோல் ஆகும்.

மரப்பாவை தனக்கு உயிருள்ளது போல் நம்மை மயங்கச் செய்கிறது.

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 46. மதுரைக்கு விஜயம் செய்தல்

அன்றிரவு, தான் எண்ணிய தெல்லாம் கை கூடியதை நினைந்து அக்ரூரர் ஆனந்தம் அடைந்தார். கண்ணன் தன்னைக் கேட்ட கேள்விகளுக்கு மெதுவாகப் பதில் உரைக்கலானார். கம்ஸனுக்கு யதுகுலத்தின் மீது வளர்ந்து வரும் பகை, வசுதேவரைக் கொல்ல அவன் செய்த முயற்சி, தன்னை ஆயர் பாடிக்கு அனுப்பிய காரணம் முதலிய வைகளைக் கண்ணனுக்கு எடுத்துரைத்தார். பலராமனும், கண்ணனும் அதைக் கேட்டு நகைத்தனர். நந்தனிடம் மன்னவன் இட்ட கட்டளையைத் தெரிவித்தனர். நந்தன் கட்டளைக்கு இணங்கி, இடையர்களிடம் பால், தயிர், வெண்ணெய் முதலிய பண்டங்களைச் சேகரம் செய்யுமாறு உத்தர விட்டான். மறுநாள் காலையில் கப்பங்களை எடுத்துக் கொண்டு எல்லோரும் மதுரை செல்லவேண்டுமென்றும் அங்கு நடக்கும் தனுர் யாகத்தைப் பார்க்க நாடே திரண்டு வருவதாகவும் தெரிவித்தான்.

ஆனால் கண்ணனை அழைத்துச் செல்ல அக்ரூரர் வந்திருக்கிறார் என்று கேட்ட கோபிகள் மனம் வருந்தினர். சிலருக்குப் பெருமூச்சினால் வடிவதனம் அழகற்று வாடியது; சிலருக்குக் கை வளையல் நழுவியது; சிலருக்குக் கூந்தல் கலைந்தது; சிலர் கண்ணனையே சிந்தித்துத் தம் நினைவற்று உடல் இழந்து உயிர் மட்டும் மிஞ்சிய ஜீவன்கள் ஆயினர். சிலர் கண்ணனுடைய லீலைகளை நினைத்து நிலையற்றனர். ஒன்று கூடி இரவெல்லாம் உறக்கமின்றி ஒருவரோடொருவர் பேசலாயினர்.

" பிரமனே! உனக்குக் கருணை என்பதே கிடையாதா? ஜீவன்களைச் சேர்த்து வைத்துத் திடீரென்று பிரிப்பது நியாயமாகுமா? இதென்ன சிறு குழந்தையின் செயலாகவல்லவோ இருக்கிறது. கருங்குழல் பூசனை கண்ணனை எங்களுக்குக் காண்பித்து விட்டு மறைத்து விடுவது அடாத செயல். " அக்ரூரர் " என்ற பெயர் பூண்டு " க்ரூர "மாகத் தோன்றுகிறாய். உன்னுடைய செயல் இறைமை அனைத்தையும் கண்ணனின் ஒரு அங்கத்தில் கண்ணுற்ற எங்களுடைய கண்ணையன்றோ எடுத்துச் செல்கின்றனை!

" முற்றிலும் துறந்து, அவனையே நாடின எங்களைப் புறக்கணித்துப் புது அனுபவங்களைத் தேடிச் செல்கிறான் கண்ணன். நகரத்துப் பெண்களே பாக்கியம் செய்தவர். நாளைக் காலையில் அவர்கள் கண்ணனைக் காண்பர். நகரத்து மாதரின் தேனொழுகும் சொற்களில் மயங்கிய கண்ணன் நாட்டுப் புறத்துப்பெண்களை மறந்தே போவான்.

" நல்ல அக்ரூரர் வந்தார் இங்கு, நம்மை நோக வைத்து நம்பியை அழைத்துச் செல்ல! நெஞ்சத்தில் ஈரமற்ற கண்ணனும் செருக்கேறிய இடையர்களும் மதுரை செல்கின்றனர். பெரியோராகிலும் தடை செய்யக் கூடாதா? இன்று விதி நம்மைப் பகைக்கிறது. நாமெல்லோரும் சென்று கண்ணன் போகாமல் தடை செய்வோம். நம்மை யார் என்ன சொல்வது? ஐயோ! நாம் எவ்வாறு இப் பிரிவினையைத் தாளுவோம்? கானகத்தில் கண்ணனோடு அனுபவித்த ஆனந்தத்தை மறக்கவும் இயலவில்லை. மாலையில் புழுதி படிந்த மேனியுடன் வீடு திரும்பும் கண்ணனைக் காணுமல் நாம் எவ்வாறு வாழ்வோம்?"

இவ்வாறு புலம்பிக் கொண்டு மானத்தை மறந்து, " கன்றைக் காக்கும் கண்ணு!" என்று கதறினார்கள். பொழுது புலர்ந்தது. அக்ரூரர் தமது காலைக் கடன்களை முடித்து விட்டுத் தேரில் ஏறிக் கொண்டு மதுரையை நோக்கி விரைந்தார். கோபர்களும் தமது மாட்டு வண்டிகளில் ஏறிக் கொண்டு பின் சென்றனர். கோபிகள் சிறிது தூரம் பின் சென்றனர். கண்ணன் திரும்பித் தங்களைப் பார்க்கும்பொழுதெல்லாம் ஆனந்தம் அடைந்தனர். தங்களுக்கு ஏதோ தூது சொல்வான் என்று எண்ணினர். அவர்கள் படும் பாட்டைப் பார்த்து மனம் கசிந்து கண்ணன் ஒரு சேவகனிடம் தூது அனுப்பினன். " நான் திரும்பவும் வருகிறேன் " என்று சொல்லி அவர்களைச் சமாதானம் செய்தான். தேர்மீது பறந்த கொடி தெரியும் வரையில், தேர்ப் புழுதி தெரியும் வரையில் கோபிகள் அசையாது பொம்மை

களைப் போல் நின்று கொண்டிருந்தனர். பிறகு வீடு திரும்பினர்.

நடுப்பகல் நேரத்தில் அக்ரூரரும் கண்ணனும், பலராமனும் யமுனைக் கரையை அடைந்தார்கள். கை, கால் கழுவித் தண்ணீர் அருந்தி விட்டுக் கண்ணன் தேரில் ஏறி அமர்ந்தான். பலராமனும் அவ்வாறே செய்தான். அதன்பிறகு, தன்னுடைய பகல் வழிபாடுகளை முடித்துக் கொள்ள வேண்டி, அக்ரூரர் நதிக் கரைக்குச் சென்றார். காயத்ரீ மந்திரத்தை ஜபித்துக் கொண்டு நீராடுவதற்காக ஆற்றில் இறங்கினார். நீருக்குள் மூழ்கியதும் அங்கு கண்ணனும் பலராமனும் வீற்றிருப்பதைக் கண்டார். "இதென்ன ஆச்சரியம்! இரு சிறுவர்களும் தேரில் இருக்கின்றனரே. நீருக்குள் எவ்வாறு தோன்றுகின்றனர்? தேரில் நின்று இங்கு வந்து விட்டனரா?" என்று சிந்தித்தார். நீரிலிருந்து தலையைத் தூக்கித் தேரைப் பார்த்தார். தேரில் பலராமனும், கண்ணனும் வீற்றிருக்கக் கண்டார். "தண்ணீரில் நான் கண்டது பொய்யா?" என்று திரும்பவும் மூழ்கினார். இச்சமயம் இருவரையும் நீரிலே கண்ணுற்றார். சித்தரும், சாரணரும், கந்தர்வரும் அவர் புகழைப் பாடித் தலை வணங்கி நின்றுகொண்டிருந்தனர். ஒளி வீசும் தலை ஆயிரம் திகழ வெண்ணிறம் படைத்துக் கைலயங்கிரியென ஆதிசேஷனையும் அங்கு கண்டார். ஆதிசேஷன்மீது, கார்முகில் மேனியனாய்ச் செந்தாமரைக் கண் வாய்ந்து, மஞ்சள் பட்டாடை உடுத்துச் சாந்தமான தோற்றத்துடன் வீற்றிருக்கும் விஷ்ணுவைக் கண்டார். முகத்தில் புன்சிரிப்பு, அழகான பார்வை, வசீகரம் வாய்ந்த புருவங்கள், எழில் நிறைந்த இரு காதுகளும் மூக்கும், கண்ணாடி போன்ற கன்னங்கள், சிவந்த உதடு, நீண்டு திரண்ட கைகள் நான்கு, உயர்ந்த தோள்கள், திருச்செல்வி வாழும் மார்பு, சங்கைப் போன்ற கழுத்து, இலையொத்த வயிறு, குழிந்த நாபி, பரந்த இடை, அழகிய துடை, கால், மலர்த்தாள்கள். உடலிலே, ரத்தினங்கள் பதித்தமாலையும் தோள்வளையும் கைவளையும், அரைஞாணும், பூணூலும், குண்டலமும். ஒரு கையில் தாமரை, இரண்டாவது கையில் சங்கு, மூன்றாவதில் சக்கரம், நான்காவதில் கதை. மார்பில் மறு, கழுத்தில் கௌஸ்துபம் என்ற ரத்தினமும், வனமாலையும்...இந்த வைபவத்தைப் பெரும் தவம் செய்த பக்தரான அக்ரூரர் கண்ணுற்றார். மேலும் சனந்த, நந்த, ஸனகாதிகளும், நாரதரும், பிரமனும், முக்கண்ணனும் சுற்றி நின்று புகழ் பாடிக் கொண்டிருந்தனர். ஸ்ரீ முதலிய செல்விகள் சேவை செய்து கொண்டிருந்தனர்.



அக்ரூரர் ஆனந்த பரவசமாகி மெதுவாகப் பரமனைப் புகழலானார்.

"அழிவில்லா நாராயணனே! உன்னை வணங்குகிறேன். தோன்றுவதெல்லாம் உன்னிடமிருந்தே விரிந்து பெருகியுள்ளன. சூக்ஷ்மம் மீறி நிற்கும் (உன்னை) பிரமனும் அறியான். யோகிகள் உன்னை எங்குமே காணுகின்றனர். மறையோதும் அந்தணர்கள் உன்னைப் பலபேர் வைத்து வழிபடுகின்றனர். பெரியோர் பலர் உன்னைத் தம்முள் அறிந்து உள்ளே ரமிக்கின்றனர். விஷ்ணுவும் நீயே, சிவனும் நீயே. மழை பொழிந்து பல நதிகளாக ஓடும் நீர் கடலைச் சென்று அடைவதைப் போல் எல்லா வழிபாடுகளும் பூஜையும் உன்னையே சேருகின்றன.

நீ எடுத்த அவதாரங்களை எண்ணினாலே துயர் அகன்று மனம் தெளியும். நானோ இவ்வுடலோடு பற்று வைத்துப் பிறவியில் உழலுகிறேன். பாசியால் மூடிய நீரைப் புறக்கணித்துக் கானல் நீரைத் தேடிச் செல்கிறேன். ஆனால் உன் அருளாலே உனது பாதங்களை அடைந்துளேன். என்னைக் காத்தருள்வாய்

தனது நாராயண ரூபத்தை அக்ரூரருக்குக் காண்பித்த கண்ணன் அவர் புகழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே அதை மறைத்துவிட்டான். அக்ரூரரும் தமது கடன்களை முடித்துக்கொண்டு வியப்புடன் தேரை அடைந்தார். கண்ணன் அவரிடம் "என்ன அற்புதத்தை நீரிலோ, புவியிலோ, வானிலோ கண்டீர்? உங்களைப் பார்த்தால் ஏதோ ஒன்றைக் கண்டு வியப்படைந்தவரைப் போல் தோன்றுகிறதே" என்றான்.

அதற்கு அக்ரூரர் "புவியிலோ, நீரிலோ, ஆகாயத்திலோ, என்ன அற்புதங்கள் உண்டோ, அவையெல்லாம் உன்னுள் அடங்கியுள்ளன. உன்னையே நேரில் பார்க்கும் எனக்கு இனி பார்க்க வேண்டிய அற்புதம் என்ன இருக்கிறது?" என்று கேட்டார்.

பொழுது போய்க் கதிரவன் மறையும் மாலையில் அவர்கள் மதுரா நகரை அடைந்தார்கள். கண்டவர் கண்களைக் கண்ணனும் பலராமனும் கவர்ந்தனர். நிற்க, நந்தனும் அவனுடைய பரிவாரங்களும் குறுக்கு வழியில் மதுரையை அடைந்து ஊருக்கு அருகிலிருந்த ஒரு சோலையில் காத்திருந்தனர். கண்ணனும் அவர்கள் இருந்தஇடத்தை அடைந்தான். "நீங்கள் நகருக்கு உள்ளே செல்லுங்கள். நாங்கள் சிறிதுநேரம் இங்கு களைப்பாறுகிறோம்" என்று அக்ரூரரிடம் உரைத்தான் கண்ணன். "உங்கள் இருவரையும் இங்கு விட்டுவிட்டு நான் எவ்விதம் நகருக்குள் செல்வேன்? என்னுடன் வாருங்கள், என் வீட்டில் அடி வைக்க வேண்டும். உங்கள் இருவடிகளைத் தண்ணீரால் கழுவி நான் கடைத்தேற வேண்டும்" என்றார் அக்ரூரர். "கம்ஸனைக் கொன்றபின் உங்கள் வீட்டுக்கு வருகிறேன்" என்றான் கண்ணன்.

அக்ரூரர் மனம் தளர்ந்து துயர்மிகுந்து நகரை அடைந்தார். நடந்ததைக் கம்ஸனிடம் கூறி விட்டுத் தம் வீடு சென்றார்.

**ம**றுநாள் பிற்பகல் நேரத்தில் கண்ணனும் பலராமனும் மதுரா நகருக்குள் நுழைந்தனர். நகர வாயிலின் அழகைக் கண்டு வியந்தனர். தங்கச் சாளரங்கள் பதித்த வீடுகளும், செப்பாலும் பித்தளையாலும் செய்த தானியக் குதிர்களும், வெவ்வேறு தொழில் செய்வோர் விடுதிகளும், வீடுகளுக்கு முன்பாகத்திலிருக்கும் மரச் சவுக்கண்டிகளிலிருந்து அகவும் மயிலும் புறாவும், பல ரத்தினங்கள் இழைத்த தளங்களும், நீர் நனைந்து புழுதியற்றிருக்கும் வீதிகளும் அந்த நகருக்கு அழகைத் தந்தன. வீடுகளின் வாயிலில் தயிராலும் சந்தனத்தாலும் அலங்கரிக்கப்பட்ட நீர்க்குடங்கள் இருந்தன. மேல் பாகத்தில் விளக்கு வரிசைகளும், கமுகும் வாழையும் வைத்து அலங்காரம் செய்திருந்தனர். கொடிகளும் கட்டியிருந்தனர்.

வசுதேவன் மைந்தரைக் காண நகரத்துப் பெண்கள் திரளாகக் கூடினர். மாடி மீது ஏறி நின்றனர். இவர்களும் கோபிகளைப் போலவே புரியும் செயலை மறந்து கண்ணனைக் காண ஓடி வந்தார்கள். மத யானையென நடந்து வரும் கண்ணன் அவர் கண்களைக் குளிர வைத்தான். அவனுடைய பார்வை என்ற அமுதைப் பருகினர். பறந்து சென்ற மனத்தினால் ஆலிங்கனம் செய்து கொண்டனர். அவ்விருவர் மீதும் மலர்மாரி சொரிந்தனர்.

அந்தணர்கள் முன்வந்து தயிராலும் நெல்லாலும் ஆசி கூறினார்கள். மற்றவர்கள் மாலைகளைத் தந்தனர். இன்பண்டங்களை வழங்கினர். கால்களைக் கழுவினர். "ஆயர் மங்கையர், இத்திருவுருவை எப்பொழுதும் கண்ணுறவே" என்று நகரத்துப் பெண்கள் பேசிக் கொண்டார்கள்.

வழியிலே கண்ணன் ஒரு வண்ணானைக் கண்டான். அவன் துணிகளுக்குச் சாயம் ஏற்றும் தொழிலையும் செய்பவன். "எங்கள் இருவருக்கும் தகுதியான துணிகளை வழங்குவாய். அதனால் உனக்கு நன்மை உண்டாகும்" என்றான் கண்ணன். ஆனால் அந்த வண்ணான் கம்ஸனுடைய சேவகன். செருக்கு மிகுந்த சிறியோன். "அரசருக்குரிய நல்லாடை உடுத்துத்தான் மலையிலும் காட்டிலும் நீங்கள் திரிவது வழக்கமோ? உளறுகிறீர்கள். அரசன் உங்களைச் சிறையில் இடுவான்" என்றனன். கண்ணன் கோபம் கொண்டான். தன் கை விரலால் அவன் தலையைக் கிள்ளி விட்டான். வேண்டிய துணிகளை எடுத்துக் கண்ணனும் பலராமனும் அணிந்து கொண்டார்கள். மிகுந்தவற்றைத் தம்முடன் வந்த இடையர்களுக்கு அளித்தனர்.

சிறிது தூரம் சென்றதும், நெசவுத் தொழிலாளி ஒருவன் அவர்களிடம் அன்பு மிகுந்து அழகாய்ப் பல வர்ணங்கள் பொருந்திய ஆடைகளை அவர்களுக்கு அளித்தான். கண்ணன் அவனுக்கு 'ஸாரூப்யம்' (தன்னைப் போன்ற உருவம்) செல்வம், திறம், செல்வாக்கு, கடவுள் நினைவு, எல்லாம் ஒருங்கே கொடுத்தான்

# சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு

காங்கிரஸின் இடதுசாரிப் போக்கைத் தடுத்து நிறுத்தி நாட்டையும் நாட்டு மக்களையும் சுபிட்சப் பாதையில் அழைத்துச் செல்லுவதற்காகப் பிறந்துள்ள புதுக் கட்சியான 'சுதந்திரக் கட்சி'யை வரவேற்கிறேன். அறிவின் கோட்டையும் அனுபவத்தின் சிகரமுமான முதுபெரும் அரசியல்வாதி ராஜாஜியின் தலைமையில் இந்தக் கட்சி முன்னேறும் என்பதில் துளிக்கூடச் சந்தேகமில்லை.

அகமதாபாத்
4—7—59
வி. தியாகராஜன்

✽

நாட்டில் சிலர் கூட்டுறவுப் பண்ணை என்கிறார்கள். சிலர் கூட்டுப் பண்ணை என்கிறார்கள். சொற்கள் விளைகின்றன, நெல் அல்ல. விலைகளோ வானத்தை நோக்கி வளர்கின்றன.

உணவுத் தட்டுப்பாடு மட்டுமல்ல, உணர்வே தட்டுப்பட்டுத் திக்குமுக்காடுகிறது.

இதற்காகவா தேச விடுதலைப் போரில் பட்டினி கிடந்தார்கள், தடியடி பட்டார்கள், சிறைக்கோட்டத்தில் தவம் கிடந்தார்கள், நாடுகடத்தப் பெற்றார்கள், தூக்குமேடை ஏறி இன்னுயிரைத் தந்தார்கள்?

சுதந்திரக் கட்சியைத் துவக்குமுன் ராஜாஜியின் பண்பட்ட உள்ளம் என்ன பாடுபட்டிருக்குமோ? இறைவனே அறிவான்!

அவர் தீர்க்கதரிசி. போற்றுதலைக் கண்டு புளகாங்கிதம் அடையவோ, தூற்றுதலைக் கண்டு துவளவோ தெரியாத மாவீரர். எதிர்ப்பிலே வளர்ந்த தீரர். கடமை கடலினும் பெரிது என உணர்ந்து செயலில் குதித்துவிட்டார்.

வேதாரண்யம் மீண்டும், வெற்றி உறுதியே.

வெல்க சுதந்திரம்! ஓங்குக சுதந்திரக் கட்சி.

திருவாவடுதுறை
2—7—59
வீரம்

✽

நம் தலைவர் ராஜாஜி அவர்கள் ஆரம்பித்துள்ள சுதந்திரக் கட்சி நமக்கு இந்த நேரத்தில் மிக, மிக முக்கியம். கடமை, கட்டுப்பாடு, கண்ணியம் என்பனவற்றை மனத்தில் வைத்து, நாட்டின் சுதந்திர தாகத்தைத் தீர்க்க, காங்கிரசின் கண்மூடித்தனத்தைப் போக்கச் சுதந்திரக் கட்சியை வளர்ப்போம்.

நெய்வேலி
30-6.59
ஜெயராதா

✽

தற்சமயம் காங்கிரஸ் கட்சியின் நிலைமை 'பசுத் தோல் போர்த்த புலியாக' இருக்கின்றது. ஒரு காலத்தில் காங்கிரஸ் கட்சியைப் பலவீனப்படுத்தவும் முடிவாக நசுக்கவும் முயன்ற அநேகர் இப்பொழுது தூய கதரணிந்து காங்கிரஸ் கட்சியில் இரண்டறக் கலந்து விட்டனர். உடை மாறினால் போதுமா? உள்ளம் மாற வேண்டாமா? நாட்டின் நலன் சரியான முறையில் செப்பனிடப்பட வேண்டுமானால் பலமுள்ள ஓர் எதிர்க்கட்சி தேவைப்படுகிறது.

அறிஞர்களில் ஒருவரும் அரசியல் மேதையுமான திரு ராஜகோபாலாச்சாரியாரவர்களின் முதிர்ந்த கருத்தின்மீது உருவான "சுதந்திரக் கட்சியை" நான் வரவேற்கிறேன்.

ஒண்டிப்புதூர்
2—7—59
ஏ. ஜி. ஞானசிகாமணி

✽

நமது மத்திய அரசாங்கம் ஏற்படுத்தியுள்ள தேசிய அபிவிருத்தி (N. E. S.)த் திட்டத்தின் பிற்போக்கு காரணமாக எவ்வளவோ வீண் செலவாகிறது.

இத்தகைய வீண் செலவுகளை ஆராய்ந்து உண்மைகளை வெளியிடுவதில் சுதந்திரக் கட்சி மக்களுக்கு உதவி புரியுமென்று நம்புகிறேன்.

ராம்நகரம் (மைசூர்)
30—6—59
டி. ஆர். துவாரகாநாத்

✽

காங்கிரஸ் அரசாங்கம் தினம் ஒரு அறிக்கைவிட்டு சோஷலிஸம் வந்துவிட்டது, நாடு முன்னுக்கு வந்துவிட்டது என்று கூறுகிறார்கள். நாளை நம் சொத்து, வீடு வாசல், நிலம் போன்றவைகள் என்ன நிலையில் இருக்கும் என்ற நம்பிக்கை கிராமங்களில் மறைந்துகொண்டு வருகிறது. உணவுப் பஞ்சம் நீங்கவில்லை. நியாய விலைக் கடைகள் திறக்கிறார்கள். இந்த லட்சணத்தில் கூட்டுப் பண்ணை முறை கொண்டு வந்தால் அது வெற்றி பெறாதென்பது உறுதி. இவற்றையெல்லாம் சிந்தித்து, பணிபுரிய முன்வந்திருக்கும் சுதந்திரக் கட்சி வாழ்க.

மைலம்
22—6—59
ஆர். நடராஜன்

✽

சுதந்திரம் நமது உரிமை. எண்ணம் போல் ஆட்சிசெய்து, அந்நிய ஆட்சியார் கூட விட்டுவைத்த கொஞ்சநஞ்சம் உரிமைகளையும் அடியோடு பறிக்க முயலும் இன்றைய ஆட்சியினைத் தடுத்து, தனி மனிதனின் சுதந்திரங்களைக் காப்பாற்ற, அண்ணல் காந்தியின் அரும்பெரும் ஆசியுடையோன், முக்காலம் அறியும் அறிவின் சிகரம், தன்னலம் காணாப் பிறர் நலம் போற்றும் உத்தமன், உலகமேதை ராஜாஜியின் ஆசியுடன் ஆரம்பமாகியுள்ள சுதந்திரக்கட்சி நீடூழி வாழப் பிரார்த்திக்கின்றேன்.

மன்னார்கோவில்
21—6—59
ஜி. நம்பி

# பம்பாய் கண்ட குதூகலம்

எஸ்.வி.எஸ்.

சென்ற வாரம் ராஜாஜி பம்பாய்க்கு விஜயம்செய்து புது சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை எடுத்துரைத்து மக்களின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். பம்பாய் மக்களின் நாடி உற்சாகமான வரவேற்பு அளிக்கத் தயார் என்றே தெரிவித்தது.

பம்பாய் நகரத்தின் சரித்திரத்தை எடுத்துக்கொண்டால், பாரத நாட்டுச் சுதந்திரப் போராட்டத்தில் முக்கியமான முன்னேற்றம் காண வேண்டிய சந்தர்ப்பங்களில் எல்லாம் பம்பாய் நகர மக்கள் முன்னணியில் நின்று நல்ல கருத்துக்களுக்கு அமோக வரவேற்பு அளித்து வந்திருக்கிறார்கள் என்பதைக்காணலாம்.

பால கங்காதர திலகர் சுதந்திரப் போராட்டத்தில் தீவிரப் புரட்சி கொள்கையை நுழைக்க முயன்றபோது பம்பாய் மக்கள் பூரண ஆதரவு கொடுத்தனர். பம்பாய் மக்களைப் பின்பற்றித் தேச மக்களும் அவ்வழியில் செல்லத் தொடங்கினர்.

திலகருக்குப் பின் காந்தி மகான், அஹிம்சைப் போராட்டக் கொள்கையைக் கொண்டுவந்தார். சத்தியத்தின் அடிப்படையில் ஒத்துழையாமை இயக்கம் நடத்த வேண்டும் என்றார். அப்போதும் பம்பாய் மக்கள் தீவிர ஆதரவளித்தனர். தேசமும் காந்தி மகானைப் பின்பற்றத் தொடங்கியது.

இப்பொழுது மற்றொரு முக்கியமான கட்டம் நமது தேச சரித்திரத்தில் தோன்றியுள்ளது.

விவசாயத்தில் இருப்பவர்கள் சுதந்திரமாகத் தொழில் செய்து வாழ விரும்புகின்றனரா? அல்லது சர்க்கார் வைத்த கூலியாட்களாக வாழ விரும்புகின்றனரா என்பதுதான் இன்று எழுந்துள்ள பிரச்னை.

தாங்கள் இஷ்டப்பட்ட வியாபாரத்தைச் செய்துகொண்டு சுதந்திரமாக வாழ்ந்து வருபவர்கள், தங்கள் வியாபாரத்தைச் சர்க்காருக்குக் கொடுத்துவிட்டுச் சும்மா இருக்கப் போகிறார்களா? அல்லது தங்கள் உரிமையை நிலைநாட்டப் போகிறார்களா என்பதே இன்றையப் பிரச்னை.

அப்படியே தொழில்கள் நடத்துவோர் சுதந்திரமாகத் தங்கள் தொழில்களை நடத்த விரும்புகிறார்களா? அல்லது சர்க்காருக்கு பறி கொடுத்து விட்டுச் சும்மா வேலையின்றி யிருக்க விரும்புகிறார்களா? —இவைதான் இன்றுள்ள பிரச்னை.

இவற்றுக்கெல்லாம் பம்பாய் மக்கள் 'நாங்கள் சுதந்திரமாகவே வாழ விரும்புகிறோம்' என்று சந்தேகத்துக்கு இடமின்றி பதிலளித்து சுதந்திரக் கட்சிக்கு அமோகமான ஆதரவைத் தெரிவித்துவிட்டார்கள்.

## அதிசய வேண்டுகோள்

பம்பாயில் இது மழைக் காலம். மழை என்றால், சாதாரண மழையல்ல. 'கொட்டு' 'கொட்டு' என்று கொட்டிவிடும். இருபத்து நான்கு மணி நேரமும் வானம் மூடியே இருக்கும். ஆகவே இந்தக் காலத்தில் வெட்டவெளியான பிரதேசத்தில் கூட்டம் போட முடியாது. கட்டடங்களுக்குள்தான் ராஜாஜியின் கூட்டத்தை ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. ஆனாலும் ராஜாஜியின் பேச்சைக் கட்டடத்துக்குள் ஏற்பாடு செய்துவிட்டால் எல்லா மக்களும் கேட்க முடியாதே என்று இரண்டு நாட்கள் இரண்டு வெவ்வேறான இடங்களில் பம்பாய் சுதந்திரக் கட்சியினர் ஏற்பாடு செய்திருந்தனர். அதுமட்டுமல்ல; ஞாயிற்றுக்கிழமை கூட்டத்தில் கலந்துகொண்டு, ராஜாஜியின் பேச்சைக் கேட்டவர்களையெல்லாம், 'தயவுசெய்து மறு நாள் நடக்கவிருக்கும் கூட்டத்துக்கு வராதீர்கள். மற்றவர்கள் ராஜாஜியின் பேச்சைக் கேட்க வாய்ப்பளியுங்கள்' என்று திரு மஸானி பகிரங்கமாகவேகேட்டுக்கொண்டார்! 'கூட்டத்துக்கு வராதீர்கள்' என்று கேட்டுக்கொள்வது வேடிக்கையாக இல்லையா?

முதல் கூட்டம் ஞாயிற்றுக்கிழமை 5ம் தேதி மாலை, மாதுங்கா பகுதியிலுள்ள கன்னட உயர்நிலைப் பள்ளிக்கூடத்தில் நடைபெற்றது. கூட்டம் ஆரம்பிப்பதற்கு ஒன்றரை மணி நேரத்துக்கு முன்பே மண்டபம் நிறைந்துவிட்டது. அது ஒரு பெரிய காரியமில்லை. ஆனால் அந்த மண்டபத்துக்கு வெளியில் ஆயிரக் கணக்கில் மக்கள் தெருவெல்லாம் அடைத்துக்கொண்டு நின்று ராஜாஜியின் பேச்சைக் கேட்டதை என்னவென்று சொல்வது!

ராஜாஜி சொன்ன விஷயங்களையெல்லாம் ஆங்காங்கு கரகோஷம் செய்து பூரணமாக ஆதரித்ததைதான் என்னவென்று சொல்வது! இவையெல்லாம் சந்தேகத்துக்கு இடமின்றி, சுதந்திரக் கட்சிக்கு மக்கள் பூரண ஆதரவு அளிக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சியே அல்லவா?

## கட்சியை நிரப்புங்கள்!

“இந்த மண்டபம் முழுதும் மக்கள் நிரம்பியிருக்கிறார்கள் மண்டபம் மட்டுமல்ல; வெளியிலும் பல அசௌகரியங்களோடு ஏராளமான மக்கள் நிரம்பியிருக்கிறார்கள். அதேபோல் இந்தச் சுதந்திரக் கட்சியிலும் நீங்கள் எல்லோரும் அங்கத்தினர்களாகச் சேர்ந்து, கட்சியை நிரப்ப வேண்டும்” என்று ராஜாஜி எடுத்த

எடுப்பிலேயே குறிப்பிட்டார். அதற்கு எழுந்த கரகோஷம், 'நாங்கள் சுதந்திரக் கட்சியில் சேரத் தீர்மானித்துவிட்டோம்,' என்று ஏகமனதாக அறிவிப்பதாகத்தான் இருந்தது.

அன்றையக் கூட்டத்தில் சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு என். ஜி. ரங்காவும் பேசினார். என். ஜி. ரங்கா விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். தாமே ஒரு விவசாயி. அவர் நேற்றுவரை காங்கிரஸில் இருந்தவர். புது தில்லி பார்லிமெண்டரி காங்கிரஸ் கட்சியின் காரியதரிசியாகவும் இருந்தார். சுயநலம், பதவியாசை முதலிய எவ்வித அப்பழுக்கும் இல்லாத சுத்தமான தேசபக்தர். காங்கிரஸின் நாகபுரி கொள்கைகள், நாட்டின் விவசாயத்தைக் கெடுத்து, விவசாய மக்களை அழித்து தேசத்தைக் கம்யூனிஸ்ட் ஆட்சிக்குக் கொண்டுவிடும் என்று தீவிரமாக உணர்ந்ததால், கொள்கையின் காரணமாக, காங்கிரஸ் பார்லிமெண்டரி காரியதரிசி பதவியை ராஜிநாமாச் செய்தவர்.

ஆரம்ப நாட்களிலிருந்தே விவசாயிகளின் நலன்களைப் பாதுகாக்கும் தலைவராக இருந்து வந்திருக்கிறார்.

## ரங்காவின் குரல்

அவர் அன்றையக் கூட்டத்தில், ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். நாட்டிலுள்ள விவசாயிகள், பிறரிடம் கைகட்டி நிற்காமல், பிறர் தயவை நாடாமல், தங்களுக்குத் தாங்களே வேலையை நியமித்துக் கொண்டு சுதந்திரமாக வாழ்கிறார்கள். அப்படியேதான் கிராமத்திலுள்ள மற்றத் தொழிலாளர்களும் சர்க்காரிடம் எந்தத் தயவையும் எதிர்பார்ப்பதில்லை. யாரிடமும் கை ஏந்தி நிற்பதில்லை. சுதந்திரமாகத் தொழில் புரிந்து மானமாக வாழ்ந்து வருகிறார்கள். காங்கிரஸின் சோஷலிஸ பாணி திட்டம் இந்தச் சுதந்திரக் குடிமக்களை அடிமைத்தனத்தில் உய்த்துவிட முயன்று வருகிறது. இந்த ஆபத்தான நிலையிலிருந்து தேசத்தைக் காப்பாற்ற ராஜாஜி இந்தக் கட்சியைத் துவக்கியிருக்கிறார். கீதையில் கண்ணன் தர்மத்தை நிலை நிறுத்துவதற்காக அவ்வப்போது அவதாரம் செய்வதாகக் கூறியிருக்கிறார். அதேபோல், ராஜாஜியும் தேசத்தைப் பலாத்கார ஆட்சி முறையிலிருந்து காப்பாற்ற அரசியலுக்கு மீண்டும் வந்து சுதந்திரக் கட்சியைத் துவக்கி நடத்திவருகிறார். ராஜாஜி ஒரு அவதாரமே எடுத்திருக்கிறார் என்று சொன்னார்.

திரு ரங்கா பேசியபின் ராஜாஜி பேசத் தொடங்கியபோது "நான் அவதாரம் எடுத்திருப்பது ஒருபுறம் இருக்கட்டும். நமது சாஸ்திரங்கள் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஆண்டவன் இருக்கிறான் என்று கூறுகின்றன. அதனால் நீங்கள் எல்லாருமே அவதார புருஷர்கள். நீங்கள் எல்லோரும் சேர்ந்து சுதந்திரக் கட்சிக்குப் பலமளித்துத் தேசத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்றார்.

ராஜாஜி அன்றையக் கூட்டத்தில் எத்தனையோ விஷயங்களைக் குறிப்பிட்டார். அவையெல்லாவற்றையும் இங்கு குறிப்பிடுவது என்பது சாத்தியமல்ல. ஒன்றிரண்டைக் குறிப்பிடாமலும் இருக்க முடியாது!

## ஒரு கதை

சுதந்திரக் கட்சியினர், காங்கிரஸ் செய்யும் காரியங்களைக் கண்டிக்கிறார்களே தவிர, இவர்கள் உருப்படியாக என்ன திட்டம் வைத்திருக்கிறார்கள் என்று சிலர் கேட்கிறார்கள் அல்லவா?

இதற்கு ராஜாஜி அன்றையக் கூட்டத்தில் பின்வருமாறு பதில் அளித்தார்:

"நாம் அரசாங்கம் எடுத்து நடத்தக் கூடிய நிலைமை நெருங்கி வரும்போது உருப்படியான திட்டம் பற்றி கூறுவோம். அரசாங்கப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் எந்தப் பெரிய கட்சியும் திட்டம் அமைக்காமல் இருக்க முடியாது. அப்போது சுதந்திரக் கட்சி திட்டமின்றி வேலை செய்தால், காங்கிரஸ் இந்தக் கட்சியை நீக்கிவிட்டு ஆட்சியை எடுத்துக் கொள்ளலாம். ஆனால் நமக்கு உருப்படியான திட்டம் இல்லாமற் போகவில்லை. இப்பொழுது நாம் சொல்லும் கண்டனங்களுக்குள் எல்லாம் உருப்படியான திட்டம் இருக்கவே செய்கிறது" என்றார். இந்த நுட்பமான உண்மையைச் சொன்னாரோ, இல்லையோ, ஜனங்கள் அதைக் கேட்டு மெய்சிலிர்த்துப் போயினர்.

ராஜாஜியின் பிரசங்கங்கள் அன்றிவேறு எங்கு இவ்வளவு நுட்பமான உண்மைகள் கேட்க முடியும் என்று வியந்தனர்!

இதைச் சொல்லி விட்டு அதை விளக்க ஒரு கதையும் சொன்னார்:

"ஒருவன் வீட்டுக்குள் புலி வந்துவிட்டது. புலியைச் சுடுவதற்காகத் துப்பாக்கியை எடுத்துக் குறி பார்த்தான். புலி அவனைப் பார்த்து, 'உன்னுடைய எண்ணம்தான் என்ன? உன்னிடம் உருப்படியான திட்டம் வேறு இருக்கிறதா?' என்று கேட்டதாம். இதைப் போல்தான் இருக்கிறது காங்கிரஸ், சுதந்திரக் கட்சியைத் திட்டம் இருக்கிறதா என்று கேட்பதும்" என்றார். அப்பொழுது 'கொல்' என்று சபையில் எழுந்த சிரிப்பு வான முகட்டையே எட்டி விட்டது.

## மோடியின் வருகை

மறு நாள் திங்கட்கிழமையன்று கூட்டத்துக்குப் பம்பாய் பிரமுகர் திரு எச். பி. மோடி தலைமை வகித்தார். திரு மோடி பம்பாய் கவர்னராகவும், உத்தரப் பிரதேச கவர்னராகவும் இன்னும் பல பொறுப்புவாய்ந்த பதவிகளிலும் இருந்து பாரத மக்களின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமானவர். அவர் சுதந்திரக் கட்சியின் கௌரவ பொக்கிஷதாரராக இருக்க ஒப்புக் கொண்டிருக்கிறார் என்று முதல் நாள் மாலையே அறிவிக்கப்பட்டிருந்தது.

1



2



3

பம்பாயில் சுதந்திரக் கட்சியைத் துவக்கி வைக்கச் சென்ற ராஜாஜிக்கு பம்பாய் மக்கள் அமோகமான வரவேற்பு அளித்து மகிழ்ந்தனர். அந்தக் காட்சிகளை இங்கே இவ்விரு பக்கங்களிலும் காணலாம். 1. பம்பாயில் மாதுங்கா பகுதியிலுள்ள தமிழர்கள், ஆந்திரர்கள், கன்னடியர்கள், நடத்தும் பல்வேறு சங்கங்கள் (35) சார்பாக ராஜாஜிக்கு மிகப்பெரிய வரவேற்பு போதார் கல்லூரியில் அளிக்கப்பட்டது. ராஜாஜிக்கு வலதுபுறம் இருப்பவர்தான் திரு டி. வி. ராமானுஜம். 2. ஜூலை 7ந் தேதி காலை உள்நாட்டு வெளிநாட்டுப் பத்திரிகை





நிருபர்கள் சுமார் ஐம்பதுபேர் ராஜாஜியைப் பேட்டி கண்டனர். 3. பம்பாய் சுந்தரிபாய்மண்டபத்துக்கு வெளியே கூடிநின்று ராஜாஜியின் பிரசங்கத்தைக் கேட்ட கூட்டத்தின் ஒரு பகுதி. ஜன்னலின் மேல் எல்லாம் ஏறி நின்று கேட்பதைப் பார்க்கலாம். 4. ஜூலை 5ந் தேதி பம்பாய் ஸையான் பகுதியில் கன்னட பள்ளிக்கூடத்து பெரிய ஹாலில் நடைபெற்ற கூட்டத்துக்கு, உள்ளே இடம் போதாமல் வெளியே நின்று கேட்ட பெருங் கூட்டத்தின் ஒரு பகுதி. 5. கன்னட பள்ளிக்கூட மேடையின் தோற்றம். ராஜாஜிக்கு இடது புறம் மஸானி, ரங்கா, ராஜா ஹத்தீஸிங் முதலியவர்கள் இருப்பதைக் காணலாம். 6. சுந்தரிபாய் ஹாலின் மேடைத் தோற்றம். ராஜாஜிக்கு இடது புறம் அமர்ந்திருப்பவர்தான் திரு எச். பி. மோடி.

ராஜாஜி வருவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன் மேடைக்கு வந்து விட்டார் அவர்.

மேடைக்கு வந்தாரோ இல்லையோ, சபையில் பலத்த கரகோஷம் எழுந்தது. அவர் சுதந்திரக் கட்சியில் சேர்ந்தது மக்களுக்கு அவ்வளவு குதூகலத்தை அளித்தது. அதேபோல், ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்கள் மேடைக்கு வந்த போதும் பலத்த சந்தோஷ ஆரவாரம் சபையில் எழுந்தது.

அன்றும் கூட்டம் சொல்லி முடியாது. தெருவில், மண்டபத்தின் ஜன்னல்களில் எங்கெல்லாம் இடம் கிடைக்குமோ அங்கெல்லாம் மக்கள் தொத்தி நின்று கேட்டார்கள். வெளியில் தெருவெல்லாம் மக்கள் நின்று கடைசிவரையில் கேட்டுக் கொண்டிருந்தார்கள்!

திரு மோடி தமது தலைமையுரையில், "இரண்டு நாள் கூட்டங்களுக்கு வந்த பொதுமக்களின் எண்ணிக்கையே மக்கள் காங்கிரஸ் ஆட்சியில் எவ்வளவு ஏமாற்றம் அடைந்திருக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சி; புதுக் கட்சி ஜனநாயகக் கொள்கைகளுக்கும் நீதிக்கும் நேர்மைக்கும் யோக்கியமான திறமை பெற்ற ஆட்சிக்கும் பாடுபடும்" என்றார்.

செவ்வாய்க் கிழமை கூட்டத்தில் ராஜாஜி, "நமக்குக் கம்யூனிஸ்ட்டுகளைப் பிடிக்கவில்லை என்றால் அவர்கள் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை என்று பொருள் அல்ல. அவர்கள் கொள்கைகள் பிடிக்கவில்லை; திட்டங்கள் பிடிக்கவில்லை என்பதுதான் பொருள். ஆகவே, கம்யூனிஸ்ட் கொள்கைகளை காங்கிரஸ் ஏற்றுக் கொண்டு விட்டால் அப்போது பிடித்து விடுமா? பிடிக்காது. நமக்குக் கொள்கைகள்மேல்தான் வெறுப்பு. கம்யூனிஸ்ட் கொள்கைகளைகாங்கிரஸ்ஏற்றுக்கொண்டு விட்டவுடன் அதை விட்டு விடவேண்டியதுதான். அதனால்தான் சுதந்திரக் கட்சி தோன்றி யிருக்கிறது" என்று மிக விரிவாக விளக்கினார்.



## தென்னகத்தின் வந்தனம்

பம்பாயிலுள்ள தமிழ், தெலுங்கு, கன்னட சங்கங்கள் ராஜாஜிக்குத் தங்கள் உளம் கனிந்த அன்பையும் நன்றியையும் தெரிவித்துக் கொண்டார்கள். சுமார் 35 சங்கங்கள் மலர்மாலைகள் அணிவித்தும், சால்வைகள் போர்த்தியும் தங்கள் வந்தனங்களைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

இந்த அரிய விழாவுக்குச் சூத்திரதாரியாக இருந்து சிறப்பாக நடத்தி வைத்தவர் ஸ்ரீ டி. வி. ராமானுஜம் அவர்கள். அவர் செயல் திறமையைக் கண்டு அன்று ராஜாஜியே வியந்துபோனார்.

அந்தக் கூட்டத்தில் ராஜாஜி தென்னகத்திலிருந்து பம்பாய் வந்து பம்பாய் மக்களிடம் அன்புடனும் அனுசரணையுடனும் வாழ்ந்து பம்பாய் மக்களின் அன்பைப் பெற்ற தென்னக மக்களை வாழ்த்தினார். அதேபோல் தென்னக மக்களிடம் அன்போடு நடந்து கொள்ளும் பம்பாய் மக்களையும் வாழ்த்தினார்.

"எல்லாவற்றுக்கும்மேலாகத் தென்னக மக்கள் நல்ல நகைச்சுவை மிக்கவர்கள். இது தென்னாட்டுப் பண்பு. இதை நன்றாகப் போற்றிக் காப்பாற்றுங்கள். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்றார் திருவள்ளுவர். அதையே காப்பாற்றி வாருங்கள். இடுக்கண் எவ்வளவுதான் கடுமையாக இருந்தாலும் அது ஒரு மனிதனின் ஆயுட்காலத்துக்கு மேல் நீடிக்காது. அதனால் கஷ்டத்தைக் கண்டு கலங்காமல் சிரியுங்கள்" என்றார்.

இன்னும் இதுபோல் எவ்வளவோ அறிவுரைகள் கூறினார். அவற்றையெல்லாம் மக்கள் மிக ஆர்வத்தோடும் குதூகலத்தோடும் கேட்டார்கள்.

மொத்தத்தில் ராஜாஜியின் பம்பாய் விஜயத்தினால் பம்பாய் மக்கள் புத்துணர்ச்சியும் புது உற்சாகமும் விழிப்பும் பெற்றிருக்கிறார்கள்.

அடுத்த ஆகஸ்ட்டு 1, 2 தேதிகளில் பல ராஜ்யங்களிலிருந்தும் பிரதிநிதிகள் வரவழைக்கப்பட்டு சுதந்திரக் கட்சியின் பூர்வாங்கக் கூட்டம் நடைபெறும். அந்தக் கூட்டத்தில் சுதந்திரக் கட்சியின் திட்டங்கள் பற்றி முடிவு எடுக்கப்படும். அதைப் பாரதநாட்டு மக்கள் மிக ஆவலுடன் எதிர்நோக்கியிருக்கிறார்கள்.









# சாம்ப்பியன்

(ரெஜிஸ்டர்ட்)

மை கசிந்தும், தடைப்பட்டும் எழுதி காகிதத்தை ஊழலாக்கும் பேனாவினால் எழுதுவதே ஒரு கடினமான சோதனைதான். ஆனால், சாம்ப்பியன் பேனா அதற்கோர் விதிவிலக்கு. நுட்பம் வாய்ந்த அதிநூதன உத்திகளுக்கேற்பத் தயாரிக்கப்பட்டுள்ள அப் பேனாவினால் லாகவமாக எழுதும் இன்பமே இன்பம்! எவ்வெவருக்கும் கிட்டக்கூடிய விலைகளில், நானாவிதமான தினுசுகளிலும் வர்ணங்களிலும் கிடைக்கிறது.





குஜராத்
இண்டஸ்ட்ரீஸ்
ப்ரைவேட்
லிமிடெட்

லால்ஜீ மான்ஸிங்க் பில்டிங்.,
லோகார் சால், பம்பாய்-2.

G1.2

---

# வேங்கையின் மைந்தன்

ஐந்தாம் அத்தியாயம்

## நிலவிலே ஒரு பொற்சிலை

இள மாம்பிஞ்சை இரு கூறாகப் பிளந்தெடுத்தாற் போன்றகண்கள் அருள்மொழியின் கண்கள். அந்த மாவடுக் கண்கள் இப்போது பெருஞ் சினத்தால் சிவப்பேறியிருந்தன. கொடும்பாளூர் மேல்மாடக் கூடத்திலிருந்து புறப்பட்டு, சூறாவளியைப் போல் கீழே இறங்கி வந்தவள், நேரே அந்தப்புரத்துக்குள் நுழையாமல் ஒரு கணம் தாமதித்தாள்.

வழக்கமாக உணர்ச்சி வயப்படாதவள் அருள்மொழி. ஆனால், ஒரு சிறிய நிகழ்ச்சிக்காக இன்று அவள் தன் மனத்தைப் படாதபாடு படுத்திக் கொண்டாள். கொடும்பாளூர் மதுராந்தக வேளாரை அவளால் மன்னிக்கவே முடியவில்லை. 'முதன்முறையாகப் போர்க்களம் செல்வதற்கு அநுமதி கேட்கிறார் கொடும்பாளூர் இளவரசர். என் தந்தையாரிடம் அவர் கேட்கும் போது, பெரிய வேளார் ஏன் குறுக்கே புகுந்து இப்படி ஒரு அவச்சொல் சொல்ல வேண்டும்? 'வெற்றியோடு திரும்பி வா', என்று சொன்னால் இவருடைய வீரத்துக்கு இழுக்கு வந்து விடுமா, என்ன? இளவரசர் திரும்பி வராவிட்டால் இவருக்குப் பின் இந்தக்கொடும்பாளூர் முடியை வேறு யார் தாங்குவார்களாம்?' — இப்படியெல்லாம் எண்ணித் தன்னை விரட்டிக் கொண்ட அருள்மொழி, 'இந்தக் கொடும்பாளூர்க்காரர்களே மூர்க்கத்தனமான போர் வெறியர்கள்!' என்று ஒரு முடிவுக்கு வந்தாள்.

மாவடுக் கண்கள் கோவைக் கனிகளாக மாறிவிடவே, அருள்மொழிக்கு அந்தக் கண்



அகிலன்

களோடு அந்தப்புரத்துக்குள் நுழையப் பிடிக்கவில்லை. அன்னையாரோ, அத்தையாரோ காரணம் கேட்பார்கள். தங்கை அம்மங்கையிடம் அகப் பட்டுக் கொண்டால் அப்புறம் மீளவே முடியாது. ஆயிரமாயிரம் கேள்விகள் கேட்டு, மேலே ஆண்கள் பேசிக்கொண்ட அரசியல் ரகசியங் களையெல்லாம் கூட அம்பலத்துக்குக் கொண்டு வந்துவிடுவாள். ஆகவே அருள்மொழி மெதுவாக அரண்மனைப் பூங்காவுக்குள் புகுந்தாள்.

வானத்தில் பொற் தகடாக மிதந்த வளர்பிறை நிலா, தன்னையே உருக்கி வார்த்துக் கொண்டு, தோட்டத்துக்கு வந்தவுடன் குளிர் அமுத மாக மாறிப் பொசிந்தது. மலர்களின் கதம்ப மணத்தைச் சுமந்ததால் மென்காற்று மயங்கிக் கிறங்கிற்று. அருள்மொழி அந்தக் கனவு உலகத்துக் குள் சுய நினைவிழந்து மெல்ல நடந்து வந்தாள். பூங்காவின் மைய மண்டபத்துத் தூணில் அவள் பொன்னுடல் வார்த்தெடுத்த சிற்பச் சிலையெனச் சாய்ந்தது.

மேல் மாடக் கூடத்தில் சோழ மண்டலத்தின் புதிய திட்டங்கள் உருவாகிக்கொண்டிருந்தன. பெரிய வேளார் மதுராந்தகரிடமும், அவர் மைந்தன் இளங்கோவிடமும் தமது கருத்துக்களை விவரித்துக் கொண் டிருந்தார் இராஜேந்திரர். சோலைமலையில் இளங்கோ கண்டு வந்த சமணத் துறவியைப் பற்றியும் பேச்சுத் திரும்பியது.

"அவர் ஒருவேளை பாண்டியர்களின் ஒற்றராக இருக்கக் கூடுமோ என்று நினைக்கிறேன்" என்றான் இளங்கோ.

"அப்படியா?"

"ஆம், சக்கரவர்த்தி! அவரை முதலில் பார்த்தவுடன் மெய்த்துறவி என்றுதான் தோன்றியது. ஆனால், நான் பனைமரத்தின் உச்சியிலிருக்கும் போது அவர் குகைக்குள்ளிருந்து ஏன் எட்டிப் பார்க்கிறார்? என்னால் அவரை நம்ப முடியவில்லை. மலைச்சாரலில் திரண்டிருக்கும் கூட்டத்தின ரிடம் யாரும் போகாதபடி அவர் காவல் காத்துக் கொண்டிருக் கிறாரோ என்னவோ?"

மதுராந்தக வேளாருக்குக் கோபம் வந்து விட்டது. "இவ்வளவை யும் தெரிந்துகொண்டு நீ ஏன் அவரைச் சும்மா விட்டு வந்தாய்? அதே இடத்தில் வெட்டிச் சாய்த்து விட்டு வந்திருக்க வேண்டும். நாமும் விழிப் போடு இருக்கிறோம் என்பதை எதிரிகள் அறிந்து கொள்ளட்டுமே!"

கலகலவென்று சிரித்தார் இராஜேந்திரர். "மதுராந்தகரே! உங்க ளுடைய குமாரனின் உடைவாளைவிட மிகவும் உறுதியுள்ளது, அந்தத் துறவியின் கை. அவரை இலேசாக நினைத்து விடாதீர்கள். இரும்பு மனிதர் அவர்!"

"தங்களுக்கு அவரைத் தெரியுமா?" என்று வியப்புடன் கேட்டான் இளங்கோ. அவன் தந்தைக்கோ சக்கரவர்த்தி தம்மை எதிரில் வைத்துக் கொண்டே மற்றொரு மனிதரின் வீரத்தைப் புகழ்ந்ததில் மனக்குமைச்சல். அவருடைய மீசை துடித்தது. இதைக் கண்டுகொண்ட இராஜேந்திரர், "மதுராந்தகரே! அவர் யார் தெரியுமா? இரண்டு கிழவிகளுக்குக் கணவ ரான இல்லறத் துறவி! அவருடைய வரவைத்தான் நாம் இப்போது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்" என்றார்.

"ஓஹோ! அவரா?"—பெரிய வேளாரின் மீசைத்துடிப்பு அடங்கியது.

யார் என்று தெரிந்து கொள்ளாமல் விழித்தான் இளங்கோவேள். படிகளில் யாரோ ஒருவர் மேல்மாடத்தை நோக்கி வரும் காலடிச் சத்தம் கேட்டது. அந்த ஓசையைக் கொண்டு வருகிறவரை நிச்சயித்து விட்ட மாமன்னர், "இளங்கோ! அந்தத் துறவியே உனக்குத் தரிசனம் தருவ தற்காக வந்துவிட்டார்" என்றார்.

ஒற்றைத் தென்னை மரம் போல் உயர்ந்த தோற்றத்துடன் உள்ளே நுழைந்தார் வல்லவரையர் வந்தியத்தேவர். நரை, திரை, சுருக்கம் எதுவுமே அவரிடம் தென்படவில்லை. அறுபது வயதைக் கடந்து விட்ட இளங்கிழவர் அவர்!

"வாருங்கள் மாமா!" என்றார் பேரரசர். "வரவேண்டும் சிற்றப்பா!" என்றார் சிற்றரசர். "வணக்கம் தாத்தா!" என்றான் இளவரசன்.

இளங்கோவின் கரத்தைப் பற்றிக் கொண்டு அவனை அன்போடு தட்டிக் கொடுத்தார் வந்தியத்தேவர். "பொல்லாத பிள்ளையப்பா நீ என்னையே ஏமாற்றி விட்டு, உன் காரியத்தைச் சாதித்துக் கொண்டு

ஒன்று மறியாதவனைப் போல் திரும்பி விட்டாயே!'' என்றார். பிறகு பெரிய வேளாரிடம் திரும்பி, ''உங்கள் குமாரன் கெட்டிக்காரன்!'' என்று பாராட்டினார். அதோடு இளங்கோவிடம் அவனோடு வந்த வீரமல்லனைப் பற்றியும் கேட்டார்.

''உன்னோடு வந்த முரட்டுப் பையன் எங்கே? எதற்கெடுத்தாலும் வாளை உருவத் துடித்தானே அவன்!''

இராஜேந்திரரின் நெற்றிப் புருவங்கள் நெளிந்தன. இளங்கோவை அவர் அனுப்பும்போது கூடச் செல்லவேண்டிய ஆளை அவனையே பொறுக்கிக் கொள்ளச் சொல்லி யிருந்தார். நம்பிக்கைக்குப் பாத்திரமுள்ளவனாகவும் நிதானமாக நடந்து கொள்ளக் கூடியவனாகவும் இருக்க வேண்டும் என்று கூறியிருந்தார்.

''யார் அந்தப் பையன்?'' என்று இப்போது இளங்கோவிடம் கேட்டார் சோழப் பேரரசர்.

''மேலைச் சளுக்கப் போரில் சளுக்க மன்னன்மீது வேல் எறியப் போய் உயிர் நீத்த ராஜமல்ல முத்தரையனின் தம்பி வீரமல்லன்'' என்றான் இளங்கோ. ''விருந்தினர் மாளிகையில் அவனைத் தங்கச் செய்திருக்கிறேன். இப்போது போய்அழைத்துக்கொண்டு வரட்டுமா?''

''வேண்டாம்; நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்'' என்றார் இராஜேந்திரர். ''உனக்குத் தெரிந்த விவரமெல்லாம் அவனுக்கும் தெரியுமா? ரகசியங்களைக் காப்பாற்றக் கூடியவன்தானா அவன்?''

''காப்பாற்றக் கூடியவன்தான். என்றாலும் சில முக்கியமான தகவல்கள் அவனுக்குத் தெரியாது.''

''அதுதான் சரி'' என்று ஆமோதித்தார் வல்லவரையர் வந்தியத்தேவர்.

போரில் தன் தமையனைப் பறிகொடுத்தவன் என்பதால் இளங்கோவுக்கு வீரமல்லனின்மீது அநுதாபம்உண்டாயிற்று. அந்த அநுதாபமே நாளடைவில் நட்பாக மாறியது. நட்பு முறையில் அவர்கள் அடிக்கடி பழக நேர்ந்தாலும், இந்தப் பிரயாணத்தின்போதுதான் அவனைப் பற்றி நன்றாக இளங்கோவால் அறிந்து கொள்ள முடிந்தது. அறிந்துகொண்ட விஷயங்கள் இளங்கோவுக்கு அவ்வளவாக மகிழ்ச்சியைத் தரவில்லை. முன் கோபமும், முரட்டுத்தனமும், ஆத்திரமும், படபடப்பும் வீரமல்லனிடம் குடிகொண்டிருந்தன. ஆகவே ஒரு சில அரசியல் அந்தரங்கச் செய்திகளை வீரமல்லனிடமிருந்தே இளங்கோ மறைக்க வேண்டியிருந்தது.

பெரியவர்கள் மூவரும் ஈழநாடு செல்வதற்கான மிகப் பெரிய திட்டங்களை வகுக்கத் தொடங்கினார்கள். இளங்கோவுக்கு இனி அங்கு வேலை இல்லை. மதுராந்தக வேளாரிடம் தன் கண்களால் அநுமதி கேட்டுக்கொண்டு அங்கிருந்து கிளம்பினான் இளங்கோ. உடனடியாகக் கடலைத் தாண்டி ஈழத்தின் மறு கரையில் போய்க் குதிக்க வேண்டுமென்ற ஆவல் அவனை உந்தித் தள்ளியது. 'வானத்தில் பறந்து இலங்கைக்குத்தாவிய அநுமனின் சக்தி எனக்கும் இருந்தால்....?' என்று கற்பனைச் சிறகடித்தான் இளங்கோ.

யாரிடமாவது தான் பெற்ற பேற்றைச் சொல்லி மகிழ வேண்டும் போலிருந்தது இளங்கோவுக்கு. நண்பன் வீரமல்லனை நாடி விருந்தினர் மாளிகைக்குச் செல்லலாமா என்று ஒருகணம் நினைத்தான். ஒருவேளை அவன் உணவை முடித்துக் கொண்டு உறங்கப் போயிருந்தால்?- தன் மகிழ்ச்சியைத் தன் மனத்திடமாவது சொல்லிப் பகிர்ந்து கொள்ள ஆவலுற்றான். காதலியை நினைத்து மகிழ்வதற்காகத் தனிமையை நாடும் காதலனின் கால்கள்போல் இளங்கோவின் கால்கள் பூங்காவை நாடின.

நினைவை எங்கோ தொலை தூரத்திலிருந்த ஈழத்துக்கு நீளவிட்டு, தன்னை மறந்த லயத்தன்னில் நடந்தான் அவன். பூங்காவின் மைய மண்டபத்துத் தூணில் சாய்ந்து கொண்டிருந்த பொற்சிலைக்கு, அவன் அதே மண்டபத்தை நாடிவருவது தெரியவில்லை. அவனுக்கும் அங்கொரு பொற்சிலை புதிதாய்ச் சமைந்திருப்பது கண்களில் படவில்லை. அவள் சாய்ந்திருந்த தூணுக்குப் பின்னால் மிகவும் நெருங்கி வந்த பிறகுதான் அந்த உயிரோவியம் அவன் கண்களைப் பறித்தது. 'நான் தஞ்சைமா நகரிலிருந்த போது, இப்படியொரு தந்தச் சிலையைத் தந்தையார் இந்த மண்டபத்தில் இணைத்திருக்கிறார்களோ? எந்தச் சிற்பியின் கைவண்ணம் இந்த எழில் உருவம்? அடடா!....'

நினைவு ஈழத்திலிருந்து முற்றிலும் திரும்பியது. நிலவொளியும் இளவரசி அருள்மொழியை அவனுக்குக் காட்டிக் கொடுத்தது. மேல் மாடக் கூடத்தில் சற்று முன்பு அவன் கண்ட அதே அருள்மொழிதானா இவள்? நிலவுக்கும், தென்றலுக்கும், பூங்காவின் சூழ்நிலைக்கும் ஏதோ ஓர் மந்திரசக்தி இருக்கவேண்டும்! அழகை நூறு மடங்கு மிகைப்படுத்திக் காட்டுகிற அற்புத சக்தியா அது? அல்லது அவன் கண்களுக்கு அது ஒரு மாயத் திரையிட்டு விட்டதா?

தன் வயமிழந்து அவளைப் பார்த்துக் கொண்டிருந்தவன், சட்டென்று அவள் தனிமையைக் கெடுக்காமல் அவ்

# கால்கேட்டின் மூலம் பற்கள் சொத்தையாவதைத் தடுப்பதோடு நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தையும் அகற்றுங்கள்!



**ஏனெனில், கால்கேட் பற்பசை சொத்தையையும் துர்நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒரேதேய்ப்பில் ஒழிக்கிறது!**

உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10-ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத் தான் உண்டு.

இதன் விசேஷம், ஊடுருவும் தன்மையுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் கிடைக்கும் அதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினும், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர்மூலம் அடையலாம்-ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




<u>வெண்ணிற பற்களைப்</u> பெறவும், வாயில் <u>நறுமணம்</u> கமழவும், உலகிலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

---

DCG. MQT TAM.

விடத்தை விட்டு அகல நினைத்தான். தனிமையில் அவனைச் சந்திக்கும் விருப்பமோ, ஆவலோ, துணிவோ அவளிடம் இதுவரையில் இருந்ததில்லை. உடனே, மேல்மாடத்தின் ஒளிச்சுடரில் அவன் தன் விரலைச் சுட்டுக் கொண்ட நினைவு அவளுக்கு வந்தது. அவள் அலறிய அலறலைப் பார்த்தால் வேதனை அதிகமாக இருந்திருக்க வேண்டும்! அதைப் பற்றி ஒரு வார்த்தை அவனிடம் கேட்டு விட்டுப் போனால் என்ன?

பின்னால் வந்தவன், தன் வழியை மாற்றிக்கொண்டு, அவள் கண்களில் படும்படியாக எதிரில் நடந்து வந்தான்.

அந்த வேளையில், அந்தச் சூழ்நிலையில், அவனைத் தனியே கண்டவுடன் அருள்மொழிக்கே வியப்புத் தாங்கவில்லை. வேறொரு சமயமாக இருந்திருந்தால் அவளும் அவ்விடத்தை விட்டு எழுந்து சென்றிருப்பாள். தனிமையில் இதுவரையில் அவர்கள் சந்தித்துக் கொண்டதும் இல்லை. அதை அவர்கள் விரும்பி எதிர் பார்த்ததும் இல்லை.

இம்முறை ஏனோ இளங்கோவின்மீது அவளுக்கு அளவற்ற அநுதாப உணர்ச்சி பொங்கிக் கொண்டிருந்தது. மதுராந்தக வேளார் தம்முடைய முரட்டுத்தனமான பேச்சால் இளங்கோவுக்கு ஊறு செய்து விட்டதாக அவள் உருகினாள். 'ஈழத்துக்குச் செல்லத் துடிக்கும் இளவரசர் இன்னல் ஏதும் இல்லாமல் திரும்பி வர வேண்டுமே!' என்று அவள் தவித்துக் கொண்டிருந்தபோதுதான், இளங்கோ அவள் அருகில் வந்து நின்றான்.

"இளவரசி!"

"வாருங்கள்!" நாணத்துடன் மெல்ல எழுந்தவண்ணம் அவன் முகத்தை நோக்கினாள் அருள்மொழி. அந்த விழிகளில் படிந்திருந்த பனித்திரையை நிலவுத்திரை என்று நினைத்துக் கொண்டான் இளங்கோ.

"நீங்கள் இங்கிருப்பது தெரியாமல் பூங்காவுக்குள் வந்து விட்டேன். உங்களைக்கண்ட பிறகு, நீங்கள் விளக்கில் சுட்டுக்கொண்ட விரலைப்பற்றிக் கேட்கத் தோன்றியது.—விரல் அதிகமாய்க் கொப்பளித்திருக்கிறதா?"

"இலேசான சூடு; சிறு எரிச்சல்; அவ்வளவுதான்" என்று சொல்லிச் சிரிக்க முயன்றாள் அருள்மொழி. உண்மையைக் கூறி அகப்பட்டுக் கொள்ளவும் அவளுக்கு விருப்பமில்லை.

"ஏதும் மருந்து போட்டீர்களா? நீங்கள் இன்னும் அந்தப்புரத்துக்கே போகவில்லை போலிருக்கிறதே!"

"மருந்தை நாடும் அளவுக்கு வலியோ, வேதனையோ கிடையாது."

"இப்போது ஒன்றும் தெரியாது உங்களுக்கு! இரவில் அமைதியான உறக்கம் வருமென்று நினைக்கிறீர்களா? காலையில் எழுந்து பார்த்தால் நீங்களே பயப்படும் அளவுக்கு விரல் கொப்பளித்து விடும்.—எங்கே, எந்த விரலில் சுட்டுக் கொண்டீர்கள்? நான் பார்க்கலாமா?"

அருள்மொழிக்கு அழுவதா, சிரிப்பதா என்று தோன்றவில்லை! ஒரு பொய்யை மெய்யாக்குவதற்கு இதுவரையில் ஒன்பது பொய்களை அடுக்கியாகி விட்டது. அடுத்த பொய்யையும் மெய்யாக்கும் துணிவோடு தன் ஆள்காட்டி விரலைத் தூணின் நிழலில் சுட்டிக் காட்டினாள். 'அந்தச் சூடு விரலில் இல்லை; அது என்னுடைய நெஞ்சில் இருக்கிறது. அதற்குக் காரணமும் நீங்களே!' என்று அவள் அவனைச் சுட்டிக் காட்டுவது போலிருந்தது.

விரலைச் சரியாக அவன் கவனிக்கவில்லை. கவனித்திருந்தாலும் அவனுக்கு ஒன்றும் தெரிந்திருக்காது.

"இருங்கள், இதோ நொடிப்பொழுதில் வந்து விடுகிறேன்!" என்று உடைவாளை உருவிக்கொண்டு, வாழைப்புதரை நோக்கி விரைந்தான்.

அவனது பரபரப்பைக் கண்ட அருள்மொழி பெருமூச்சு விட்டாள்.




பூங்காவின் மைய மண்டபத்துக்கு அடுத்தாற்போலிருந்த சின்னஞ்சிறு செய்குளம் அல்லிக் கொடிகளால் நிரம்பி வழிந்தது. எதிரிகளின் மார்பில் தோய்ந்து குருதிகுடித்த வேல் முனைகளைப் போன்று செவ்வல்லி மொட்டுகள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் குத்திட்டு நின்றன. அந்தச் செய்குளத்தின் மேல் புறத்தில் பத்துப் பதினைந்து வாழை மரங்கள் செழித்து வளர்ந்திருந்தன.

குலை தள்ளி நின்ற சேர நாட்டுச் செங்கதலியின் பட்டை ஒன்றை வெட்டி விழுத்தான் இளங்கோ. அதை எடுத்து நறுக்கிக்கொண்டு திரும்புவதற்குள் அருள்மொழியே குளத்தருகில் வந்து விட்டாள். அல்லிக்கொடிகளிடையே

பளிங்கெனத் தெளிந்து நின்ற நீர்ப்பரப்பில் அவனுடைய உருவம் அற்புதமான புத்தெழிலுடன் பிரதிபலித்தது. மெல்ல அந்தச் செய்குளத்தின் கரைமீது அமர்ந்து அல்லிக் கொடிகளிடையே துள்ளித் திரியும் கெண்டை மீன்களை வேடிக்கை பார்த்தாள் அருள்மொழி.

"எங்கே, இப்படிச் சற்று உங்கள் விரலை நீட்டுகிறீர்களா, இளவரசி?"

வினயமாக முகத்தை வைத்துக் கொண்டு அவளுக்குச் சிகிச்சை செய்வதற்காக அவள் முன்னே மண்டியிட்டு உட்கார்ந்தான் இளங்கோ. அவனுடைய முரட்டுக் கரங்களால் பிழியப் பெற்ற வாழைச் சாறு, அவளது மென் விரலில் தேனைச் சொரிந்துகொண்டிருந்தது. அங்கே வீசிக் கொண்டிருந்த நிலவுக் கதிர்கள் இரண்டுவந்து திரவப் பொருளாக மாறித் தன் கரத்தின்மீது பொழிவதைப்போல் உணர்ந்தாள் அருள்மொழி. விரலிலே படாத சூட்டுக்கு அவன் செய்த மருத்துவம் அவள் நெஞ்சிலே சுட்ட நெருப்பின் கொடுமையைத் தணித்தது.

அருள்மொழிக்கு அவனுடைய அறியாமையைக்கண்டு சிரிக்கத் தோன்றியது. ஆனால் அந்த அறியாமையே தனக்கு அருமருந்தாக அமைந்துவிட்டபோது அவளால் சிரிக்க முடியவில்லை. தன்னை மறந்து தன் விழிகளை உயர்த்தி அவன் முகத்தை முழுமையாகப் பார்த்தாள். ஆனால் அவனோ அவளைக் கவனிக்கவில்லை. - இளவரசிக்கு நோய் தீர்க்கும் பாக்கியம் கிடைத்த அரண்மனை மருத்துவனின் பெருமை அவனுக்கு!

"மருந்தும் மூலிகையும் கூடத் தெரிந்து வைத்திருக்கிறீர்களே!"

"வைகறையில் துயில் எழுந்தவுடன் பாருங்களேன்!" என்று பூரிப்போடு கூறினான் இளங்கோ. "இதே விரலால் நீங்கள் வீணையை மீட்டிக்கொண்டு உதய கீதம் பாடப் போகிறீர்கள்."

அருள்மொழியின் இதய வீணை அதற்காக வைகறை வரையில் காத்திருக்கவில்லை. அப்போதே அவள் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஓர் இன்பகீதம் எழும்பத் தொடங்கியது. 'ஐயா, கொடும்பாளூர் மருத்துவரே! உங்கள் தந்தையார் நாவினால் சுட்ட புண்ணை நீங்கள் உங்கள் அறியாமையால் ஆற்றி விட்டீர்கள். உங்களுடைய குழந்தை மனத்தை நினைக்க நினைக்க எனக்குச் சிரிப்புத்தான் பொங்கி வருகிறது. அந்தச் சிரிப்பையே பாட்டாக்கி, என் இதய வீணையில் சுருதி சேர்த்து, இதே அமுத நிலவில் உங்களுக்குப் பாடிக் காட்டட்டுமா?'

அருள்மொழி அழுத்தக்காரி. அவளையும் மீறி எழுந்த எண்ணங்களை அதே விநாடியில் கடிவாளம்போட்டிருந்தாள். அவளுக்கு அந்த இடத்தைவிட்டு உடனே அகன்று விடவேண்டுமென்று தோன்றியது; அதே இடத்தில் இரவு முழுவதும் தங்கிவிட வேண்டுமென்றும் தோன்றியது.

"நீங்கள் தேடிவந்த தனிமை என்னால் கலையக்கூடும். நான் சென்று வரட்டுமா?" என்று, உட்கார்ந்த இடத்தைவிட்டு எழுந்திருக்காமலே அவனிடம் கேட்டாள் அருள்மொழி.

"நான் பெற்றபேற்றை யாரிடமாவது சொல்லிப் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று தோன்றியது. யாரும் கிடைக்காததால் தனிமையை நாடி வந்தேன். - என் மனம் இப்போது மகிழ்ச்சியால் பொங்குகிறது, இளவரசி!"

"ஓ! அப்படியானால் அதில் நானும் பங்கு கொள்ளலாமோ?"

உச்சி குளிர்ந்து விட்டது இளங்கோவுக்கு. "ஈழ நாட்டுப் போர்க்களத்துக்கு என்னையும் உடன் அழைத்துச் செல்வதாக வாக்களித்திருக்கிறார் சக்கரவர்த்தி! 'நீயும் வருகிறாய்!' என்று அவர் என்னிடம் அழுத்தமாகக் கூறி விட்டார். இதைவிடப் பெரிய வாய்ப்பு வேறு என்ன இருக்கிறது?"

"ஈழநாடு உங்களைப் போன்றவர்களுக்கு எளிதான இடமல்லவே!" என்றாள் அருள்மொழி.

"எளிதாக இருந்தால் அதை ஒரு வாய்ப்பாக மதிப்பேனா நான்? இதற்கு முன்பு மூன்று முறை படையெடுத்துச் சென்று முடிக்காமல் திரும்பிய காரியத்தை முடிக்கப் போகிறோம் இப்போது! மண்ணாசைக்காகத் தொடங்கப்பெறும் போரல்ல இது. மானங் காக்கப் புறப்படுகிறோம், இளவரசி!"

ஈழ நாட்டில் தான் செய்யப் போகும் வீர தீரச் சாகசங்களை அவளிடம் வர்ணிக்கத் தொடங்கினான் இளங்கோ. தன் வலிமையையும், சோழ மண்டலத்திலுள்ள பல்லாயிரம் வீரர்களின் வலிமையையும் அவளிடம் விளக்கினான். ராஜராஜ சோழரின் பிரிவுக்குப்பின், கடந்த மூன்று ஆண்டுகளாகவே எண்ணற்ற வீரர்கள் அதற்காகத் துடித்துக் கொண்டிருப்பதைக் கூறி, "கட்டளை பிறக்கப் போகிறது; கப்பல்கள் கடல் நீரைக் கிழித்துக் கொண்டு பாயப் போகின்றன!" என்று குதித்தான்.

கதை கேட்கும் குழந்தையின் குதூகலத்தோடு அருள்மொழி அவன் பேச்சை உற்றுக் கேட்டாள். இதனால் உற்சாகம் அடைந்த இளங்கோ மேலே கூறினான்:

"தேவி! பெரிய வேளாருக்கு நான் மகனாய்ப் பிறந்திருப்பதே பெரும் பாக்கியம்! அவர் சற்று முன்பு எனக்கிட்ட கட்டளையை எண்ணி எண்ணி நான் இறுமாப்படைகிறேன். 'வெற்றியோடு திரும்ப வேண்டும்; இல்லாவிட்டால் வீர மரணம் எய்த வேண்டும்!' இதுவல்லவோ என் தந்தையாரிட்ட வீரக்கட்டளை! - என் தலையைக் கொடுத்தாவது தமிழனின் தலைமுடியை மீட்பேன். முடி திரும்பாமல் என் உயிர் திரும்பாது!"

"இளவரசே!" என்று பதறினாள் நங்கை அருள்மொழி.

அவளுடைய பதற்றம் அவன் செவிகளில் ஏறவில்லை. உடைவாளை உருவி உயரே தூக்கினான் இளங்கோ. அவன் கண்கள் அந்த வாளின் கூர்முனைகள் போல் பளிச்சிட்டன.

"இந்த வாளின் மேல் ஆணை! வெற்றி, அல்லது வீரமரணம்!"

விண்ணை நோக்கி உயர்ந்த அவன் வலது கரம் ஆவேசத்தால் நடுங்குவதைக் கண்டாள் அருள்மொழி. அதைப் பற்றி இழுக்க அவள் கரங்கள் இரண்டும் துடித்தன. ஆனால் அவள் தன்னை அடக்கிக் கொண்டாள்.

"போதும் உங்கள் வீரம்!" என்று சீறினாள் அருள்மொழி. "கொடும்பாளூர் பெரிய வேளார் உங்களுக்கு அளவுக்கு மீறி வெறியூட்டிவிட்டார். கொடுஞ் சொல் சொல்வதும், கொடுஞ் செயல் புரிவதுமே உங்கள் குலவழக்கம்!"

வாளை உறைக்குள் போட்டுக் கொண்டே, "கடமையைக் கொடுமை யென்று கூறுகிறீர்கள், தேவி!" என்றான் இளங்கோ நிதானமாக.

"உங்கள் கடமையை யாரும் மறுக்க வில்லை. நீங்கள் எத்தனை போர்க்களங்களுக்கு வேண்டுமானாலும் செல்லுங்கள். வெற்றிமேல் வெற்றியாகப் பெற்றுக் கொள்ளுங்கள். ஆனால், முதல் போர்க் களத்துக்குச் செல்லும் நீங்கள் அதையே கடைசிப் போர்க்களம் என்றும் நினைத்து விடாதீர்கள். வெற்றி பெறவும் வேண்டும்; திரும்பி வரவும் வேண்டும். உயிரைத் துரும்பாக்கி அதை மாற்றானின் உடைவாளால் ஒடிக்கச் சொல்வது தான் வீரமா? அவசரம், பரபரப்பு, ஆத்திரம், ஆவேசம் இவைதான் வீரமா?"

கண்கள் கலங்கிப் போய் விட்டன அருள்மொழிக்கு.

"கோழைத்தனந்தான் வீரம் போலும்!" — கலகலவென்று நகைத்து விட்டான் இளங்கோ.



"என்ன சொன்னீர்கள்? — இந்தச் சோழ மண்டலத்தின் சக்கரவர்த்தி ராஜேந்திரர் கோழையா? அவர் தந்தையார் ராஜராஜ அருள்மொழித் தேவர் கோழையா?" - அருள்மொழி கேட்டாள்.

"அபசாரம், தேவி! அபசாரம்!"

மாமன்னரின் மகள் கூறலானாள்:—

"அவர்கள் இருவரும் எத்தனை எத்தனை போர்க்களங்களைக் கண்டிருக்கிறார்கள்! எத்தனை எத்தனை வெற்றி தோல்விகளைப் பெற்றிருக்கிறார்கள்! நம்முடைய பாட்டனார் அருள்மொழித் தேவர் தமது முதற் போரிலேயே வீர சொர்க்கம் புகுந்திருந்தால் இந்தச் சோழ மண்டலம் இப்படி உயர்ந்திருக்குமா? அவருடைய ஒரே புதல்வரான என் தந்தையாரும் போர்த் தந்திர முறைகளைக் கையாளாதிருந்தால் இது வரை இந்த மண் நமக்கு மிஞ்சியிருக்குமா? ஈழத்துக்குப் புறப்படுவதாக மார் தட்டுகிறீர்களே, இதற்கு ஊக்கம் கொடுத்த சக்கரவர்த்தி ஏன் உங்கள் தந்தையாரைப் போல் முரட்டுத்தனமாகப் பேசவில்லை? — கொடும்பாளூர் இளவரசே! இதை நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்; விவேகமற்ற வீரத்தால் வெற்றிப் பாதை அடைத்துப் போனாலும் போகும். நமக்கு வீரமும் வேண்டும்; விவேகமும் வேண்டும்!"

'ஆஹா! பெரிய குந்தவையாரின் வளர்ப்பே வளர்ப்பு!' என்று அருள்மொழியை வளர்த்த பெருமகளைத் தனக்குள் பாராட்டி மகிழ்ந்தான் இளங்கோ. சின்னஞ்சிறு வண்ணச் சிற்ப

மாகமட்டும் அப்போது அருள்மொழியை மதிப்பிட அவனால் முடியவில்லை. அளப்பறிய அழகுடன் அறிவையும் ஆற்றலையும் சேர்த்துப் பார்த்தான். அந்த அறிவை அவளுக்கு அளித்த பெரிய குந்தவையாரை நினைந்து வியந்தான்.

பெரிய குந்தவையார் வீர வேங்கையான இராஜராஜனின் தமக்கையார். வல்லவரையர் வந்தியத்தேவரின் பெருந்தேவி. வேங்கையின் மைந்தன் இராஜேந்திரரின் வளர்ப்புத் தாயாரும் அவரே. இராஜேந்திரரின் மக்களும் அந்தப் பெருமகளின் அன்பணைப்பாலும் அறிவு வளத்தாலும் உரம் பெற்று வளர்ந்தவர்களே.

அருள்மொழியிடம் அந்த அம்மையாரின் அறிவுத் தெளிவைக் கண்டு வியந்த இளங்கோ, தன் வியப்பு அடங்கியவுடன் அருள்மொழியிடம் கேட்டான்: "சாதாரணப் போர் வீரனின் உயிரைவிட வேந்தனின் உயிர் உயர்ந்ததென்று நினைக்கிறீர்களா?"

"வேந்தனின் உயிர் இருக்கட்டும். படைவீரனின் உயிரைவிடப் படைத்தலைவனின் உயிருக்கு என்ன வலிமை தெரியுமா?—ஒரே ஒரு படைத்தலைவனின் வீரச்சாவு ஓராயிரம் படைவீரர்களின் மனச் சோர்வு! வீரர்களை ஆட்டுவிக்கும் சூத்திரதாரி அவன். ஏன், உங்கள் பெரிய பாட்டனார் கொடும்பாளூர்ச் சிறிய வேளாரின் கதையையே எடுத்துக் கொள்ளுங்களேன்: அவருடைய பிரிவால் மனமுடைந்து போன பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தியே, ஈழத்திலிருந்து பாதியில் திரும்பிவர வேண்டியதாயிற்று."

இளங்கோவேள் சிந்தனையில் ஆழ்ந்தான். 'வீரமும் வேண்டும்; விவேகமும் வேண்டும்' என்ற சொற்கள் அவன் செவிகளில் மீண்டும் மீண்டும் ஒலித்தன. மாபெரும் சோழ சாம்ராஜ்யத்தின் வெற்றிக்கே மூல காரணமான சொற்களல்லவா அவை? வீரமும் விவேகமுமான இராஜேந்திரர் பொறுப்பேற்றிருந்தார். அவர் ஆட்சியில் விவேகிகள் வீரர்களைப் போற்றினார்கள்; வீரர்கள் விவேகிகளை மதித்தார்கள்.

சிந்தனையிலிருந்து விடுபட்ட இளங்கோ, அதைத் தூண்டிவிட்ட அருள்மொழியை நோக்கி, நன்றிப் பெருக்குடன் புன்னகை பூத்தான். அவள் அப்போது அவனைப் பாராமல், வானத்தில் மிதந்த நிலாவை வெறித்து நோக்கிய வண்ணம், எங்கோ தன் நினைவை அலைய விட்டிருந்தாள்.

"நங்கையாரே!" என்று மெல்லக் குரல் கொடுத்தான் இளங்கோவேள்.

அருள்மொழியின் கனவு கலைந்தது. திடுக்கிட்டுத் திரும்பினாள். அருள்மொழி நங்கையான அவளை இளங்கோ எப்போதாவதுதான் 'நங்கையாரே' என்று அழைப்பான். அவன் அழைத்த விதமும், அவன் குரலின் கனிவும் அவளை மெய்ச் சிலிர்க்கச் செய்தன.

"என்ன?"

"நான் ஈழத்துக்குப் புறப்படப்போகிறேன் என்பதாலோ என்னவோ, நீங்கள் என்றுமில்லாதபடி என்மீது அளவற்ற அன்பைச் சொரிந்திருக்கிறீர்கள். என்னுடைய சொந்த நலனில் நீங்கள் கொண்டிருக்கும் பற்றுதலுக்கு நான் எவ்வாறு நன்றி செலுத்துவது? உங்களைப் பெற்றெடுத்த சக்கரவர்த்தி பாக்கியம் செய்தவர்!"

"என்ன சொல்கிறீர்கள்? உங்களுடைய சொந்த நலனில் நான் பற்றுதல் கொண்டிருக்கிறேன் என்கிறீர்களா?" என்று அவனையே திருப்பிக் கேட்டாள் அருள்மொழி. கேட்டு விட்டு, "சோழ மண்டலத்தின் மீது நான் கொண்டுள்ள பற்றுதலாக அதை நீங்கள் எடுத்துக் கொள்ள வேண்டும். உங்களைப் போன்ற அரசர்களும், அதிகாரிகளும், மக்களும் செலுத்தும் கடமையினால்தானே சக்கரவர்த்தி இத்தனை பெரிய சுமையைக் கவலையின்றிச் சுமக்கிறார்?" என்றாள்.

அருள்மொழி அவனிடம் ஏதும் தனியாக அன்பு செலுத்தவில்லை என்றும், நாட்டுக்காக உழைப்பவன் என்ற முறையில் அவனை மதித்ததாகவுமே அவன் எடுத்துக் கொண்டான். அவள் கடைசியாகக் கூறிய சொற்களை அவன் அப்படியே நம்ப வேண்டியிருந்தது. சிறிது கூடச் சந்தேகத்துக் கிடமின்றி அவன் நம்பவும் செய்தான்.

அதனால் ஏற்கனவே அவனிடம் கொண்டிருந்த மதிப்பு அவனிடம் இருமடங்காக உயர்ந்தது. 'நாட்டுப் பற்று என்பது சோழ வளநாட்டுப் பெண்மணிகளின் இரத்தத்தில் கூட இவ்வளவு தூரம் ஒன்றிக் கலந்திருக்கிறதே!'

அருள்மொழியோ அவனிடம் தன்னுடைய பற்றற்ற வெளித் தோற்றத்தைக் காண்பித்து விட்டு, பற்றுதலால் அவனுக்காக நெகிழ்ந்துருகிய உள்ளத்தைத் தன்பால் பற்றி இழுக்கத் தொடங்கினாள். பாகாய் உருகும் உள்ளத்தைப் பாறையாய் மாற்றுவதற்கு முயன்று கொண்டிருந்தாள். அவள் தனக்குள்ளே செய்து கொண்டிருந்த ரசவாத வித்தைகள் இளங்கோவுக்குப் புலனாகவில்லை. அவன் வீரன்!—அவள்...?

"நாழிகையாகி விட்டதே!" என்று கூறிக்கொண்டு, வேகமாக அவ்விடத்தை விட்டு எழுந்தாள் அருள்மொழி. இளங்கோவும் அவளைப் பின்பற்றி நடந்தான். மைய மண்டபத்தைத் தாண்டிச் சிறிது தூரம் அவர்கள் நடந்த பிறகு, இளங்கோவுக்குத் தன் இடதுபுறம் முல்லைப் பந்தலுக்குப் பக்கத்திலிருந்து ஏதோ ஒரு உருவம் விரைந்து செல்வதைப் போல் தோன்றியது. சட்டென்று திரும்பிப் பார்த்தான். அவன் விழிகள் கூர்மையாகின. கூர்மையான விழிகளில் கொப்பளிக்கும் சினம் குடிகொண்டு விடப் பார்த்தது.

திடுக்கிட்டு நின்றுவிட்ட இளங்கோவைப் பார்த்து, "என்ன அது?" என்று சிறிது திகிலுடனே கேட்டாள் அருள்மொழி. "ஒன்றுமில்லை" என்று அவளிடம் கூறியவன், அப்படி ஒரு சிறு பொய்யை அவளிடம் சொல்ல வேண்டி வந்ததற்காகத் தன்னை நொந்து கொண்டே நடந்தான்.

அருள்மொழி அந்தப்புரத்துக்குச் சென்றாள்.

இளங்கோ மேல்மாடத்தின் நிலா முற்றத்துத் தூண் அருகில் நின்ற வண்ணம் பூங்காவிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த உருவத்தையே உற்று நோக்கினான். (தொடரும்)

---

கொச்சைத் தமிழ்

## கொச்சைப் பதங்கள்

ஆண் குழந்தையை 'ஆம்பிளைப் பிள்ளை' என்றும் பெண் குழந்தையைப் 'பொம்பளைப் பிள்ளை' என்றும் கொச்சைத் தமிழ் கூறும். ஆண்பிள்ளை என்ற சொல்லில் பிள்ளை என்பது குழந்தைப் பருவத்தைக் குறிப்பதாகும். அப்படியே பெண் பிள்ளை என்ற சொல்லிலும் பிள்ளை என்பது குழந்தை நிலையைக் குறிக்கும். நாளடைவில் ஆண்பிள்ளையின் சிதைவாகிய ஆம்பிளை என்பதும், பெண்பிள்ளையின் சிதைவாகிய பொம்பளை என்பதும் பருவத்தைக் குறியாது. பொதுவாக ஆண்வர்க்கத்தையும், பெண் வர்க்கத்தையும் குறிப்பனவாயின. ஆகவே, குழந்தைகளைக் குறிப்பதற்கு மேலும் பிள்ளை என்ற சொல்லைச் சேர்க்கவேண்டியதாயிற்று. அப்படிச் சேர்த்ததனால் ஆம்பிளைப் பிள்ளை பொம்பளைப்பிள்ளை என்ற கொச்சைப் பதங்கள் வழங்கி வருகின்றன.

—பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை



# உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்

தமிழ்ப் படாதிபதிகளோ தமிழ்ப் படங்களோ முன்னேறத் தயாராயில்லா விட்டாலும், தமிழ்ப்பட ரசிகர்கள் நிச்சயமாக முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள். 'இந்த உண்மையை நிதர்சனமாகக் காண வேண்டுமானால் புதிய தமிழ்ப் படங்கள் வெளியாகும் தியேட்டர்களுக்குச் செல்லவேண்டும்.

முன்னொரு காலத்தில் எந்தத் தமிழ்ப் படம் வந்தாலும் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் போய்ப் பார்த்தார்கள். இப்பொழுதெல்லாம் படம் பார்க்கும் ரஸிகர்களே புதிய படங்களுக்கு நல்ல தீர்ப்பை வழங்கி விடுகிறார்கள். உதாரணமாகச் சில படங்களைப் பார்ப்போம்.

"மாலா ஒரு மங்கல விளக்கு" என்று ஒரு தமிழ்ப் படம் வந்தது. அந்தப் படம் வந்ததே அனேகருக்குத் தெரியாது. அப்படத்தைத் தன்னந் தனியாகப் பார்க்கும் பாக்கியம் ஸ்டுடியோவுக்குப் போகாமல் தியேட்டரிலேயே அடியேனுக்குக் கிடைத்தது! கூட்டமே இல்லை. தனியாக இருந்த நான் பேர்படி படத்தின் பாட்டுப் புத்தகம் விற்பவனைக் கூவியழைத்து ஒரு பாட்டுப் புத்தகம் வாங்கினேன். அவன் அபூர்வப் பிரகிருதியைப் பார்ப்பதுபோல் என்னை ஒரு தினுசாக பார்த்துக்கொண்டே போனான்.




ஒருவரும் ஆஜராகாமல் மேல் வகுப்புகள் அவ்வளவுக்கும் ஓய்வு கொடுத்துத் தங்களுடைய நல்ல தீர்ப்பைப் படத்துக்கு வழங்கிய மக்களின் ரஸிகத்தன்மையைக் கண்டு வியந்தேன்!

"தலைகொடுத்தான் தம்பி" என்று ஒரு படம் சமீபத்தில் வெளியாயிற்று. அது சேலம், மாடர்ன் தியேட்டர்ஸார் தயாரித்த படம். அந்தப் படம் பார்க்கப் போனபோது என் கடமையை எண்ணிச் சிரமத்தைப் பொருட்படுத்தாமல், கடைசி வரையில் இருந்தேன். படத்தின் வெளிக் காட்சிகள் யாவும் நன்றாகப் படமாக்கப் பட்டிருக்கின்றன. மற்றப்படி அந்தப் படத்தில் ஒன்றும் இல்லை. "தலைகொடுத்தான் தம்பி" படம் ஓடிய தியேட்டர்களில் சில நாட்கள் சுமாராகக் கூட்டம் இருந்தது. பிறகு அந்தப் பக்கம் யாருமே தலை காட்டவில்லை. தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று வாளா விருந்திருப்பார்கள்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று ஒரு படம் வந்தது. தெலுங்கில் தயாரிக்கப்பட்டுத் துணிந்து தமிழில் 'டப்' செய்யப்பட்ட படம் அது! முன்பு, பல்லாண்டுகளுக்கு முன்பு எம். கே. தியாகராஜ பாகவதர் நடித்த "ஹரிதாஸ்" படத்தின் கோரமான காப்பி இந்தப் படம். "ஹரிதாஸ்" படத்தில் அற்புதமான பாடல்கள் இருந்தன. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற தலைப்பைத் தவிர இதில் கருத்துக்கோ, கண்ணுக்கோ விருந்தாக எதுவும் இல்லை.

அந்தப் படத்தையும் ரஸிகப் பெருமக்கள் புறமுதுகிட்டோடும்படி செய்து விட்டனர்!

இப்படிக் குப்பையும் கூளமுமாக ஏன் படங்களைத் தயாரிக்கிறார்கள் என்பதுதான் விளங்கவில்லை.

இந்த நிலைமை என்றைக்காவது சீர்திருந்துமா என்று வெகுநேரம் சிந்தித்தேன். தமிழ்ப்படம் பார்க்கும் ரஸிகப் பெருமக்களின் நல்ல தீர்ப்பின் மேலுள்ள நம்பிக்கையைக் கொண்டுதான் தைரியம் கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு



வந்தேன். அத்துடன் நன்றாய் ஓடும் தமிழ்ப் படங்கள் வெளி வரும் வரையில் நாம் சந்தோஷப்பட வேண்டியதுதான் என்று எண்ணிச் சமாதானம் செய்து கொண்டேன். ஒரு படம் தியேட்டரில் ஓடினாலும், அல்லது ஓடியே போய்விட்டாலும் அந்த ஓட்டத்தைக் கணக்கிட்டுத் தானே ஆக வேண்டும்? எப்படியிருந்தால் என்ன? படம் நன்றாக ஓடி விட்டதல்லவா?

லலித கலா பிலிம்ஸாரின் "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்னும் படங்கூட மேலே குறிப்பிட்ட ரகத்தைச் சேர்ந்த படம் தான்.

அலுத்துப் போகும் அளவுக்கு இந்தப் படத்தில் நடனங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விண்ணும் மண்ணும் வியந்து பாராட்டும் வண்ணம் பண்ணும் பரதமும் பயின்று பாரத நாட்டிலேயே தனிப் புகழ் பெற்று விளங்கும் தமிழகத்துக்கு இப்படியா இழுக்கு ஏற்பட வேண்டும் என்று எண்ணி வருந்தவேண்டியிருக்கிறது, அவற்றைப் பார்க்கும்போது. தோட்டத்திலும், மாடியிலும், வீட்டிலும், வீதியிலும், சந்திலும், சதுக்கத்திலும் ஆடி அபிநயம் புரிந்து அமர்க்களம் பண்ணாத தமிழ்ப்படமே இல்லை என்று கூறும்படியாகி விட்டதே!

"இந்தக் 'கன்னா பின்னா' நடனங்களை வேறு நாட்டைச் சேர்ந்தவர்கள் பார்க்க நேர்ந்தால் நம் நாட்டைப் பற்றி என்ன நினைப்பார்கள்!" என்று என் நண்பர் ஒருவர் மனம் கலங்கினார்.

"வேறு நாட்டினர்தான் நம் தமிழ்ப் படங்களைப் பார்ப்பதில்லையே!" என்று அவருக்கு ஆறுதல் கூறினேன்.

"உழவுக்கும் தொழிலுக்கும்..." படத்தின் ஆரம்பத்தில் வரும் காலஞ்சென்ற என். எஸ். கிருஷ்ணனைப் பற்றிய வில்லுப் பாட்டு நன்றாயிருக்கிறது. கவிஞர் கண்ணதாசன் அழகாக அந்தப் பாட்டை இயற்றியிருக்கிறார்.

"பாட்டெழுதும் வேளையிலே
பாணனாவான் — அதைப்
பாடிக் காட்டும்போது கலை
வாணனாவான்;
நாட்டுமக்கள் கூட்டத்துக்கோர்
அண்ணனாவான் — தன்னை
நாடிவரும் ஏழைகட்கு
மன்னனாவான்!"

என்று டி. எஸ். பாண்டியன் குழுவினர் பாடிக் கேட்கும்போது மிகவும் உருக்கமாயிருக்கிறது.

உழவும், தொழிலும்தான் சிறந்தது என்று காட்டுவதற்காகப் படத்தில் பல விதத்திலும் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. நல்ல உள்ளம் படைத்த மில் முதலாளியாக டி. பாலசுப்பிரமணியம் வருகிறார். அவரது வளர்ப்பு மகன் மோகனாக ஓ. ஏ. கே. தேவர் வருகிறார். அவர்தான் படத்தின் வில்லன். நல்லவனாகவும் கதாநாயகனாகவும் பிரேம் நசீர் வருகிறார். கதாநாயகியாக ஈ. வி. சரோஜா வருகிறார். அவர் வந்தால் கூடவே நடனமும் வந்தாக வேண்டுமே! ஆகவே நிறைய வருகிறது. கண்ணாம்பா உழவின் பெருமையை எடுத்துக் கூறி, உழைத்து, உணர்ச்சிப் பிரவாகமாக நடித்திருக்கிறார். கடைசியில் ஆவேசச் சொற்பொழிவும் ஆற்றுகிறார். எம். என். ராஜம் கவுன் போட்டுக்கொண்டு நடனம் ஆடுகிறார்.

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்"— ஆம். ரசிகப் பெருமக்கள் வந்தனை செய்து, வணக்கம் செலுத்திப் படத்தை வழியனுப்பி வைத்துவிட்டனர்! எப்படியும் படம் ஓடிவிட்டது. அதுவரையில் திருப்திப்படலாம் அல்லவா?



# கஞ்சப்பிள்ளை

ரே. கோவிந்தராசன்

'அந்த இரண்டாயிரம் ரூபாயை உடனே எப்படியாவது செய்துவிட வேண்டும்' என்ற உள்ள நமைச்சலோடு சிவசைலம் பிள்ளை புரண்டு புரண்டு படுத்தார்.

இரண்டாயிரம் ரூபாய்! அதைச் சேர்க்க அவர் பட்டபாடு...!

அவருக்கே மலைப்பாகத்தான் இருந்தது. சின்ன வயசில் காலணா அரையணாவுக்குக்கூட வழியின்றி மஞ்சவிளை கிராமத்தைச் சுற்றி வந்தவாறு தான் செய்த தொழில்களையெல்லாம் படிப்படியாக நினைவுபடுத்திப் பார்த்தார். அடேயப்பா! அவ்வளவும் காலணா, காலணாவாகச் சேர்த்த பணம்தான். வயிற்றையும் வாயையும் வஞ்சித்துச் சேர்த்த பணம். அவருடைய ஐம்பதாண்டு உலக வாழ்வின் கனிசமான கொள்முதல்! அதை என்ன செய்யலாம்?

'விநாயகர் கோயிலுக்குத் தருமமாக...'

எவ்வளவு பெரிய நினைப்பு! அவரால் அதைச் செய்ய முடியுமா? செய்துதான் ஆக வேண்டும். அதுவும் உடனே செய்ய வேண்டும். மஞ்சவிளை கிராமத்துப் பிள்ளைமார் தெருவுக்கே ஒரு கல்லுப் பிள்ளையாராக இருந்த திருவடியாபிள்ளை இரண்டு நாட்களுக்கு முன்பு திடீரென்று மண்டையைப் போட்டுவிடவில்லையா? சிவசைலம்பிள்ளையும் அந்தமாதிரி 'பொக்'கெனப் போக மாட்டார் என்பது என்ன நிச்சயம்? திருவடியா பிள்ளைக்காவது கிராமத்தில் நல்ல பெயர். உயர்த்திப் பேசாத ஆள் இல்லை. ஆனால் சிவசைலம் பிள்ளைக்கு....

'கருமி, கஞ்சன், அப்படி இப்படியில்லா இந்த இளவட்டங்களெல்லாம் பேசுதானுக!' என்று குமைந்தார் சிவசைலம்பிள்ளை. சட்டை கிழிந்து போனால் அதைத் தைத்துப் போட்டுக் கொள்வதில் தவறு என்ன? அந்தக் கிராமத்து இளவட்டங்கள் அதைக் கேலி செய்தன. நான்கைந்து ஒட்டுகளோடு இருந்த சட்டை இப்போது எழெட்டு ஒட்டுகளோடு காணப்பட்டது என்னவோ உண்மைதான்! அதற்காகக் கேலி செய்ய வேண்டுமா?

மாலை நேரத்தில் கோயிலில் சுண்டல் தருவது உண்மைதான். சிவசைலம் பிள்ளை இரவு நேரத்தில் சாப்பிடுவதில்லை என்பதும் உண்மையென்றே வைத்துக் கொள்வோம். இவை இரண்டையும் ஒன்றாகச் சம்பந்தப் படுத்தி ஏன் பேச வேண்டும்?

படுத்திருந்த சிவசைலம் பிள்ளை எழுந்து உட்கார்ந்தார். பாயின் பிய்ந்து போன ஓரத்தை அவரது விரல்கள் நிரடிக் கொண்டிருந்தன. ஊரில் பலர் பலவிதமாகத்தான் பேசுவார்கள். அதையெல்லாம் கவனித்துக் கொண்டிருக்க முடியுமா? அப்படியெல்லாம் பார்த்திருந்தால் இப்போது இரண்டாயிரம் ரூபாய் ரொக்கம் கையில் இருக்குமா? இருந்தாலும் திருவடியா பிள்ளையைப் போல் இவரையும் நான்கு பேர்கள் தூக்கிப் பிரமாதமாகப் பேச வேண்டுமானால்....

'பணத்தைக் கோயிலுக்குத் தருமம் செய்தால்தான் என்ன?'

மீண்டும் அந்தப் பெரிய நினைப்பு. இத்தனை காலமாக அரும்பாடு பட்டுச் சேர்த்த அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு என்னதான் செய்வது? எதற்காக அதை அவர் சேர்த்து வைத்தார்? அவர் உள்ளம் குழம்பியது. வெகு வேகமாக ஓடி நடுக்காட்டுக்குச் சென்று நின்று கொண்டு வழியறியாது விழிப்பது போன்ற வேதனை ஏற்பட்டது. 'பணத்தை என்ன செய்வது?'

'மற்றவர்களுக்காகத் தருமம் செய்வதா?'

மற்றவர்கள் மெச்சுவதற்காக ஒரு காரியம் செய்வது வெட்கக் கேடான விஷயமல்லவா? மற்றவர்கள் இவரைக் கஞ்சன் என்று சொன்னால் சொல்லிவிட்டுப் போகட்டுமே! அதற்காகப் பயந்து தருமம் செய்வதாவது?

பிறகு அந்தப் பணத்தை எதற்காக அவர் சேர்த்து வைத்தார்? மனசுக்கு நிம்மதி தரும் வகையில் எப்படி அதைப் பயன்படுத்துவது?

கோயிலுக்கே கொடுத்து விட்டால்? மற்றவர்களுக்காக இல்லாவிடினும் தமக்காக! தமது மன அமைதிக்காக! மற்றவர்களுக்குத் தெரியாமல் கோயிலுக்குக் காணிக்கையாகக் கொடுத்து விட்டால் என்ன?

கொடுக்கலாம். ஆனால் அதற்குத் துணிச்சல் வேண்டுமே! அந்த அளவுக்கு அவரிடம் துணிச்சல் உண்டா?

அவர் ஆவேசம் வந்தவரைப் போல் எழுந்து நின்றார். மாடத்தில் மினுக்கிட்ட அகல் விளக்கு அவருக்குப் பூதாகாரமான ஒரு மங்கிய நிழலைக் கொடுத்தது. பாயைச் சுருட்டி எறிந்து விட்டுத் தரையைக் கைகளினால் தடவினார். பாதிய மெழுகப்பட்டிருந்த தரையில் தட்டுப்பட்ட எதையோ பிடித்து வேகமாகப்

பிய்த்து இழுத்தார். தரையில் புதைந்திருந்த பெட்டி திறந்து கொண்டது. அதனுள் அழகாக மடித்த இருபது நூறு ரூபாய் நோட்டுகள் இருந்தன.

சிவசைலம் பிள்ளை அந்த நோட்டுகளையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். ஒவ்வொரு நோட்டின் மடிப்பிலும் அவருடைய வாழ்க்கையே மடிந்திருந்தது; மடிந்து சுருண்டிருந்தது: சுருண்டு அந்தச் சின்ன மரப் பெட்டிக்குள் கோணலாகச் சாய்ந்து சிரித்துக் கொண்டிருந்தது!

அவர் உள்ளம் நடுங்கியது. 'இம்மாம் பணத்தையும் எடுத்துக்கொண்டு போய்க் கோயிலுக்குக் கொடுக்கறதா?' என்று மலைத்தது.

இயல்பான நிலையில் அவருடைய போக்குக்குப் புறம்பான நினைவுதான் அது. ஆனால் இப்போது ஒரு வகை வெறி, உடை மரத்து முள்ளைப் போல் அவருடைய உள்ளத்தில் சிலுப்பிக் கொண்டிருந்தது. அது இருவடியா பிள்ளையின் மரணத்தால் எழுந்த மிரட்சியா, ஊராரின் ஏச்சுப் பேச்சில் எழுந்த விரக்தியா என்று கூற முடியாது. தம்மாலும் நல்லதைச் செய்ய முடியும் என்று தமக்குத் தாமே நிரூபித்துக் கொள்ளத் துடிக்கும் ஒரு ஆவேச வெறி அவரை ஆட்டியது. தமது மனசும் தாராளமானதுதான் என்ற திருப்தி அவருக்கு உடனே தேவை!

அவர் நோட்டுகளை யெல்லாம் சேர்த்து மடித்துச் சுருட்டினார். அவற்றை நீளமான துணிப் பை ஒன்றில் திணித்து அந்தப் பையை நன்றாகச் சுருட்டிக் கட்டினார். தாம் அணிந்திருந்த மெல்லிய காடாத் துணி பனியனின் உட்பக்கமாக இருந்த பையில் அதைப் பத்திரமாக வைத்துக் கொண்டு பெட்டியை மூடினார். திடீரென்று வீசிச் சுழன்ற இளங்காற்றில் அகல் விளக்கு 'பட்'டென்று அணைந்தது. பின்னே வீட்டை விட்டு வெளியே வந்தார்.

அப்பா! என்ன இருட்டு! என்ன நிசப்தம்! அந்தப் பேரமைதியில் இழைந்துகொண்டிருந்த 'கிய்' என்ற மெல்லிய ஒலியை எழுப்பிய பூச்சிகளெல்லாம் எங்கேதான் ஒளிந்து கொண்டிருந்தனவோ!

'மணி மூணுகூட இருக்காது போலே!' என்று எண்ணியவாறு துண்டை இழுத்துப் போர்த்துக் கொண்டு தெருவில் இறங்கி நடந்தார் பிள்ளை. சில்லென்று காற்று முகத்தை அறைந்தது. மனசில் கொஞ்சம் தெளிவு: கொஞ்சம் தெம்பு! சோற்றுக் கற்றாழையும் உடை முள்ளுமாக மண்டிக் கிடந்த புதர்க்காடாக இருந்த இடம் இப்போது பிள்ளைமார் வீதியாகக் காட்சியளிப்பதை எண்ணினார். வரிசையாக எல்லாமே பிள்ளைமார் வீடுகள்தான். ஒன்றிரண்டு கூரை வீடுகளைத் தவிர மற்றவையெல்லாம் தட்டோடு வேய்ந்தவைதான். தெருவின் மத்தியிலிருந்த தெற்குப் பார்த்த மச்சு வீடு வீரபாகு பிள்ளையுடையது. வீரபாகு பிள்ளைதான் பிள்ளைமார்களில் பசையுள்ள புள்ளி. அந்தப் புள்ளி கறுத்துத் தடித்து மதமத வென்றிருக்கும். கொழும்புச் சீமையிலிருந்து கள்ளத்தனமாக வந்து சேர்ந்த செல்வந்தான் அவ்வளவும் என்பார்கள் சிலர். தூத்துக்குடி முத்துக் குளிப்பின் போது முத்தாக அள்ளிக் கொண்டு வந்து சேர்த்து விட்டார் என்று சொல்வாரும் உண்டு. அந்த வீடும் இருண்டுதான் கிடந்தது. வெளித் திண்ணையில் யாரோ படுத்திருந்தார்கள். வெள்ளைத் துணி போர்த்திய பஞ்சு 'மூடை' போல் தோன்றியது. பிள்ளையாக இருக்கலாம்; அல்லது அவருடைய பண்ணையாளாக இருக்கலாம். ஒரு வேளை வீரபாகுப் பிள்ளையின் தூரத்து உறவான முருகனேரி ஆச்சியாக இருந்தாலும் இருக்கலாம்!

பிள்ளை, பிள்ளைமார் வீதியைத் தாண்டி மேற்கே நடந்தார். கிழக்குப் பார்த்த சிவன் கோயில், அதை ஒட்டியிருந்த அர்ச்சகர் வீடு, அதற்கடுத்த மாட்டுத் தொழுவங்கள், மச்சு வீடுகள், மண் குடிசைகள் அத்தனையும் உறங்கிக் கொண்டிருந்தன. கோயிலின் பெரிய கதவில் ஓர் ஆள் செல்வதற்கு ஏற்பப் பதித்திருந்த சிறிய கதவு திறந்திருந்தது. 'ஐயரு சுருக்கல்லே எழுந்து வேலையைப் பார்க்கிறாப்பிலே இருக்கு' என்று எண்ணியவாறு கோயிலுக்கு முன்பாகவே சிறிது நேரம் நின்றார்.

அவருக்குச் சிரிப்பு வந்தது. 'இந்த இருட்டு நேரத்திலே இம்மாம் பணத்தைச் சுமந்து கிட்டு வந்து மரம் கணக்கா இங்கனே நிக்கேனே!' என்று அவர் தம் பைத்தியக்காரத்தனத்தை எண்ணித் தமக்குள்ளேயே சிரித்துக் கொண்டார். இருந்தாலும், தம்முடைய மனசும் தாராள மனசுதான், தாம் கஞ்சனல்ல, கருமியல்ல என்ற திருப்திதான் அவருக்கு வேண்டியிருந்தது. இருவடியா பிள்ளையைப் போல் மண்டையைப் போடு முன் அதை அடைந்துவிட வேண்டும். அதற்காகவேதான் கோயிலின் சிறிய கதவு திறந்திருக்கிறதோ!

கதவு வழியாகப் பார்த்தார். முன் மண்டபத்தில் இருந்த பெரிய உண்டியல் அந்த இருட்டிலும் அவர் கண்களுக்குத் தெரிந்தது. ஒவ்வொரு நோட்டாக எடுத்து உண்டியலுக்குள் போட்டு விடலாம் அத்தனை பணத்தையும்; இரண்டாயிரம் ரூபாயையும்!

இரண்டாயிரம் ரூபாய்!

அவருடைய மனசு 'வெலவெல'த்தது. திடீரென்று தம் புத்தி இப்படிப் போவானேன்? அவ்வளவு பணத்தையும் எடுத்துக் கொண்டு போய்க் கொட்டுவதற்கு இப்போது என்ன வந்து விட்டது? இருவடியா பிள்ளையின் காலமும் முடிந்துவிட்டால் இவருடைய காலமும் முடிந்துபோக வேண்டுமென்பது கட்டாயமா, என்ன? வயசு என்ன ஆகி விட்டது? ஐம்பது தானே? இன்னும் எத்தனையோ ஆண்டுகள் வாழலாமே! பாதிப் பணத்தை உண்டியலில் போட்டால் என்ன?

ஆயிரம் ரூபாய்!

உள்ளம் மீண்டும் வெலவெலத்தது. ஆயிரம் ரூபாயை உண்டியலில் போட்டாலும் போதும். அவருடைய மனசு தாராளமானதுதான் என்பது உறுதியாகி விடும். ஊராரெல்லாம் அவரைக் கஞ்சாதி கஞ்சன் என்று கூறினாலும் அவர் கவலைப்படமாட்டார். ஆனால்...

ஆயிரம் ரூபாய்!

பெரிது பெரிதான பத்து நீல நிற நோட்டுகள் அவர் கண் முன் தோன்றின. அவ்வளவு பெரிய தொகையை ரகசியமாக

உண்டியலில் போடுவதா? அவருக்கே வெட்கமாக இருந்தது. அவர் உள்ளத்தின் பலவீனத்தை அவரால் உணர முடிந்தது. அவரால் அதைச் செய்ய முடியாது. அவ்வளவு பணத்தை அவரால் இழக்க முடியாது. அப்படியானால் ஒரு நூறு ரூபாய்?

ஆள் அரவம் கேட்கவே பிள்ளை ஒதுங்கிச் சென்று ஒரு மரத்துக்குப் பின்னால் மறைந்தார். கோயில் உள்ளிருந்து கையில் எதையோ ஏந்தியவாறு அர்ச்சகர் வெளியே வந்தார். கோயில் கதவை இழுத்துப் பூட்டினார். 'விடு, விடு' என்று தம் வீட்டுக்குள் வேகமாகச் சென்று மறைந்தார்.

கோயிலிலிருந்து அவர் என்ன கொண்டு போயிருப்பார்?

பிள்ளைக்குச் சந்தேகம்தான். கோயில் சொத்து ஏதேனும் அர்ச்சகர் வீட்டுக்குப் போயிருக்கலாமல்லவா? ஆனால் அவர் எண்ணத்தை மடக்கி விட்டார். வக்கிரமான நினைப்பெல்லாம் என்னத்துக்கு?

ஆனால் மனம் அமைதியடையவில்லை. அந்த நூறு ரூபாயைப் போடுவது கூடத் தேவையற்றது என்பதைக் காட்டத்தான் கதவும் மூடிக் கொண்டதோ? எந்த நிகழ்ச்சியையும் நமக்குச் சாதகமாகக் கற்பனை செய்து கொள்வதில் தவறென்ன?

அவர் அங்கிருந்து கிழக்கு நோக்கி நடையைக் கட்டினார். 'மத்தவங்கள்ளாம் சொல்லுதாகன்னு சும்மாவா சொல்லுதாக! நான் கஞ்சன்தான்! எம் மனசு கருமி மனசுதான்!' என்ற வெட்கம் கலந்த எண்ணம் அவர் உள்ளத்தில் இழைத்தது. அது எரிச்சலாக மாறியது. 'எம் பணத்தை வெச்சு நான் என்னமும் பண்ணிக்கிடுதேன். அது பொறுக்கல்லியே மத்தவங்களுக்கு! 'கஞ்சப் பிள்ளை'ன்னு சொல்லுதாகளாமே, 'கஞ்சப் பிள்ளை'னு! வெக்கங்கெட்ட மூதிய!'

சிவசைலம் பிள்ளையைக் கஞ்சப் பிள்ளை என்று சிலர் சொல்வதுண்டு. அது அவர் உள்ளத்தை ஆழமாகப் புண்படுத்தி இருந்தது.

பிள்ளை மீண்டும் பிள்ளைமார் வீதி வழியே நடந்தார். அதே இருட்டு! அதே அமைதி! பூச்சிகளின் ரகசியக் கூச்சல்!

தம் வீட்டருகில் சற்றுத் தயங்கி நின்றார். இருவடியா பிள்ளை வீட்டிலிருந்து மங்கிய விளக்கொளி வீசிற்று. மூன்று நாட்களுக்கு முன்பு உயிரோடு உலவிய இருவடியா பிள்ளை இன்று இல்லை. அவருடைய மனைவி மக்களின் கதறல்தான் மிச்சம். அந்த விளக்கொளிகூட அழுவதுபோல் தோன்றியது. சிவசைலம் பிள்ளை மாண்டு போனால் அழுவதற்கு யார் இருக்கிறார்கள்? அவர் உள்ளம் கலங்கியது. ஓடி ஓடி அத்தனை நாட்களாக அவர் சேர்த்த பணத்தை விட்டால் அவருக்கு வேறு துணை என்ன?

துணை ஒன்று முன்பொரு சமயம் அவரைத் தேடி வந்ததும் உண்டு. கிறுக் கடையாம் வடிவு ஆச்சி அவருடைய வீடு தேடி வந்தாள். அவளுக்குத் திக்கில்லே. சின்ன வயசில் கணவனை விழுங்கி விட்டு வெள்ளைச் சேலை கட்டியவள். அவளுக்குச் சோறு போட்ட அவளுடைய அண்ணனும் கண்ணை மூடி விடவே சிவசைலம் பிள்ளையைத் தஞ்சமடைந்தாள். இதே போன்ற கருக்கலில்தான் அவள் வந்தாள். வெட, வெடவென்று ஒடிந்து விழுவது போன்ற சரீரம். மூட்டையொன்றைச் சுமந்து கொண்டிருந்தாள். பிள்ளையின் உள்ளத்தின் ஒரு மூலையில் கொஞ்சம் இரக்கம்! ஆனால் அவளுக்கும் சாப்பாடு போட வேண்டுமே! பணம் கிடு, கிடுவென்று கரைந்து போகுமே! அவள் தமக்குச் சமைத்துப் போட வேண்டியதில்லை என்று சிவசைலம் பிள்ளை ஒரேயடியாகக் கூறி விட்டார்.

அது எவ்வளவு பெரிய முட்டாள்தனம் என்பதை அவரால் இப்போதுதான் உணர முடிந்தது. அவளாவது பிள்ளைக்கு உற்ற துணையாக இருந்திருப்பாளே! இனி அதை எண்ணிப் பயன் என்ன?

ஏன்? இப்போது மட்டும் அவள் எங்கே போய் விட்டாள்? அடுத்த தெருவில் தேங்குழல் சுட்டு விற்றுக் கொண்டுதானே இருக்கிறாள்! ஆனால் இனிமேல் இந்தக் கஞ்சப் பிள்ளைக்குச் சமைத்துப் போட அவள் ஒப்புக் கொள்வாளா?

பிள்ளை மெள்ள நடந்தார். பிள்ளைமார் வீதியைத் தாண்டிக் கொஞ்ச தூரம் சென்றால் ஒரு கிணறு உண்டு. அதை ஒட்டியிருந்த சிறு வாய்க்காலைத் தாண்டிச் சென்றால் ஒரு முள் வெளி. அதைப் பிளந்து கொண்டு செல்லும் ஒற்றையடிப் பாதை 'நாடாக்கமார்' வசிக்கும் தெருவை அடையும். நாடார்கள் இப்போது அதிகம் இருப்பதாகக் கூற முடியாது. பலர் வெளியூருக்குச் சென்று தங்கி விட்டார்கள். வடிவு ஆச்சி அந்தத் தெருவில்தான் தங்கியிருந்தாள். அவள் சுடும் ருசியான தேங்குழல் அந்த ஊரில் மிகப் பிரசித்தம்.

இருட்டு, பிள்ளையை வழி மறிக்கவில்லை. அவர் ஆச்சியின் வீட்டை நெருங்கினார். இப்





# செல்லம் அழுதது ஏன்?

பிற்பகல் வேளை: பித்தான்கள் உடைந்து காலரிலும் கைகளிலும் கிழிந்திருந்த என் கணவரின் சட்டைகளை நான் தைத்துக்கொண்டிருந்தேன். அதே சமயம் பக்கத்து வீட்டுப் பப்பியுடன் விளையாடிக் கொண்டிருந்த என் குழந்தை செல்லம் திடீரென வீரிட்டு அழுதாள்; அந்த அதிர்ச்சியில் தையல் ஊசியே என் கையில் ஏறிவிட்டது. கோபத்துடன் திண்ணைக்கு ஓடிவந்தேன். அதே சமயம், பப்பியின் தாயார் கண்ணம்மாவும் அங்கு ஓடி வந்து செல்லத்தை வாரியெடுத்து சமாதானம் செய்ய முயன்றாள்: "ஆரு அடிச்சாம்மா என் செல்லக் குழந்தையை?"

"மாமி, ப...ப...பப்பி என் பொம்மையோட கவுனை அழுக்காக்கிட்டா, மாமி!" என்று விசித்து விசித்துக் கூறினாள் செல்லம்.

"அவ்வளவுதானே. பப்பியை நாம்ப நல்லா அடிச்சுட்டு, உன் பொம்மைக்கு புதுசா ஒரு கவுன் வாங்கிப் போட்டுடலாம், வா!" என்று தேற்றிவிட்டு, இரு குழந்தைகளையும் தன்னோடு அழைத்துச் சென்றாள் கண்ணம்மா. கண்ணம்மாவிடம் காணப்படும் தங்கமான குணங்களில் ஒன்று, தன் குழந்தைகளைப் போலவே பிறர் குழந்தைகளையும் அரவணைத்துக்கொள்ளும் தன்மை. தன் தந்தை பணக்காரர் என்ற கர்வம் எள்ளளவும் அவளிடம் கிடையாது.-இவ்வாறாக எண்ணமிட்ட வண்ணம் அப்படியே கண்ணயர்ந்து விட்டேன். அப்புறம் செல்லம் வந்து என்னை எழுப்பினாள். கண்விழித்துப் பார்த்ததும், செல்லத்தின் கையிலிருந்த பொம்மைக்குப் புதுக்கவுன் போட்டிருந்தது தென்பட்டது—முன்பிருந்ததைப் போலவே இருந்தது இந்தக் கவுனும். இந்த ஏற்பாடு எனக்குப் பிடிக்கவில்லை. இதை ஆட்சேபிக்க கண்ணம்மாவின் வீட்டுக்கே சென்றேன்.

கண்ணம்மாவோ "புதிதாகக் கவுன் ஏதும் வாங்கவில்லையே. சில துணிகளை நான் துவைக்க வேண்டியிருந்தது. கையோடு கையாக அந்தக் கவுனையும் அலசினேன்" என்றாள். அழகாயிருக்கிறதே பேச்சு! வீட்டில் துணிகளைத் துவைத்துக் கொள்ளும் வழக்கம் எங்களுக்கே கிடையாது; சலவை செய்ய வெளியே அனுப்புகிறோம். அப்படியிருக்க, மோதிரக் கையினால் துணி துவைப்பதாகக் கூறினால், நம்புகிறவள் நானா? "அதெப்படியம்மா துவைத்தீர்கள், அடித்துத் துவைக்கும் சத்தங்கூடக் கேட்காமல்!" என்றேன்.

என் பேச்சில் நம்பிக்கை இல்லாவிட்டால் இதோ இந்தத் துணிகளைப் பாருங்கள். இப்போது தான் இஸ்திரிபோட்டு முடித்தேன். ஆனால் அடித்துத் துவைக்கும் சத்தம் கேட்காத காரணம்.........."



ஆனால் என் கவனமோ அவன் பேச்சில் லயிக்கவில்லை. வெகு பளிச்சென்று சுத்தமாக விளங்கிய அந்தத் துணிகள் மீது என் பார்வையைப் பறிகொடுத்துவிட்டேன். எனினும், அதே சமயம் என் மனதை உறுத்திய விஷயம் வேறொன்று: தன் செய்கையைப்பற்றி நாலுபேர் என்ன நினைப்பார்கள் என்பதை யோசித்துப் பார்த்தானா இவன்? இதையே நான் இவனிடம் கேட்டதும், அவன் சிரித்து விட்டு "நல்ல கேள்வி கேட்டாய். என் வேலையை செய்வதற்கு நான் ஏன் கூச்சப் படவேண்டும். தாம் தூம் விவகாரமே எனக்குப் பிடிப்பதில்லை. என் கையாலேயே நான் துணிகளைத் துவைத்துக்கொள்வதில் எவ்வளவோ சிக்கனமிருக்கிறது. அன்றாடம் உடுத்திக்கொள்ள சுத்தமான துணிகள் கிடைப்பதோடு அவை நீடித்து நிற்கவும் செய்கின்றன" என்றான்.

"நீடித்து உழைக்கிறதாவது; அதென்னமாக? எங்கள் வீட்டுத்துணிகள் விறுவிறுவென்று கிழிந்துவிடுவதும் வாங்கின சுருக்கோடு விட்டுப்போய் விடுவதும் சர்வ சாதாரணமாகிவிட்டன; வருஷத்துக்குப் பலதடவை புதுத்துணிகள் வாங்கி மாளவில்லை!"



"அடித்துத் துவைப்பதால்தான் அவை கிழிந்துவிடுகின்றன. ஆனால் நாங்களோ அடித்துத் துவைக்காமல் ஸன்லைட் சோப்பினால் சலவை செய்கிறோம்"

பரிசுத்தமுள்ள சிறந்த சோப்பான ஸன்லைட் ஏராளமான நுரை கொழிக்கிறது என்றும், கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலுமுள்ள எல்லா அழுக்குகளையும் நொடிப்பொழுதில் அகற்றிவிடும் நுரை அதனுடையதுதான் என்றும் விளக்கிக்கூறினான் கண்ணம்மா.

இப்போதெல்லாம் நாலுபேர் நினைப்பதைப்பற்றி நானும் அக்கறைப்படுவதில்லை. துணிகளை வீட்டிலேயே ஸன்லைட் சோப்பினால் சலவை செய்துவிடுகிறேன். அது சிக்கனமான சோப் என்றும், சிறிதும் பெரிதுமாக சுமார் நாற்பதைம்பது உருப்படிகளை சுத்தமாகவும் பளிச்சென்றும் வெளுப்பதற்கு ஒரே ஒரு வில்லை ஸன்லைட்டே போதுமானது என்றும் கண்டு கொண்டேன். இப்போதெல்லாம் அன்றாடம் உடுத்துவதற்குத் தூய்மையான துணிகள் எங்களெல்லோருக்கும் கிடைத்துவருகின்றன: கிழிசல்கள் தைக்கப்பட்ட ஆடைகளை அணிந்து கொள்ளும் நிலைமையும் காலர்களையும், கைகளையும் கோட்டுக்குள் மறைத்துக்கொள்ளும் அவசியமும் இனி என் கணவருக்குக் கிடையாது. சிக்கனம் என்றால் எல்லா விதத்திலும் சிக்கனம். ஒரு குடும்பப் பெண் மணிக்கு இதைவிட வேறென்ன வேண்டும்?




S. 3 966-50 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

போது மட்டும் என்ன? அவன் சம்மதித்தால் அவனையும் அழைத்துக் கொண்டு திருச்செந்தூர் சென்று விடலாம். அவன் சமைத்துப் போடுவதைச் சாப்பிட்டுக் கொண்டு கந்தன் காலடியிலேயே காலத்தைக் கழிக்கலாம்.

ஆச்சி விழித்துக் கொண்டுதான் இருந்தாள். அந்தச் சின்ன வீட்டின் முன் பக்கத்தில் 'திகு திகு'வென்று எரியும் அடுப்பின் முன்பாகக் குந்துக் காலிட்டு உட்கார்ந்திருந்தாள். இட்டிலி வெந்து கொண்டிருந்தது. 'இந்த வியாபாரம் வேறு?' என்று எண்ணியவாறு மேலும் நெருங்கினார் பிள்ளை. 'இவளுக்கும் எனக்குமாகச் சேர்த்துக் குறை வாழ்க்கைக்கும் இந்த இரண்டாயிரம் பத்தாது?'

வீட்டருகில் நின்று அவளையே பார்த்தார் பிள்ளை. இந்த ஊருக்கு வந்த புதிதில் அவள் எவ்வளவு ஒல்லியாக இருந்தாள்! இப்போது 'கொழு கொழு'வென்று பருத்திருந்தாள். முகம் ஊதிப் போய் விகாரமாக இருந்தது. அவளுக்கு என்ன நினைவோ! கன்னத்தில் கையூன்றி ஆடாது அசையாது அமர்ந்து கொண்டிருந்தாள், இருட்டு நேரத்தில் தனியாகப் பிசாசு போல்....

பிள்ளைக்கு மறைந்திருந்து பார்ப்பதற்கு என்னவோபோல் இருந்தது. 'உள்ளுக்குப் போவமா' என்று எண்ணியவர் மறு கணம் திடுக்கிட்டார். வடிவாச்சிக்குப் பக்கத்தில் ஏழெட்டு வயதுடைய மூன்று சிறுவர்கள் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்போதுதான் அவருக்கு நினைவு வந்தது. தான் பிழைக்க ஆரம்பித்த பிறகு வடிவாச்சி அந்த அநாதைப் பிள்ளைகளுக்கு, தானே சோறு போட்டு வளர்த்து வந்தாள். பிள்ளை தம்மையும் அவளையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டார். அவளுக்குத்தான் எத்துணை துணிச்சலான உள்ளம்!

அரவங்காட்டாமல் அங்கிருந்து நகர்ந்தார் பிள்ளை. அவர் அழைத்தாலும் அவள் சமைத்துப்போட வரமாட்டாள். வந்தாலும் அந்தச் சிறுவர்களுக்கும் சேர்த்துச் சாப்பாடு போடப் பிள்ளைக்கு மனம் வருமா?

அந்த இரண்டாயிரம் ரூபாய் உண்டியலுக்கும் போகவில்லை. வடிவு ஆச்சியின் பக்கமும் திரும்பவில்லை. சிவசைலம் பிள்ளையின் நெஞ்சப் பைக்குள்ளேயே முடங்கிக் கொண்டு உறுத்திக் கொண்டிருந்தது. நெஞ்சம் குமைந்து கொண்டுதான் இருந்தது. 'அந்தப் பணத்தை என்னவாவது செய்ய வேண்டும்!'

நாடாக்கமார் தெருவைத் தாண்டினால் அடுத்தாற்போல் மாதா கோயில் தெரு.

அந்தப் பெயரே அவரை மெய்சிலிர்க்கச் செய்தது. அந்தத் தெருவில்தானே அவன் இருந்தான். அவன்தான், கட்டிப் பயல் பரமசிவன். சிவசைலம் பிள்ளையின் வளர்ப்பு மகன். அவருடைய விரிந்த நெஞ்சின்மீதே உருண்டு புரண்டு ஆளாகி எழுந்து நின்றவன்.

''ஏலே, ஐயா, பரமசிவம்! குடிக்கத் தண்ணி குடுலே!'' என்பார் பிள்ளை.

''எதிலேயும் சிக்கனமா இருக்கச் சொல்லுதீக. ஆனால் தண்ணியை மட்டும் குடிச்சிட்டே இருக்கிய!'' என்று சொல்லிக்கொண்டே தண்ணீர் கொடுப்பான் செல்லப் பிள்ளை.

செல்லப் பிள்ளையின் பேச்சு சிவசைலம் பிள்ளைக்குக் கோபத்தைக் கொடுக்காது. சிரிப்பைத் தரும். தொந்தி அதிர அவர் சிரிப்பார். அந்த அதிர்ச்சியைக் கண்டு பரமசிவனும் சிரிப்பான். அந்தப் பயல் இப்போது மாதா கோயில் தெருவில் முன்பின் தெரியாத ஒரு கிறிஸ்துவப் பெண்ணுக்காக ஒரு சின்னஞ்சிறு வீட்டுக்குள் புகுந்து கொண்டிருக்கிறானே!

அந்தக் கிறிஸ்துவப் பெண்ணும், பயல் பரமசிவனும் எப்படிச் சந்தித்தார்கள், பழகினார்கள் என்பதெல்லாம் யாருக்கும் தெரியாத ரகசியம். பயல் என்னவோ அவளைத்தான் கட்டிக் கொள்வேன் என்று தீர்மானமாகச் சொல்லி விட்டான். சிவசைலம் பிள்ளை நயமாகச் சொன்னார்; மிரட்டிப் பார்த்தார். எதற்கும் அவன் அசைந்து கொடுக்கவில்லை. கடைசியில், 'எப்பிடியாச்சும் போலே, முட்டா மூதி!' என்று கூறி விட்டுப் பரமசிவத்துக்கு ஒரு முழுக்குப் போட்டார்.

ஆனால் விஷயம் அத்துடன் முடியவில்லை. பிள்ளைமார் எல்லாரும் குதித்தெழுந்தார்கள். ''சாதிவிட்டுச் சாதி எப்படிவே கலியாணம் முடிக்கது? நமக்கில்லா தலை குனிவு! எம் பையனு இருந்தாக்கே முதுகுத் தோலை உரிச்சி உப்பை வெச்சிடுவேன்!'' என்றார் வீரபாகு பிள்ளை.

''அண்ணாச்சி சொல்லுதாகன்னு அதிலே அருத்தம் இல்லாமியா? ஊரு கூட்டி இந்த விவகாரத்தைத் தீர்த்துப்பிடுவம்!'' என்றார் மற்றொரு பிள்ளை.

ஊர் கூடிற்று. அதாவது மருங்கலின் கிராமத்துப் பிள்ளைமார்களில் முக்கியமானவர்களும், ஊர் மணியம், கோயில் அர்ச்சகர் ஆகியோரும் வீரபாகு பிள்ளை வீட்டில் கூடினார்கள். காலஞ்சென்ற திருவடியா பிள்ளை தான் நியாயம் தீர்த்து வைத்தார், பையன் பரமசிவத்தைச் சிவசைலம் பிள்ளை தள்ளி வைத்துவிட வேண்டியதுதான் என்று.

''என்ன சிவசைலம் பிள்ளைவாள்! பேசாமியே இருக்கிறீளே? விசயத்தை விட்டுச் சொல்லுறியளா? பையன்தான் ஒரேயடியாப் பேச்சைக் கருக்கிப்பிட்டான்.'' அர்ச்சகர், பிள்ளையைப் பேச வைக்க முயன்றார். ஆனால் பிள்ளை வாயைத் திறக்கவே இல்லை. 'சொந்தப் பிள்ளையா இருந்தா இப்பிடி எனக்கு எதிரா போயிருப்பானா?' என்று எண்ணிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தார்.

திருவடியா பிள்ளையே தனியாக அவரை அழைத்துச் சமாதானம் கூறினார். ''கவலைப் பட்டுக்காதிய பிள்ளை! ஊர் வளமொறையை அனுசரிக்கப் பய நடந்துக்கிடலை. அவம்பாட்டுக்குத் தனியா இருந்துக்கிடுறான்.''

வீரபாகு பிள்ளை, வைரங்கள் ஒளி தெறிக்கக் கையை அசைத்தவாறு, ''யாரும் போவாண்டாம். இருங்க. எல்லோரும் இருந்து சாப்பிட்டுப் போவீக!'' என்றார். ''இந்த ஆளுகள்ளாம் இப்படித்தான். செலவு செய்ய அஞ்ச மாட்டாளுக. ஆனுக்கி அந்த விக்கும் கணக்கு வெச்சித் திருப்பி வாங்கிடுவாளுக. இல்லாட்டி சொல்லிக் காட்டுவாளுக!'' என்று கவலைப்பட்டவாறே வீரபாகு பிள்ளையின் சாப்பாட்டை மிளகு வற்றலோடு கலைத்தார் சிவசைலம் பிள்ளை.

பையன் பரமசிவம், படித்த படிப்பை வைத்துக் கொண்டு பக்கத்து ஊர் பஞ்சாயத்து போர்டில் பில் கலெக்டரானான். எப்

போதாவது சைக்கிளில் அவன் செல்வ தைச் சிவசைலம் பிள்ளை பார்ப்ப துண்டு. அவன் மனைவி எப்படி யிருப் பாள் என்பது கூடப் பிள்ளைக்குத் தெரியாது. சிவசைலம் பிள்ளைக்குத் தம் மனைவியின் நினைவு வந்தது. அவள் உயிர் வாழ்ந்த நாள்கைந்து ஆண்டுகளில் எப்படி அடங்கி ஒடுங்கிக் கிடந்தாள்!

நினைவில் மிதந்தவாறு அவர் பரம சிவனின் வீட்டை நெருங்கி விட் டார். கதவு மூடி யிருந்தது. உள்ளே யும் ஒரே இருள். சன்னல் வழியாக ஒன்றும் தோன்றவில்லை. ஒரு மெல் லிய திரை தொங்கிற்று. வீட்டுக்கு வெளியே 'குரோட்டன்ஸ்' வேறு. 'இப்படி மதம் மாறிப் போய் விட் டானே!' என்ற வேதனை அவர் நெஞ்சை அழுத்தியது. நெஞ்சில் பணச் சுருளின் உறுத்தல் வேறு. அந்தப் பணத்தைக் கோயிலுக்கும் அதற்கும் இதற்கும் கொடுப்பதற்குப் பதில் பையன் பரமசிவத்துக்குக் கொடுத்து விட்டால் என்ன?

பணத்தை யாரிடமாவது கொடுத்து விட வேண்டும். இருவடியா பிள்ளை யைப் போல் தாமும் வாயைப் பிளந்து கொள்ள எவ்வளவு நாட்களாகும்? ஆனால் பிள்ளைமாரெல்லாம் விலக்கி வைத்திருக்கும் பையனோடு எப்படிச் சேர்ந்திருக்க முடியும்? முடியாது தாம். வேண்டுமானால் பழநி ராமேசு வரம் என்று பயணப்பட்டு விடலாம். தாம் பயணப்பட்டால் பையனுக்கு என்னத்தைத் தருவது? அதிகமில்லா விட்டாலும் ஒரு நூறு ரூபாயாவது சன்னல் வழியாகப் போட்டு விட் டால் என்ன? அதை அவன் என்ன செய்வான்? அந்தப் பெண்ணுக்கு எதையாவது வாங்கித் தருவான்.

சிவசைலம் பிள்ளைக்குத் தாம் ஒரணா இரண்டணா செலவு செய்ய அஞ்சி இரவு நேரத்தில் சாப்பாடின்றி நாட் களைக் கடத்துவது நினைவுக்கு வந்தது. அப்படிச் சேர்த்த பணத்தைப் பையன் கண்டபடி பாழாக்கலாமா?

பின்னே பெருமூச்சு விட்டவாறு அங் கிருந்து நகர்ந்தார். விண்மீன்கள் பொல பொல வென்று மங்கலான ஒளியைத் தாங்கிக் கொண்டே இருந் தன. விடிவதற்கு இன்னும் வெகு நேரம் இருந்தது. மாதாகோவில் தெருவைத் தாண்டிப் பிள்ளை ஏரிப் பக்கம் நடையைக் கட்டினார்.

ஏரியை ஒட்டினாற்போல் மருத மரங் களும் பனைமரங்களும் மங்கலாகத் தெரிந்தன. ஒவ்வொரு மரமும் ஒவ் வொரு கருங்குன்றாக தோன்றியது. நடந்துகொண்டே யிருந்த பிள்ளை ஒரு மரத்தின் உச்சாணிக் கிளையில் ஏதோ வெண்மையாகத் தெரிவதைக் கண்டு திடுக்கிட்டார். அவருக்குத் திரு வடியாபிள்ளையின் மரணம் நினைவுக்கு வந்தது. அவருடைய மரணம் நேர்



## 'அவர்களும் பிழைக்கணும்!'

"பாதசாரிகளுக்கு உன்னால் ஆபத்து! நீ இரண்டு வருஷம் கார் ஓட்டக் கூடாது. உன் 'லைசென்ஸை' 'கான்சல்' செய்து விட்டேன்!"

"நீதிபதி ஐயா! அப்படிச் சொல் கிறீங்களே, நான் பிழைக்க வேண் டாமா?"

"என்ன செய்வது? பாதசாரிகளும் பிழைக்க வேண்டுமே!"

## உப்புச்சப்பில்லே!

"என்ன சார் அவர் பேச்சு 'சப்' என்று இருக்கிறது. நீங்கள் எப்படிக் கேட்டுச் சகித்துக் கொண்டிருக் கிறீர்கள்?"

"கொஞ்சநாளா, நான் பத்தியம். உப்பு சேர்ப்பதில்லே. அதனால்தான்."

## ஞாபகமறதி!

**கணவர்:** எனக்கு வயது ஐம்ப தாகிறது. என் வாழ்க்கையில் நான் பொய் சொன்னதாகவே எனக்கு ஞாபகம் இல்லே.

**மனைவி:** உங்களுக்கு ஞாபக சக்தி குறைந்து போச்சு. எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கு. நான் வேணுமானால் சொல்லட்டுமா?

## மன்னிப்பு!

ஒரு தனவான் தாம் சொல்லித் தம் குமாஸ்தாவை விட்டுக் கடிதம் எழுதச் சொன்னார். எழுதி முடிந்தவுடன் குமாஸ்தா 'அவ்வளவுதானா இன்னும் ஏதேனும் எழுத வேண்டுமா?' என்று கேட்டார். "உம்...என் எழுத்தில் அநேக பிழைகளையும், கையெழுத்து மோசமாக இருப்பதையும் மன்னிக்க வும். தவிர மோசமான பேனாவினால் எழுதப் பட்டிருப்பதையும் மன்னிப் பீர்கள் என்று நம்புகிறேன்" என்று சேர்த்துக் கொள்ளச் சொன்னார்.

## அங்குமிருந்தேன்!

**பாலன்:** இந்த ஊரில் உள்ள எல்லா ஆஸ்பத்திரிகளிலும் நான் இருந்து விட்டேன்.

**முருகன்:** அப்படியா....பிரசவ ஆஸ்பத்திரியில் கூடவா?

**பாலன்:** ஆமாம்! நான் அங்குதான் பிறந்தேன்.

## சுருக்கு வழி!

ஒரு ஓட்டைக் காரை ஓட்டிக் கொண்டு வந்தவர் ஒரு வழிப் போக் கனைப் பார்த்து, "இந்த ஊர் ரயில்வே ஸ்டேஷனுக்கு வெகு சீக்கிரமாகப் போக ஒரு வழி சொல்ல முடியுமா?" என்று கேட்டார்.

"காரை விட்டு உடனே இறங்கி அந்த நேர் ரோடு வழியா ஓடுங்கள்!"

கையானதல்ல என்று பேசிக் கொண்டார்கள். தாமே கருக்கிட்டுக் கொண்டார் என்றார்கள் சிலர். சிலர் வயிற்றுவலி ஏற்பட்டு ஆளைக் கொன்று விட்டது என்றார்கள். உண்மை விவரம் என்னவென்று யாருக்குமே தெரியாது.

ஏரியை அடுத்து அருந்தடம் பனைவிளை.

அப்பா! எங்கே பார்த்தாலும் ஒரே பனைமரங்கள். எப்படித்தான் இவ்வளவு பனைமரங்கள் முளைத்தனவோ! அந்தப் பனங் காட்டில்தான் கள்ளச் சாராயம் காய்ச்சு வார்கள். அங்கேதான் சில சமயங்களில் கொலை நிகழ்வதுண்டு. அந்தப் பக்கத்தில் தான் இருட்டுகளும்...

பிள்ளைக்குச் 'சொரே'லென்றது. இரண் டாயிரம் ரூபாயை வைத்துக் கொண்டு அந்த நேரத்தில் அங்கே வரலாமா?

சற்றுத் தூரத்தில் கனன்று கொண்டிருந்த அடுப்பின் மீது பனஞ்சாறு கொதித்துக் கொண்டிருந்தது. அருகே அஞ்சி நடுங்கிய வாறு ஒரு பெண் நின்றாள். அவளுக்கு எதிரே உருண்டு திரண்ட முரட்டு மனிதன் ஒருவன் கையில் கத்தியுடன் நின்று கொண் டிருந்தான். அவள் காதுக் கம்மலைக் கழற்றிக் கொண்டிருந்தாள்.

பிள்ளை நடுங்கி ஒடுங்கி வெலவெலத்துப் போனார். நெஞ்சை உரசிய இரண்டாயிரம் ரூபாய் நெஞ்சை சுட்டியாகக் குத்தியது. அரவம் காட்டாமல் திரும்பினார். ஆனால் அந்தப் பனங்காட்டுக் கள்ளன் அசந்தவ னில்லை. "அயா! ரொம்பத் தூரமா போறீக?" என்றான். பிள்ளை குறுகிப் போய் நின்றார். போயிற்று! எல்லாம் போயிற்று!

பனஞ்சாறு கொதித்துக் குமுறியது. தரை யில் மின்னணுக்களைப் போல் வரிசையாக வைத் திருந்த தேங்காய்ச் சிரட்டைகள் திகைத்துப் போய் நின்றன. கள்ளன் கால் கொலுசை யும் கழற்றச் சொன்னான். ஆனால் அவளால் அதைக் கழற்ற முடியவில்லை. பக்கத்தில் இருந்த மேடை மீது காலைத் தூக்கி வைத்து அவளையே கழற்றிக் கொள்ளச் சொன்னான். கள்ளன் குனிந்தான். மறு கணம்!—

"ஐயோ!" என்று அலறியவாறு துடித் துக் கீழே விழுந்தான் கள்ளன். பாளையி லிருந்த அகலமான கரண்டியில் கொதிக்கும் பாகை அள்ளி அவன் மேல் ஊற்றி விட்டாள் அந்தப் பெண். பாகைத் துடைத்த இட மெல்லாம் உடல் தோலும் நீங்கிற்று. கழுத் திலும் முதுகிலும் தோல் நீங்கி ஒரே ரத்தக் களரி. சகிக்க முடியாத காட்சி.

அடுத்த கணம், கள்ளன் போட்டு விட்ட நகைகளை எடுத்துக் கொண்டு கிழக்கு நோக்கி ஓடினாள் அவள். மூச்சு இரைக்க மேற்கே ஓடினார் பிள்ளை!

எப்படித்தான் வீட்டை அடைந்தார் என் பது பிள்ளைக்கே தெரியவில்லை! எப்படியோ உயிர் பிழைத்தது! பணம் பிழைத்தது!

பணம்! பைக்குள்ளிருந்த அதனை அவசரமாக வெளியே எடுத்தார். பாயை விலக்கிப் பெட் டிக்குள் வைத்து மூடினார். பாயை அதன்மேல் போட்டுப் படுத்துச் சிந்தனையில் மூழ்கினார்.

எல்லாம் இந்தப் பணத்தை வெளியே எடுத்த தால் வந்த வினைதான். எந்தக் காரியத்தி லும் 'சட்'டென ஒரு முடிவு எடுக்க முடியாத நிலையே ஏன் ஏற்படுகிறது? எதிலுமே ஒரு ஆதாயத்தைத் தேடும் சுபாவம் இருப்பதால் தானோ? தமக்கு மட்டுந்தானா அத்தகைய சுபாவம் இருக்கிறது? அந்த மண் ராசியே அப்படித்தானே! பணத்தை வெளியே எடுத்த கொஞ்ச நேரத்துக்குள் என்னென்ன அவஸ்தைகள்! இனி பணத்தை அப்படியே பூட்டி வைத்திருக்கக் கூடாது! பின் என்ன செய்வது?

மாதாகோயில் மணி 'டாண், டாண்' என்று ஒலித்தது. மணி ஐந்தாகி விட்டது. பிள்ளை புரண்டு படுத்தவாறு யோசித்தார். 'பணத்தை என்ன செய்வது?' தம்மால் தருமம் செய்ய முடியும் என்பது வெறும் நினைப்புத்தான். தாம் எதற்காகத் தருமம் செய்ய வேண்டும்? உலகில் எத்தனையோ ஏழைகள் இருக்கிறார்கள். அவர்கள்தான் அதிகமாக இருக்கிறார்கள். இவர் தருமம் செய்வதால் அவர்களுடைய கஷ்டம் போய் விடுமா? கோபுரத்தைப் பொம்மையா தாங்குகிறது?

அப்படியானால் அவர் செய்யக் கூடியது ஒன்றுதான். அந்தப் பணத்தைப் பூதம் காப்பதுபோல் காத்துக் கொண்டிராமல், மனத்தைத் தளர்த்திச் செலவு செய்ய வேண் டியதுதான்! இனி வயிற்றைக் கட்டக் கூடாது, வாயைக் கட்டக்கூடாது. மற்றப் பிள்ளைமார் செய்வதுபோல் தாராளமாகச் செலவு செய்ய வேண்டியதுதான். இனி தாமே சமைத்துச் சாப்பிடக் கூடாது. ஆறுமுக நாயினார் சைவ ஓட்டலில் நெய்ச் சாப்பாடுதான் சாப்பிடவேண்டும். இன்றும்..

பிள்ளையின் சிந்தனை தடைப்பட்டது. இந்த அளவில் செலவு செய்தால் பணம் இரண்டே ஆண்டுகளில் கரைந்துவிடுமே. ஒன்று செய்ய லாம். இனி காலை நேரத்தில் மிச்சம் மிஞ்சாடி களைத் தொடுகறி ஒன்றும் இல்லாமல் தின்னும் வழக்கத்தை நிறுத்திவிட வேண்டும். இனி மேல் காலை வேளையில் நாயினார் கடைப் பலகாரம்தான்.

கடைசியாக ஒரு வழியாகப் பணத்தைச் செலவு செய்ய நியாயமான வழியைத் நிர் மானித்து விட்டதில் பிள்ளையின் அகமும் முகமும் மலர்ந்தன. இனி இந்தத் தீர்மா னத்தை மாற்றக் கூடாது. 'கள்ளனைக் கண்ட விஷயத்தை விடிந்தபின் நாயினார் கடையில் வெச்சி மத்தவங்களுக்குச் சொல் லிப்பிடுவோம்!'

அசதியில் பிள்ளையின் இமைகள் அழுந்தின. ஆனால் 'சட்'டென விழித்துக் கொண்டார். அவருக்கு மற்றொன்று நினைவுக்கு வந்தது. 'காலைக்காக வேண்டி நேற்றிரவு எடுத்து வைத்த 'நீத்துப் பாகம்' அடுக்களையில் இருக்கிறதே! அதை வீண் அடிக்கலாமா? எதற்காக அதை வீணடிக்க வேண்டும்? இன்று அதைத்தான் சாப்பிட வேண்டும்! நாளையிலிருந்து நிச்சயமாக, மிக நிச்சயமாக நாயினார் கடைப்பலகாரங்கள்தான்...' பிள்ளை கனவு காண ஆரம்பித்தார்.

மறுநாள் அந்த நாயினார் கடைப்பலகாரத் தைக் கஞ்சப்பிள்ளை நிச்சயமாகச் சுவைத் திருப்பார் என்றே நான் நம்புகிறேன்! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

# கண்கள் உறங்காவோ?



### அத்தியாயம் 15

## விந்தை மனிதர்

மற்றெந்த விஷயத்தில் தாணுவதி அசடாக இருந்தாலும் சரி, வண்டி ஓட்டு வதில் மட்டும் சிங்கம் என்றால் சிங்கம் தான். அவன் கையில் மூக்கணாங் கயிற் றைப் பிடித்தானானால் எந்தச் சண்டி மாட்டையும் ஓட வைத்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான். "ஏலே!" என்று தனக்கு இயற்கையாக அமைந் திருந்த கர்ணகடூரமான குரலில் சிங்கம் போலவே ஒரு கர்ஜனை செய்தானானால் போதும். ஒன்று மாடு குடல் பதறி ஓட ஆரம்பித்து விடும்; இல்லாவிட்டால் மூர்ச்சை போட்டுப் படுத்துவிடும்!

இப்படிப்பட்ட ஒருவன் தன் சொந்த உபயோகத்துக்கென்று வைத்துக் கொண்டிருக்கும் மாடுகள் சாதாரண மாகவா இருக்கும்? தாணுவதியின் காளைகள் இரண்டும் அசல் ஓங்கோல் ஜாதி. பக்கத்து வீரம்பட்டிச் சந்தையில் ஐந்நூறு ரூபாய்க்கு வாங்கியவை. அவ னுக்கு மாடு பார்த்து வாங்குவதிலும் நல்ல கொட்டம் உண்டு. ஊரில் 'ஏடாசி' பேசுகிறவர்கள் தாணுவதியின் இந்தத் திறமையைப் பற்றிக் குறிப்பிடும் போது, "பாம்பறியும் பாம்பின் கால்" என் பார்கள். இதை அவர்கள் கூசாமல் தாணுவதியின் முன்பே கூடச் சொல்லு வார்கள். அப்பேச்சிலுள்ள இடக்கரடக் கல் அவனுடைய மூளைக்கு அவ்வளவு சுலபமாக எட்டி விடுமா என்ன? பல்லை இளித்துக் கொண்டு, "ஆங்...இப்பத் தான் இதைப் புதுசாக் கண்டு பிடிச்சிட் டாரு இவரு" என்பான்.

அவனுடைய மயிலை இரண்டும் அன்று கொடி வால் தூக்கிக் கொண்டு காற்றாகப் பறந்தன. அவை வந்த வேகத் துக்கு வீணு புறப்பட்டுச் சென்று ஏறக் குறைய ஒரு மணிக்குப் பிறகே தாணுவதி புறப்பட்டிருந்த போதிலும், அவன் வந்து சேர்ந்த பதினைந்து நிமிஷங்களுக் கெல்லாம் அவனும் காலனியை வந்த டைந்திருக்கவேண்டும். ஆனால் இடையே எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழ்ந்து விட்டது.

பாசனக் கால்வாய்களில் ஒன்று ரஸ்தா வைக் குறுக்கே கடந்து சென்றது. அந்த இடத்தில் ரஸ்தாவில் ஒரு பாலம் கட்டிக் கொண்டிருந்தார்கள். எனவே ரஸ்தா வழியாக வரும் வாகனங்கள் பாலம் உருவாகிக் கொண்டிருந்த இடத்தில் மட்டும் ரஸ்தாவை விட்டுக் கீழே இறங்கி, கால்வாயைக் கடந்து மீண்டும் ரஸ்தா வில் ஏறிச் செல்ல வேண்டியிருந்தது. அந்தச் சிறிய கிளைப் பாதை மிகவும் கரடுமுரடானது. அதில் தலைதெறிக்கும் வேகத்தில் வண்டி ஓட்டிக் கொண்டு வந்தான் தாணுவதி.

வண்டி ஒரு மேட்டில் ஏறிப் பள்ளத்தில் 'சரக்'கென்று இறங்கிய போது அதன் அச்சு முறிந்து விட்டது. நல்ல வேளை, வண்டிதான் ஒருபுறமாகச் சாய்ந்து கொண்டதேயன்றி, அவனுக்கோ மாடுக ளுக்கோ அடி ஒன்றும் படவில்லை.

ஆனால் தாணுவதி வண்டி சேதமடைந்த தற்காகச் சிறிதும் வருந்தவில்லை. தான் மேற்கொண்ட கண்காணிப்புப் பிரயா ணம் தடைப்பட்டு விட்டதே என்றுதான் அவன் வருந்தினான்.

இப்படி நடுவழியில் அவன் தத்தளித் துக் கொண்டிருந்த போதுதான் வீணுவை இறக்கி விட்டு விட்டு மாட சாமி வண்டியைக் கேசவபுரத்துக்குத் திருப்பி ஓட்டிக் கொண்டு வந்தான். அவனை நிறுத்தி, அந்த வண்டியில் ஊருக் குச் சென்று, வேறு வண்டி கட்டிக் கொண்டு மீண்டும் அவன் புங்கனூற்றுக் காலனிக்கு வருவதற்குள் வீணுவும் சுந்தர மும் விகாஸுடன் கோவிலுக்குப் போய் விட்டனர்.

சுந்தரத்தின் கார் இன்ஜினீயர் அலுவ லகத்தின் வாசலில் நிறுத்தப்பட்டிருந்த தால் அவர்கள் அங்கேதான் இருக் கிறார்கள் என்று தாணுவதி தன் வண்டி யையும் அங்கே அவிழ்த்துப் போட்டு விட்டு அலுவலகத்துக்குள்ளே சென்று பார்த்தான்.

அவன் முன்பு இங்கே பல தடவைகள் வந்திருந்தான். ஆதலால் அலுவலகத்தில் எல்லாரையும் அவனுக்குத் தெரியும்.



எனவே நேரே தலைமைக் குமாஸ்தாவிடம் சென்று, வீணாவும் சுந்தரமும் இங்கே வந்தார்களா என்று விசாரித்தான். அவர்கள் வந்து இன்ஜினீயரிடம் சிறிது நேரம் பேசிவிட்டு வெளியே போய் விட்டார்கள் என்று தலைமைக் குமாஸ்தா அறிவித்தார். உடனே அவன் கால் நடையாக அணை ஸ்தலத்தை நோக்கி வேகமாகக் கிளம்பி விட்டான்.

அந்த இடம் முழுதும் அவன் சுற்றினான். பலரை விசாரித்தான். கடைசியில் மேஸ்திரி ஒருவன் தங்கள் மேற்பார்வை இன்ஜினீயர் ஒருவருடன் ஓர் இளவயது ஆணும் பெண்ணும் மலைக் கோயிலுக்குச் சென்று கொண்டிருந்ததாகச் சொன்னான். சுந்தரம் வீணாவுக்கு மலைக் கோயிலைக் காட்டக் கூட்டிச் சென்றிருக்கலாம் என்று எண்ணித் தானுவதி அங்கே வந்து கொண் டிருந்த போதுதான், விகாஸ் வீசிய தட்டு அவன் மண்டையை விர்ரென்று வந்து தாக்கி விட்டது.



# மாயாவி

தானுவதி அடிக்கொரு தடவை தன்னைச் 'சிங்கம்-சிங்கம்' என்று மார் தட்டிக் கொள்வானேயன்றி, உண்மையில் அவன் வெறும் கோழை; பயந்தாங் கொள்ளி. அதிலும் ரத்தத்தைக் கண்டு விட்டால் அவனுக்கு மயக்கம் போட்டு விடும். மற்றவர் உடலிலிருந்து ரத்தம் வெளிப்படுவதைக் கண்டாலே மயக்கமடைந்து விடுவானென்றால் தன் தலையிலிருந்து ரத்தம் பீரிடுவதைக் கண்டால் அவன் தைரியமாக இருந்து விடுவானா? அப்படியே மயங்கி வழியில் சாய்ந்துவிட்டான்.

அவன் மயங்கிவிழுந்து சிறிது நேரமான பிறகு, மலையடிவாரத்தில் பூக்கடை வைத்திருந்த சிலர் அவ்வழியாக வந்தனர். அவர்களும் தானுவதியை நன்கு அறிந்தவர்கள். ஆதலால், "அடடா! நம்ம கிராம முனிசீப் ஐயாவில்லா!" என்று கூறியவாறு அவனைத் தூக்கி ஒரு மரத்தடியில் கொண்டு போட்டு, ஓடிப் போய்த் தண்ணீர் கொண்டு வந்து அவன் முகத்தில் தெளித்து நினைவடையச் செய்தனர்.

பிறகு அவனைக் கைத்தாங்கலாக அணை ஸ்தலத்திலிருந்த முதல் சிகிச்சை நிலையத்துக்கு அழைத்துச் சென்று மண்டைக் காயத்துக்குக் கட்டுப் போடச் செய்தனர். பிறகு தானுவதி தன் வண்டியை இன்ஜினீயரின் அலுவலக வாசலில் நிறுத்தியிருந்ததைக் கேட்டறிந்து அவனை அங்கே கூட்டிச் சென்று விட்டு விட்டு, "சித்த நேரம் வண்டியிலே படுத்துக் கண்ணயப்பாறிட்டு ஊருக்குப் போங்க, ஐயா!" என்று கூறி விடைபெற்றுச் சென்றனர்.

காயத்திலிருந்து ஏராளமான ரத்தம் வடிந்து விட்டதால் தானுவதிக்கும் அப்பொழுது அயர்வாகத்தான் இருந்தது. அவன், தன் தலையில் யார் இப்படித் தட்டை வீசிக் காயப்படுத்தியிருப்பார்கள் என்பதைச் சிந்தித்தவாறு வண்டியில் நீட்டி நிமிர்ந்து படுத்து விட்டான். படுத்

துச் சிறிது நேரமாவதற்குள் அவன் குறட்டை விட்டுக் கொண்டு தூங்கவும் ஆரம்பித்து விட்டான்.

*　　　　*　　　　*

அவன் தூங்கிக்கொண்டிருக்கட்டும். இடையே நாம் மேலே கோவிலில் என்ன நடந்தது என்பதைப் பார்க்கலாம்.

வீணாவும் சுந்தரமும் விகாஸ் இப்படிச் செய்வானென்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அர்ச்சகர் கையிலிருந்து அவன் தட்டைப் பறித்தபோது அதை வீணாவிடம் கொடுக்கப் போகிறான் என்று தான் சுந்தரம் நினைத்தான்; வீணாவும் அப்படித்தான் நினைத்தாள். ஆனால் அவன் அதைச் சட்டென்று வெளியே வீசி விட்டது அவர்களை நினைத்தறியாத அதிர்ச்சிக்குள்ளாக்கியது. அந்த அதிர்ச்சியில் நிமிஷ நேரம் அவர்களுக்கு ஒன்றுமே பேசத் தோன்றவில்லை.

பிறகு வீணாவின் அதிர்ச்சி விசனமாக மாறியது. "இது என்ன கோபம் விகாஸ்? தெய்வத்தின் பிரசாதத்தையா இப்படி வீசி எறிவது? உன் கோபத்தைத் தெய்வத்திடமா காட்டுவது?" என்று அவள் விசனத்தோடு சொன்னாள்.

"ஆமாம், வேறு யாரிடம் காட்டுவது? இவர்கள் செய்யும் அக்கிரமத்தையெல்லாம் பார்த்துக் கொண்டு வாளா இருக்கும் தெய்வத்தை அன்றி வேறு யாரை நான் கோபிப்பது வீணா? யாரை நோவது?" என்றான் விகாஸ்.

"இது தவறு விகாஸ். நீ காரணமின்றி நம் பெரியோர்களை அவமதித்து விட்டாய். தெய்வத்தை அவமதித்து விட்டாய்."

"ஆனால் 'அந்தப் பெரியோர்களும் தெய்வமும் உன்னை அவமதிக்கலாமா?"

இவன் நமது தொல்லையைப் பெருக்க வந்திருக்கும் மற்றொரு சுந்தரம் என எண்ணிய வீணா அவனுடன் மேலே விவாதிக்கவில்லை. அவன் அர்ச்சகரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதற்காகத் திரும்பினாள். ஆனால் அர்ச்சகர் அங்கே இருந்தால்தானே? அவர் தர்மகர்த்தாவிடம் புகார் செய்வதற்குப் போய் விட்டார்.

அவர்கள் சந்நிதானத்திலிருந்து கிளம்பிக் கொண்டிருந்த போது தர்மகர்த்தாவும் அர்ச்சகரும் எதிரே வந்தனர். தர்மகர்த்தா மிகவும் கோபத்துடன் இருந்தார். விகாஸின் செயல் கிரிமினல் குற்றமென்றும், அவன் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளாவிட்டால், தாம் கோர்ட்டில் வழக்கு தாக்கல் செய்யப் போவதாகவும் அவர் கத்தினார்.

"கோர்ட் என்ன ஐயா? நீங்கள் தர்மபரிபாலனம் செய்யும் இந்தக் கோவிலிலுள்ள தெய்வத்திடம் வேண்டுமானாலும் போய் முறையிட்டுக் கொள்ளுங்கள். நீங்கள் செய்ததுதான் தவறு; நான் செய்தது சிறிதும் தவறில்லை என்று யாரிடமும் கூறத் தயங்க மாட்டேன்" என்று அவருக்கு மேல் பலமாகக் கூக்குரலிட்டான் விகாஸ்.

வீணா அவனை அடக்க முயன்றாள். தர்மகர்த்தாவிடம் விகாஸின் சார்பில் தான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதாகக் கூறினாள். ஆனால் இருவரும் ஒத்துக் கொள்ளவில்லை.

தர்மகர்த்தாவுக்கும் விகாஸுக்கும் இடையே வாக்குவாதம் பலத்துக் கொண்டிருந்த சமயம் வீணா குறுக்கிட்டு, "ஐயா! நான் எவ்வளவோ கேட்டுக் கொண்டாயிற்று. இருவரும் கேட்பதாக இல்லை. வீணில் ஏன் வாய்ச் சண்டை போட்டுத் தொண்டை நீரை வற்றடித்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவர் செய்தது தவறென்றால் நீங்கள் தேவையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறி விட்டு, "வா, விகாஸ்" என்று கூறி, அவன் கையைப் பிடித்துக் கொண்டு கிளம்பி விட்டாள்.

மலையிலிருந்து கீழே இறங்கி வந்த பிறகுதான் அவர்களுக்கு விகாஸ் வீசிய தட்டு யாரோ ஒருவரைக் காயப்படுத்தி விட்டது என்ற வரையில் செய்தி எட்டியது. அவர்கள் வாங்கிச் சென்ற தட்டு மூன்றும் பூக்கடைக்காரருடையது. ஆகையால் இரண்டு தட்டுக்களை மட்டும் திருப்பிக் கொடுத்த போது சுந்தரம், மூன்றாவது தட்டைப் பிரசாதத்துடன் பிராகாரத்துச் சன்னலில் வைத்திருந்ததாகவும் காற்றடித்து அது கீழே விழுந்து விட்டதாகவும் ஒரு பொய்யைக் கூறி, அதற்குரிய விலையைக் கொடுத்து விடுவதாகச் சொன்னான். அப்பொழுதுதான் கடைக்காரன் விஷயத்தை அறிவித்தான். ஆனால் அது தானுவதியின் மண்டையில் விழுந்த விவரம் அவனுக்கே தெரியாததலால், காயமடைந்தது யார் என்று வீணா கேட்டபோது அவன் தனக்குத் தெரியாதென்று கையை விரித்து விட்டான்.

இருந்தாலும் வீணாவின் மனவருத்தத்தைப் பெருக்க இந்தச் செய்தியும் சேர்ந்து கொண்டது. விகாஸும் வருந்தினான். "பாவம், அவர் யாரென்று தெரிந்தால் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சிகிச்சைக்குப் பணமும் கொடுக்கலாம். விசாரித்துப் பார்க்க வேண்டும்", என்றான் அவன்.

"தெய்வத்தை அவமதித்ததன் பலனைப் பார்த்தாயா விகாஸ்?" என்று வீணா கடக் கடக் கூறினாள்.

விகாஸுக்கும் அது அப்பொழுது இலேசாக மனத்தில் பட்டிருக்க வேண்டும். ஆயினும் அதைக் காட்டிக் கொள்ளாமல் சிரித்து மழுப்பி விட்டு, "போகலாமா?" என்று கேட்டான்.

சுந்தரம் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒன்றரை ஆகி விட்டது. "சரி, வாருங்கள் வீணா. நாம் அணைஸ்தலத்திலுள்ள 'கான்டீ'னில் டிபன் சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்றான்.

மூவரும் டிபன் சாப்பிட்டு விட்டு இன்ஜினியரின் அலுவலகத்துக்கு வந்தபோது மணி இரண்டாகி விட்டது. அலுவலகத்தை நெருங்கியதும், சுந்தரத்தின் கார் அருகில் வண்டி ஒன்று நிறுத்தப்பட்




# பிரபாத் ப்ராடக்ட்ஸ்

விளக்கை சற்றே தேய்த்த மாத்திரத்தில் இட்ட பணியை நிறைவேற்ற, அல்லாதீன் முன்னிலையில் தோன்றும் அந்த பூதம் விசுவாசம் உள்ளது, நம்பத்தகுந்தது ...... பிரபாத் தயாரிப்புகளும் அதே அளவுக்கு விசுவாசம் உள்ளவை, நம்பத் தகுந்தவை ... 'பணி செய்து கிடப்பதே' கடமையாகக் கொண்டவை.

" இந்தியாவில் முதன்முதலானவை ... இன்றும் தலைசிறந்தவை!"



பிரபாத் (ஸ்டவ் & லாம்ப்) ப்ராடக்ட்ஸ்
கோ. ப்ரை. லிட்.,

தொரபில் சேம்பர்ஸ், பர்சீ பஜார் ஸ்ட்ரீட்,
போர்ட், பம்பாய்—1,

TAM

KSK



இந்த மனோரம்யமான

# பிரகாசமான பெயின்டை

## ஒரு முறை வாங்கி உபயோகித்துப் பாருங்கள்!



ஷாலிமார் ஸூபர்லாக் ஸின்தடிக் எனமல்— உட்புறமோ, வெளிப்புறமோ, எந்தப் புறமானாலும் பூசலாம். அதி சீக்கிரத்தில் உலர்ந்து, அதிக நாள் மிகப் பளபளப்புடன் இருக்கக் கூடியது. வீடுகளிலும், தொழிற்சாலைகளிலும், ப்ரஷ்ஷினாலாவது, ஸ்ப்ரேயினாலாவது அல்லது டிப்பிங் முறையிலாவது, எல்லாவித இடத்திலும் பூசலாம்.

38 விதக் கலர்களில் இவை பெயின்ட், காலன் டின்களிலும், 5 காலன் டிரம்களிலும் கிடைக்கின்றன. கலர்கள் ஒன்றோடொன்று கலக்கலாம்.





## ஷாலிமார் ஸூபர்லாக் ஸின்தடிக் எனமல்



**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., PRIVATE LTD.**

Calcutta • Bombay • Madras • New Delhi • Kanpur

Be Bright Call Madras 55965

டிருந்ததை வீணு கவனித்தாள். "ஒருகால் அப்பாதான் என்னை அழைத்துவர வண்டியைத் திருப்பி அனுப்பியிருக்கிருர் போலிருக்கிறது, மிஸ்டர் சுந்தரம்! இருங்கள், வண்டியில் யாரோ படுத்திருக்கிருர்கள். மாடசாமியா என்று பார்த்து விட்டு வருகிறேன்" என்று அவள் வண்டியை நோக்கி நடந்தாள்.

அதனுள்ளே தானுவதி படுத்திருந்ததைக் கண்டதும் அவள் திடுக்குற்ருள். தன்னையும் சுந்தரத்தையும் கண்காணிக்க வேண்டுமென்று காலையில் அத்தையும் தானுவதியும் பேசிக் கொண்டது அவளுக்கு நினைவுக்கு வந்தது. ஒருகால் அதற்காகத்தான் அத்தை இவளை இங்கே அனுப்பியிருப்பாளோ? அப்படியிருந்தால், சே! அத்தைக்கு எத்தனை மட்டமான மனப்போக்கு?

அவள் இதையெல்லாம் சுந்தரத்தின் கவனத்துக்குக் கொண்டு வந்து தகராறை வளர்க்க விரும்பவில்லை. ஆகையால் திரும்பி வந்து, "இல்லை, படுத்திருப்பது மாடசாமி இல்லை. வேறு யாரோ ஒருவர்" என்ருள்.

"இன்ஜினீயரைப் பார்க்கக் கண்டிராக்டர்கள் அடிக்கடி வண்டியில் வருவது உண்டு. அவர்களில் யாராவது ஒருவரின் வண்டியாக இருக்கலாம். வாருங்கள், அலுவலகத்துக்குப் போவோம்" என்ருன் விகாஸ்.

குலசேகரம் அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தார். விகாஸ் அவர்களுடன் வருவதைக் கண்டு அவர், "நீ எங்கே வந்தாய் விகாஸ்?" என்று கேட்டார்.

அவன், தானும் வீணுவும் சிறு பிராயத்து நண்பர்கள் என்பதை அவருக்கு விவரித்தான்.

"அப்படியா? ரொம்ப மகிழ்ச்சி. வீணு இங்கே ஒரு டின்பென்சரி ஆரம்பிக்கப் போகிருள்; தெரியுமோ, இல்லையோ?"

"தெரியும்; வீணு சொன்னுள்."

"சரி, ஏன் நிற்கிறீர்கள்? உட்காருங்கள் எல்லாரும்" என்ருர் குலசேகரம். அவர்கள் உட்கார்ந்ததும், "வீட்டில் உங்களுக்கு டிபன் தயாரிக்கச் சொல்லியிருக்கிறேன். விகாஸ்! நீயும் இவர்களுடன் டிபன் சாப்பிடலாம். டிபனை இங்கே எடுத்து வரச் சொல்லட்டுமா, அல்லது வீட்டுக்குப் போய்ச் சாப்பிடுகிறீர்களா?" என்று அவர் கேட்டார்.

அவருடைய பேரன்பு வீணுவின் உள்ளத்தைத் தொட்டது.

"வந்தனம். நாங்கள் அணை காண்டீனில் டிபன் சாப்பிட்டு விட்டுத்தான் வருகிறோம்" என்ருன் சுந்தரம்.

"ஏன் அப்பா? எனக்குச் சிரமம் கொடுக்கக் கூடாது என்ரு? என்னை அப்படி வேற்றுமையாக நினைக்காதே, சுந்தரம். நான் என்னை என் சொந்த குழந்தைகளுக்கு மட்டுமே தந்தை என்று நினைப்பதில்லை. இந்த அணை வேலையில் ஈடுபட்டுள்ள இளைஞர்கள், யுவதிகள் எல்லாருமே என் குழந்தைகள் எனக் கருது பவன். அது சரி, கோவிலுக்குப் போய் வந்தீர்களே; பிரசாதம் எங்கே எனக்கு?"

"பிரசாதத்தைப் பூக்கடையிலே விட்டு விட்டோம். எடுத்து வருவதற்கு எங்களிடம் பை ஒன்றும் இல்லையே" என்ருன் சுந்தரம்.

"நல்ல பிள்ளைகள் அப்பா நீங்கள்; பை இல்லாவிட்டால் காகிதத்தில் சுற்றித் தரச் சொல்கிறது. கோவிலுக்குப் போய் வந்தவர்கள், எனக்குத்தான் பிரசாதம் கொண்டு வரவில்லையென்றாலும், வீட்டுக்குக் கூடவா வெறுங் கையை வீசிக் கொண்டு போவது? அதிலும் உங்கள் ஊரில் பலருக்குச் சென்னிமலை முருகன் தான் குலதெய்வம் என்று வேறு கேள்விப்பட்டேன்."

தமிழ் தெரியாத விகாஸ் அங்கே இருந்த காரணத்தால் அவர்கள் உரையாடல் ஆங்கிலத்திலேயே நடைபெற்றது. எனவே குலசேகரம் இப்படிக் கூறியதும் விகாஸ் முகத்தைச் சுளித்துக் கொண்டு, "ஆமாம், கோவிலுமாச்சு! பிரசாதமுமாச்சு!" என்று வெறுப்புடன் கூறினன்.

"ஆரம்பித்து விட்டாயா உன் எதிர்ப் பிரசார வேலையை!" என்று சிரித்தார் குலசேகரம். பிறகு வீணுவை நோக்கி, "ஏன் அம்மா! குழந்தைப் பிராயத்திலும் விகாஸ் இப்படி நாஸ்திகனுகத்தான் இருந்தானு?" என்று கேட்டார்.

வீணு பதில் சொல்லுவதற்குள் விகாஸே பேச ஆரம்பித்து விட்டான். "நான் பேசுவது நாஸ்திகம் இல்லை, இன்ஜினீயர் சார்! அல்லது நீங்கள் நினைத்திருப்பது போல் நான் தெய்வத்தை நம்பாதவனும் இல்லை. தெய்வத்தை நம்பாதவனுக இருந்தால் இன்று ஏன் இவர்களுடன் கோவிலுக்குப் போகிறேன்?"

"ஓ! நீயும் இவர்களுடன் கோவிலுக்குப் போயிருந்தாயா? பரவாயில்லையே!"

"ஆமாம், சார்; அங்கே வந்து ஒரு பெரிய கிரிமினல் வழக்கை உண்டுபண்ணி விட்டான் விகாஸ்" என்ருள் வீணு.

"கிரிமினல் வழக்கா?"

வீணு அங்கே நடந்தது முழுவதையும் அவருக்குக் கூறினுள். அதைக் கேட்டதும் குலசேகரத்தின் முகத்தில் விசனம் படிந்தது. "உண்மையில் எனக்குக்கூட இம்மாதிரி அர்த்தமற்ற கட்டுப்பாடுகள் பிடிக்கவில்லைதான். ஆனால் என்ன செய்வது அம்மா? நம் முன்னேர் ஏதோ காரண காரியங்களோடுதான் இவைகளை ஏற்படுத்தியிருக்க வேண்டும்; அவற்றை எதிர்ப்பதே பாவம் என்றல்லவா பெரும்பாலானவர்கள் நம்புகிருர்கள்" என்ருர் அவர். பிறகு விகாஸிடம், "பாவம், உன் இள ரத்தம் கொதித்து விட்டதா, விகாஸ்? ஆம், கொதிக்கத்தான் செய்யும். என் ரத்தமும் அந்தக் காலத்தில் இப்படித்தானே கொதித்தது" என்று கூறிவிட்டு, சிறு முறுவலுடன் எதிரே அமர்ந்திருந்த அம்மூவரின் முகங்களையும் ஒருமுறை நோக்கினர்.



பத்திரிகைச் செய்தி இலாகா உதவி அதிகாரி திரு சௌம்யநாராயணன் அவர்களின் புதல்வி சௌ. சுலோசனாவைத் திரு ராஜகோபாலன் மணந்தார்.



சாரி அட்வர்டைஸிங் திரு ஜி. கே. சாரியின் புதல்வர் திரு கோபாலனுக்கும் சௌ. சுசீலாவுக்கும் திருமணம் வெகு விமரிசையாக நடந்தது.

---

அவர்கள் அவர் பேச்சின் இறுதியில் தொக்கி நின்ற உத்தியினால் கவரப்பட்டு, ஏதோ ரசமான செய்தியை அறிவிக்கப் போகிறாரென்று ஆர்வம் ததும்பச் சலனமின்றி அமர்ந்திருந்தனர்.

ஒரு நிமிஷ அமைதிக்குப் பிறகு குலசேகரம் மீண்டும் பேச ஆரம்பித்தார். "என் கதை இங்கே பலருக்குத் தெரியாது. அதைப் பெருமையுடன் கூறிக் கொள்ளவோ, அல்லது பிரசாரக் கருவியாகப் பயன்படுத்தவோ நான் விரும்பவில்லை. ஆயினும் இன்று விகாஸின் கொதிப்பைக் கேட்ட போது அதை உங்களிடம் சொல்லத் தோன்றுகிறது."

"விகாஸ் மட்டும் இன்றையச் சம்பவத்தால் கொதிப்படையவில்லை, சார்; என் ரத்தமும் கொதிக்கத்தான் செய்தது. ஆனால் நான் அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை!" என்று அவரை இடைமறித்துச் சிறிது பெருமையுடன் கூறினான் சுந்தரம்.

"ஆமாம் சார், மிஸ்டர் சுந்தரமும் விகாஸின் கட்சிதான்" என்று புன்சிரிப்புடன் தலையாட்டினாள் வீணா.

"பேஷ்! அப்படியானால் நாங்கள் மூவருமே ஒரு கட்சியினர்தாம்" என்று சிரித்தார் குலசேகரம்.

'என்ன! முதுமை எட்டிக் கொண்டிருக்கும் இவரும் இவர்கள் கட்சியா!' என்று வீணா ஒருகணம் திடுக்கிட்டாள். "ஏதோ சொல்வதாகக் கூறினீர்களே!" என்று அவன் அவருக்கு நினைவூட்டினான்.

"ஆமாம்! நான் சொல்லப் போவது என் வாழ்க்கைக் கதைதான். இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் உலகம் இத்தனை முன்னேற்றம் அடைந்திருக்கவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆயினும் அக்காலத்தில்கூட வாழ்விழந்த பெண்கள் விஷயமாகச் சமூகம் கையாண்டு வந்த பழக்க வழக்கங்கள் என்னைக் கொதிப்படையச் செய்தன. அந்தக் காலத்திலேயே அவை என்னைப் புரட்சி செய்ய வைத்தன."

"இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னா? ஐயோ! நீங்கள் சமூகத்தால் நசுக்கிடுக்கப்பட்டிருப்பீர்களே!" என்று திகிலுடன் கூறினான் விகாஸ்.

---



ஜே. வால்டர் தாம்சன் கம்பெனியைச் சேர்ந்த திரு. வி. ராமசேதுவுக்கும் அன்னபூரணிக்கும் திருமணம் நடந்தது.



திரு ஜீ. ஹரிஹரன் பி. ஏ. ஏ. ஐ. எஸ். ஐ.க்கும் சௌ. இந்திராவுக்கும் லக்னௌவில் விவாகம் நடைபெற்றது.



பம்பாய் டெலிபோன்ஸ் ரெஸிடெண்ட் ஆடிட் ஆபீசர் திரு. கே. என். சுப்பிரமணியம் புதல்வர் திரு வேம்பு சௌ. சரோஜாவை மணந்தார்.



திரு ராமசாமி அய்யங்கார் புதல்வர் திரு எம். ஆர். வெங்கடாச்சாரிக்கும் சௌ. வனலக்ஷ்மிக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தது.

'நான் நசுக்கத்தான் பட்டேன்; ஆனால் என்னை ஒடுக்க யாராலும் முடியவில்லை. என் புரட்சியில் நான் வெற்றி கண்டு விட்டேன். அதற்குச் சான்றாக நிற்பவள் என் மனைவி சியாமளி. ஆம், விகாஸ், அவள் ஒரு மாஜி விதவை!"

"என்ன!" என்று அவர்கள் மூவரும் ஒருங்கே அலறினர்.

"உங்களால் நம்ப முடியவில்லை அல்லவா? ஆனால் அது முற்றிலும் உண்மை. அப்பொழுது சியாமளி கன்னிப் பெண். கல்லூரியில் என்னோடு படித்துக் கொண்டிருந்தாள். நாங்கள் ஒரே ஊர்க்காரர்கள்; உறவினர்கள்.

"எங்கள் குடும்பத்தினரிடையே இருந்த கட்டு எங்களிடையேயும் வளர்ந்து, நாளடைவில் காதலாகப் பரிணமித்தது. பெற்றோரும் எங்களுக்குத் திருமணம் நடத்தி விட முடிவு செய்தனர். ஆனால் எனக்குத் திடீரென்று ஓர் இன்ஜினியரிங் உபகாரச் சம்பளம் கிடைத்தது. உடனே இங்கிலாந்து செல்ல வேண்டியதாயிற்று. ஆறு ஆண்டுகள் இங்கிலாந்தில் கழித்துவிட்டு, சியாமளி எனக்காகக் காத்திருப்பாள் என்று ஆவலோடு ஊர் திரும்பினேன்.

"அவள் காத்துத்தான் இருந்தாள். ஆனால் எனக்காக அன்று; சமூகத்தின் ஏச்சுப் பேச்சுக்களைக் கேட்க! அதன் கொடுமைகளைத் தாங்க! ஆம் சுந்தரம், நான் சென்ற மறு ஆண்டிலே அவளுக்கு வேறிடத்தில் திருமணம் நடந்தது. ஆறே மாதங்களில் அவள் கணவனையும் இழந்து விட்டாள். ஆனால் இந்த விவரம் தெரிந்த பின்னரும் நான் அவளையே மணந்து கொள்வேனென்று ஒற்றைக் காலில் நின்றேன். சியாமளி உட்பட எல்லாரும் எனது அந்த எண்ணமே தவறென்று கண்டித்தனர். ஆனால் நான் மற்றவர்களை லட்சியம் செய்யவில்லை. சியாமளியின் மனம் மாறும் என்று பொறுமையோடு காத்திருந்தேன்.

"அவள் மனம் மாறத்தான் மாறிற்று. சமூகத்தின் அர்த்தமற்ற, அளவிறந்த கொடுமைகளை யாரால்தான் தாங்க முடியும்? 'இதிலிருந்து எனக்கு விடுதலையே இல்லையா?' என்று அவளே என்னிடம் வந்து கதறினாள். 'உண்டு;' மறு



பம்பாய் திரு வி. ரங்கநாதன் அவர்களுக்கும் சௌ. மைதிலிக்கும் சமீபத்தில் விமரிசையாக விவாகம் நடந்தது.



திரு கிருஷ்ணமூர்த்தி அவர்களின் மருமான் சௌ. பத்மாவுக்கும் திரு சுந்தரராஜனுக்கும் திருமணம் நடந்தது.

மணத்தில் அல்லது மறு உலகில்!' என்றேன் நான். மறு உலகம் செல்லுவதற்கு விரும்பாத அவள் எனக்குக் கழுத்தை நீட்டினாள்.

"ஊரார் வரவில்லை; உற்றார் வரவில்லை. ஆயினும் ஊரறிய அவளுக்கு மாலையிட்டேன். பெற்றோர் எங்களுக்கு வீட்டில் இடமில்லை என்றனர். ஊரார் எங்களுக்கு ஊரில் இடமில்லை என்றனர். வீட்டையும் ஊரையும் விட்டே கிளம்பி விட்டோம். சென்ற இடத்திலெல்லாம், சியாமளி மறுமணம் செய்து கொண்டவள் என்பது வெளியானதும் நாங்கள் ஒதுக்கப்பட்டோம்; துன்பப்படுத்தப் பட்டோம். ஆனால் நாங்கள் மருளவில்லை; மனம் தளரவில்லை. எல்லா ஏச்சு–பேச்சுக்களையும் இன்முகத்துடன் ஏற்றுக் கொண்டோம். பிறகு?

"சமூகம் எங்களுக்குத் தீட்டிய கறையைக் காலம் அழித்து விட்டது. பல ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுது எல்லாம் மறக்கப்பட்டு விட்டது. சொன்னால் வியப்படைவீர்கள். எங்களுக்கு இடமில்லை என்று விரட்டப்பட்ட சொந்த ஊரிலேயே இன்று எங்கள் மூத்த மகள் வாழ்க்கைப்பட்டிருக்கிறாள்.

"இதையெல்லாம் இப்பொழுது எதற்காக உங்களிடம் சொன்னேனென்றால், நீங்கள் சமூகப் புரட்சி செய்ய விரும்பினால் நன்றாகச் செய்யுங்கள். உங்களைப் போல் ஆயிரம் ஆயிரம் இளைஞர்கள் இம்மாதிரிப் புரட்சி செய்துதான் நம் சமுதாயத்திலுள்ள இந்த அழுக்கை அகற்ற வேண்டும். ஆனால் வெறும் வாய்ப் பேச்சு மட்டும் பேசிப் பயனில்லை. அல்லது விகாஸ் செய்தது போல் அர்த்தமற்ற முறையில் கோபம் கொள்ளுவதிலும் பயனில்லை. நேரடிச் செயலில் ஈடுபட வேண்டும். உங்கள் புரட்சியினால் ஓர் அபலைப் பெண்ணின் வாழ்வாவது மீட்கப்பட்டது என்றிருக்க வேண்டும். ஆனால் அம்மாதிரி செய்யத் துணிவதானால் நீங்களும் உங்களோடு இணை சேரும் பெண்ணும் மகத்தான தியாகங்களுக்குத் தயாராக இருக்க வேண்டும் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தளராத உறுதியும், எது வந்தாலும் சகித்துக் கொள்ளும் பொறுமையும், காரியத்தில் கண்ணும் உங்களுக்கு இருக்க வேண்டும். 'சும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத்தானும் தாதன்' என்பது போல் வாழ்விழந்த பெண் ஒருத்தியை மணந்துகொண்டு விட்டுப் பிறகு சமூகத்தின் எதிர்ப்புகளுக்குப் பயந்து அவளை நட்டாற்றில் விட்டு ஓடி ஒளியக் கூடாது."

குலசேகரத்தின் இந்த நீண்ட பேச்சு, சுந்தரத்தையும் விகாஸையும் மட்டுமல்ல, வீணாவையும் புல்லரிக்கச்செய்தது. நேற்று முதல் சுந்தரமும், இன்று விகாஸும் இவ்விஷயமாகப் பேசியபோது அவள் அதை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. இளவயதின் குறுகுறுப்பு என்று தான் கருதினாள். ஆனால் இப்பொழுது அன்பே உருவான வேறொரு பெரியவரும் அதே கருத்தைப் பிரதிபலித்த போது அவளுக்கு 'இது சிறிது சிந்திக்க வேண்டிய காரியந்தான் போலிருக்கிறது' என்ற வரையில் அக்கறை ஏற்பட்டது.

பிறகு குலசேகரம், சுந்தரத்துக்கும் வீணாவுக்கும் ஆகவேண்டிய காரியங்களில் கவனம் செலுத்தினார். சுந்தரம் வேலையை ஒப்புக்கொள்ளும் படலம் நிறைவேறியது. வீணாவின் டிஸ்பென்ஸரிக்கு விகாஸ் வசித்து வந்த தெருவிலேயே காலியாக இருந்த ஒரு வீட்டைக் கொடுக்க ஏற்பாடுகள் செய்தார். பிறகு சுந்தரத்திடம், "உன்னைப் பகல் பன்னிரண்டு மணியிலிருந்து இரவு ஏழு மணி வரையிலுள்ள 'ஷிப்டி'ல் போடுகிறேன். வீணா, தன் டிஸ்பென்ஸரி நேரத்தை மாலையில் வைத்துக் கொள்ளலாம். சற்று முன் பின்னாகத் தங்க நேரிட்டாலும் உன்னிடம் கார் இருக்கிறது; அவளை வீட்டில் கொண்டு விட்டு விடலாம்" என்றும் ஒரு திட்டம் வகுத்துக் கொடுத்தார். கடைசியில், "இனி நீங்கள் வீட்டுக்குப் போகலாம். உங்கள் தொழில்களுக்குச் செந்தில்வேல் முருகன் துணை நின்று வெற்றி தருவார்" என்று மனப் பூர்வமாக ஆசி கூறி அனுப்பி வைத்தார்.

சுந்தரமும் வீணாவும் விகாஸுடன் அவன் வீட்டுக்குச் சென்று சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, நான்கு மணி அளவில் காலனியிலிருந்து புறப்பட்டனர். காரில் சென்று கொண்டிருந்த போது அவர்கள் ஒரு வார்த்தை என்றால், ஒரு வார்த்தைகூடப் பேசிக் கொள்ளவில்லை. ஆம், அவ்விருவர் மனத்தையும் அப்பொழுது அந்த விந்தை மனிதர் குலசேகரத்தின் சொற்கள் நிறைத்திருந்தன.

* * *

சுந்தரமும் வீணாவும் அலுவலகத்துக்கு வந்ததோ, அங்கிருந்து காரை எடுத்துக் கொண்டு சென்றதோ, ஒன்றும் தெரியாது தாணுவதிக்கு. அவன் அடித்துப் போட்ட மாடாக உறங்கிக் கொண்டிருந்தான். அவனை இங்கே கூட்டி வந்து விட்ட பூக்கடைக்காரர்கள் மாலை ஐந்து மணிக்குத் தங்கள் கடைக்குத் திரும்பிக் கொண்டிருந்த போது, அவன் இன்னும் தூங்கிக் கொண்டிருந்ததைக் கண்டு எழுப்பி விட்டனர்.

தாணுவதி அடித்துப் புடைத்துக் கொண்டு எழுந்து இன்ஜினீயரின் அலுவலகத்துக்குச் சென்று வீணாவும் சுந்தரமும் திரும்பி வந்தார்களா என்று விசாரித்தான். அவர்கள் ஊருக்குச் சென்று விட்டதை அறிந்ததும் அவன் முகத்தில் ஏமாற்றம் வழிந்தது. "சே! இந்தப் புஷ்பவன மாமா மகன் பெரிய இடைஞ்சலாகவல்ல இருப்பான் போலிருக்கு. இவனை அவள்கூட ஒட்ட விடாமல் இருக்க ஏதாச்சும் சட்டுப் புட்டுனு செய்துதான் ஆகணும்!" என்று முணுமுணுத்தவாறு வண்டியைப் பூட்டிக் கொண்டு ஊரை நோக்கிக் கிளம்பினான் அந்தக் காபந்துப் பேர்வழி! (தொடரும்)



# தணிகைக் குமரன்

அருணகிரியார் பிறந்து வளர்ந்து முருகன் அருள் பெற்றுப் பாடத் துவங்கியது அண்ணாமலையிலே. "எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே எந்தை நினது அருள் புகழை இயம்பிடல் வேண்டும்" என்று பிரார்த்தித்த வண்ணமாய், அண்ணாமலையிலிருந்து புறப்பட்டு ஊர் ஊராகக் கடந்து, குன்று குன்றாக ஏறி, முருகன் கோயில் கொண்டிருக்கும் தலம் தலமாகச் சென்று, திருப்புகழ் பாடி மகிழ்ந்தவர் அவர். இப்படிப் பல தலங்களுக்கும் சென்றவர், திருவண்ணாமலைக்குப் பக்கத்திலே சுமார் அறுபது மைல் தூரத்திலே உள்ள திருத்தணிகைக்குச் சென்று அங்கு கோயில்கொண்டுள்ள முருகப் பெருமானைக் கண்டு அவன் புகழ் பாட, பல வருஷ காலமாக வாய்ப்புக் கிடைக்காமல் இருந்திருக்கிறார். இப்படி இருந்தவர் கடைசியாக ஒரு நாள் தணிகைக்கே வந்திருக்கிறார், மலை மீது ஏறியிருக்கிறார். இந்திர நீலச் சுனையில் மூழ்கியிருக்கிறார். ஆபத்சகாய விநாயகரை வணங்கியிருக்கிறார். அருள் ஞானச் சக்திதரனாகிய தணிகைக் குமரேசனைக் கண்டு தொழுதிருக்கிறார்.

அந்த நிலையில் உள்ளத்திலே ஒரு தாபம். 'நாம் பிறந்து வளர்ந்த ஊருக்கு இவ்வளவு பக்கத்திலேயுள்ள இந்த முருகன் சந்நிதிக்கு இத்தனை நாட்களாக வர இயலாமற் போனதற்குக் காரணம் என்ன?' என்று தம் உள்ளத்தையே கேட்கிறார். இந்தத் தென் தணிகைக் குமரனின் தாள்களைச் சூடாத தலையையும், நாடாத கண்களையும், தொழாத கைகளையும், பாடாத நாவினையும் பிரமன் நமக்குப் படைப்பானேன்? அப்படி அவன் நம்மைப் படைக்கும்படி நாம் அவனுக்குச் செய்த குற்றந்தான் என்ன? என்றெல்லாம் ஏங்கியவர், 'நான் செய்த குற்றம் என்?' என்ற கேள்வியை அந்த முருகனிடமே கேட்கிறார். இந்தக் கேள்வியே ஒரு நல்ல பாட்டாகப் பிறக்கிறது—அவரது நாவிலே.

கோடாத வேதனுக்கு
யான் செய்த குற்றம் என்?
குன்றெறிந்த
நாடாளனே! தென் தணிகைக்
குமர! நின்
தண்டையந் தாள்
சூடாத சென்னியும்
நாடாத கண்ணும்
தொழாதகையும்
பாடாத நாவும் .
எனக்கே தெரிந்து
படைத்தனனே!

இந்தக் கேள்விக்கு முருகன் அருணகிரிநாதருக்குப் பதில் சொல்லுவாரோ என்னவோ, நமக்குச் சொல்கிறான். நாமெல்லாம் வாழ்நாளில் இதே தவறைச் செய்யாது பிரமனிடமும் ஏன், குமரனிடமுமே நான் செய்த குற்றம் என்? என்ற கேள்வியைக் கேட்காமல் இருக்கவருஷா வருஷம் டிசம்பர் முப்பத்து ஒன்று மாலையிலே நம்மை அங்கே அழைக்கிறான். ஜனவரி முதல் தேதி. ஆம். ஆங்கில வருஷப் பிறப்பன்று. வருஷம் பிறந்த உடனே நமக்குத் தரிசனம் தருகிறான். நம்மை மகிழ்விக்கிறான்.

தணிகையிலே நடக்கும் உற்சவங்களிலே சிறந்தது ஆடிக் கிருத்திகை. அன்று பல்லாயிரக்கணக்கான புஷ்பக் காவடிகளைச் சுமந்து கொண்டு மலை ஏறுவது கண் கொள்ளாக் காட்சி. ஆனால் அந்த விழாவினையும் தூக்கி அடிக்கிறது. இந்த டிசம்பர் மாதக் கடைசியிலே நடக்கும் திருப்படித் திருவிழா! இந்த விழாவுக்குச் சென்னையிலிருந்து ஸ்பெஷல் ரயில் புறப்படுகிறது. சென்னை நகரமே திருப்புகழ் மணி அவர்கள் தலைமையில் திருத்தணி நோக்கிச் செல்கிறது. 'முருகா முருகா முருகா' என்னும் நாம பஜனையில் 'மக்கள் மாத்திரம் அல்ல, ரயிலும், ரயில் தண்டவாளங்களும் சேர்ந்துகொள்கின்றன. இந்த ரயில் வருவதை எதிர்நோக்கி முன்னமேயே லக்ஷக்கணக்கான மக்கள், ஆண்கள், பெண்கள், பிள்ளைகள், அதிகாரிகள், தொழில்அதிபர்கள் எல்லாம் காரிலும் பஸ்ஸிலுமாக ஏறித் திருத்தணி வந்து சேர்ந்து விடுகிறார்கள். எல்லோருமாகச் சேர்ந்து பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் தணிகைக் குமரன் கோயில்

# வேங்கடம் முதல் குமரிவரை

கொண்டிருக்கும் மலைமீது ஏறுகிறார்கள். அழகாகக் கட்டி வைத்திருக்கும் முந்நூற்று அறுபத்து ஐந்து படிகளையும் ஏறிக் கடந்து அவன் சந்நிதி சென்று விழுந்து வணங்கி எழுந்து திரும்புகிறார்கள்.

ஆங்கில ஆட்சி நம் நாட்டில் இருந்த காலத்தில் ஒவ்வொரு வருஷம் ஜனவரி மாதப் பிறப்பன்று அதிகாரிகளான துரைமாரைச் சென்று கண்டு காணிக்கை செலுத்துவதுஎன்பது நம் மக்களிடையே ஏற்பட்ட ஒரு சம்பிரதாயம். 'வருஷம் பிறந்ததும் இந்தப் பறங்கியர் முகத்திலே முதல் முதல் விழிக்க வேண்டியிருக்கிறதே. இதைத் தடுக்க முடியாதா?' என்று எண்ணியிருக்கிறார் ஒரு பக்தர். டிசம்பர் முப்பத்தி ஒன்று மாலை திருத்தணிகை சென்று வருஷம் பிறந்ததும் முருகன் திருவடிகளிலே விழுந்து வணங்கியபின், ஊர் திரும்பி, அதன்பின் துரைமாரையும் சம்பிரதாயம் தவறாமல் தரி



சிக்கலாமே என்று தோன்றியிருக்கிறது அவருக்கு. அதனால்தான் இந்தத் திருத்தணி திருப்படித் திருவிழா ஆரம்பமாகியிருக்கிறது. அதோடு வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாட்களும் செய்த அதிக்கிரமங்களுக்குப் பிராயச்சித்தம் தேடுவது போல் 365 படிகளையும் ஏறிக் கடந்து முருகன் திருவடிகளிலே பாவச் சுமையை இறக்கி வைத்துவிட்டு நல்ல மனத்தோடு வீடு திரும்பும் மன நிறைவும் பெறலாம் அல்லவா என்று தோன்றுகிறது எனக்கு.

தணிகை என்றால் அமைதி என்று பொருள். சூரபதுமன் முதலியவர்களைத் திருச்செந்தூரில் சம்ஹாரம் செய்து, அந்த வெற்றிக்குப் பரிசாக இந்திரன் மகளாகிய தெய்வயானையைப் பெற்றுத் திருப்பரங்குன்றத்தில் அவளை மணம் முடித்துக் கொண்டு அமைதியாகக் குடும்பம் நடத்த இந்தத் தேவசேனாபதி தேர்ந்தெடுத்த இடம் இந்தத் தணிகைமலை. சூரனோடு போர் செய்தபின் கோபமெல்லாம் தணிந்து இந்தத் தணிகையில் வந்து தங்கியிருப்பதால் இத்தலத்தில் நடக்கும் கந்தஷஷ்டி விழாவில் சூரசம்ஹாரம் கிடையாது. இப்படி அமைதி தேடி வந்து கோயில் கொண்டிருக்கும் ஆண்டவன் தன்னைத் தேடி வந்து வணங்கும் பக்தர்களுக்கும் நல்ல மன அமைதியைத் தந்து தணிகாசலத்தின் புகழை நிலைபெறச் செய்து கொள்கிறான்.

திருத்தணி ஊருக்குச் சென்றதும் நம் கண் முன் நிற்பது தணிகைமலையும் அதன்மேல் நிற்கும் கோயிலும். இம்மலையின் இரு புறத்திலும் மலைத்தொடர்கள் இருக்கின்றன. வடக்கே இருப்பது சற்று வெளுத்திருப்பதால் பச்சரிசி மலை என்றும் தெற்கே இருப்பது சற்றுக் கறுத்திருப்பதால் பிண்ணாக்கு மலை என்றும் மக்கள் சொல்கிறார்கள். மலை அடிவாரத்தில் உள்ள திருக்குளம் சரவணப் பொய்கை. இந்தப் பொய்கையைச் சுற்றியும், மற்றும் மலை ஏறும் வழிகளிலும் எண்ணிறந்த மடங்கள், சத்திரங்கள், சுனைகள், தடாகங்கள்தான். ஆதலால் இந்தப் பகுதிக்கே சர்க்கார் கணக்கில் மடம் கிராமம் என்று பெயர். சுகாதாரக் கொள்கைகள் இல்லாதவர்கள் சரவணப் பொய்கையில் நீராடி விட்டு மலை ஏறலாம். அதற்குத் துணிச்சல் இல்லாதவர்கள் தலையில் தீர்த்தத்தைப் புரோக்ஷித்துக் கொண்டு புறப்பட்டு விடலாம்.

மலைமேல் ஏறுகிறபோது வழியில் இருக்கும் பிரம சுனை அங்குள்ள விநாயகர் பிரம லிங்கம் எல்லாவற்றையும் தரிசிக்கலாம். மலை உச்சி சேர்ந்ததும், ரத வீதியில் வலம் வரலாம். அங்குள்ள இந்திர நீலச் சுனையைப் பார்த்துவிட்டு, செங்கழுநீர் விநாயகரை வணங்கி விட்டு, கோயிலினுள் நுழைந்தால் நாம் முதல் முதல் பார்ப்பது துவஜஸ்தம்ப விநாயகரும் ஐராவதமுமே. இங்கு ஐராவதம் சந்நிதியை நோக்கி நிற்காமல் கிழக்கு நோக்கி எங்கேயோ அவசரமாகப் புறப்படத் தயாராக நிற்பது

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

போல் நிற்கிறது. தெய்வயானையின் சீதனப் பொருளாக வந்தது ஐராவதம் என்றும், அப்படி தேவலோகத்தை விட்டு ஐராவதம் வந்து விட்டதால் அங்கு செல்வம் குறைய ஆரம்பித்ததென்றும், அந்தக் குறை நீங்க முருகன் ஆணைப்படி, கிழக்கேயுள்ள தேவலோகம் நோக்கி நிற்கிறது என்றும் ஸ்தல வரலாறு கூறுகிறது. எனக்கென்னவோ இது சரியான வரலாறு என்று தோன்றவில்லை. தெய்வயானையை மணந்தபின், இந்தக் குமரன் தம் மயில் வாகனத்தைத் துறந்துவிடுகிறார். (இத்தலத்தில் மூலவர் உத்சவர் பக்கத்தில் எல்லாம் மயில் இல்லை என்பது கூர்ந்து நோக்கிக் கவனிக்கத் தக்கது) ஆதலால் பக்தர்கள் குறை தீர்க்க வெளியே விரைந்து செல்ல வேண்டியிருந்தால் வாகனம் வேண்டாமா? தெய்வயானை கொண்டு வந்த வெள்ளை யானையைத் தயாராக இருக்கும்படி கட்டளை இட்டு இருக்கிறான். அதுவும் 'எவர்ரெடி' என்பதுபோல் எந்த நேரமும் புறப்படத் தயாராய்க் கோபுர வாயிலை நோக்கியே நிற்கிறது என்றுதான் சொல்லத் தோன்றுகிறது எனக்கு.

இனி, கோயிலுக்குள்ளேயே நுழையலாம். அருள்ஞான சக்திதரனின் அடி பணிவதற்கு முன்னே அர்ச்சகர் நம்மை அழைத்துச் செல்வது, ஆபத் சகாய விநாயகர் சந்நிதிக்குத்தான். உத்சவ மூர்த்தியும் சண்முகரும் இருக்கும் மண்டபத்திலே, கிழக்கு ஓரத்திலே பெரிய உருவிலே இவர் இருக்கிறார். தணிகையில் வந்து தேவசேனையுடன் அமைதியாக இருக்க விழைந்த இந்தக் குமரன் வாழ்விலும் காதல் குறுக்கிட்டிருக்கிறது. பக்கத்திலே உள்ள குன்று ஒன்றிலே குறப் பெண்ணாக வளரும் வள்ளியை மணக்க விரும்புகிறார். அதற்காக என்னென்னவோ பிரயத்தனங்கள் செய்கிறார். கடைசியில் அந்தப் பொல்லாத வள்ளியை வழிக்குக் கொண்டு வர, அருமை அண்ணனின் துணையை நாடுகிறார். அவரும் இவருக்கு அந்த ஆபத்தில் உதவுகிறார். அதனால் வள்ளிமலைக் குறத்தி வள்ளியைத் தட்டிக் கொண்டு வந்து விடுகிறார். இப்படி வள்ளியை மணம் புரியத் தக்க சமயத்தில் உதவிய அண்ணனுக்கு, பூஜா நேரத்திலும் உத்சவ காலங்களிலும் அக்ர ஸ்தானமே கொடுத்து விடுகிறார். முருகன் மாத்திரம் என்ன, நாமும் ஆபத் சகாயரது சகாயத்தை எப்போதும் நாடுகிறவர்தாமே. நமக்கு வரும் மலைபோன்ற ஆபத்துகளும் பனி போல் நீங்க வேண்டும் அல்லவா!

இனி கர்ப்பக்கிருஹத்துக்கே சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் அருள் ஞான சக்தி தரனைத் தரிசிக்கலாம். 'பொன்னிறக் காந்தளோடு, செங்குவளை மலர்களும், பொற்பமர் கடம்பமலரும், பூந்தளிர் குறிஞ்சியும், சேந்த கூதளமும் புனைந்த திருமார்பு அழகியாக அவன் அங்கே நிற்கிறான். இங்குள்ள குமரன் ஆபத்சகாய விநாயகரை ஸ்தாபித்த பின், குமரேசுவரர் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்கிறான். அதோடு தன்னுடைய சக்தியை எல்லாம் ஒன்றாகத் திரட்டி ஞானசக்தியை வேல் வடிவிலே அளிக்கிறான் தன் மைந்தனுக்கு. சூரபத்மனை சம்ஹாரிக்கத் தன் அன்னையிடம் வேல் பெற்ற முருகன், மக்களுக்கெல்லாம் ஞானாசிரியனாக இருந்து அருள் செய்ய மற்றொரு வேலைப் பெறுகிறான் தந்தையிடம். அதனால்தான் அருள்ஞான சக்தி தரன் என்ற திருப் பெயரும் தாங்குகிறான். இந்த மூர்த்தி இங்கு மயில் தேவானை வள்ளியின்றித் தனித்தே இருக்கிறது. அமைதியை நாடிய அண்ணல், அணங்குகள் இருவரைப் பக்கத்தில் வைத்துக் கொண்டால் அமைதி பெறுவதேது? நல்ல அழகிய சுந்தரமூர்த்தியாக அவர் நிற்கிறார். தணிகையின் இணையிலியாக இவர் நிற்கும் அழகைக் காணத் துடித்த இராமலிங்க அடிகள் 'தணிகை மலையைச் சாரேனோ! சாமி அழகைப் பாரேனோ?' என்று ஏங்கியிருக்கிறார், தமது அருட்பாவில். எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டே நிற்கலாம் இந்த மூர்த்தியின் அழகை.

எப்போதும் அலங்காரம் செய்யப்பட்ட வண்ணமாகவே இருக்கும் மூர்த்தியை வணங்குவதைவிட அணிகளையும் பணி

கலையும் களைந்து, அபிஷேகத்துக்கு ஆயத்தமாக இருக்கும் நிலையில் கண்டு தொழுவதே கலை அன்பர்கள் விரும்புவதொன்று. கோயில் நிர்வாகிகளைக் கலந்து எப்போது வேண்டுமானாலும் அபிஷேகத்துக்கு ஏற்பாடு செய்து கொள்ளலாம். இல்லை என்றால் கிருத்திகைதோறும் அபிஷேகம் நடக்கும் காலம் அறிந்து சென்று கண்குளிரத் தரிசிக்கலாம். அப்படி அபிஷேகம் நடக்கும்போது கூர்ந்து கவனித்தால், அக்குமரனின் மார்பகத்திலே ஒரு குழி இருப்பதைக் காணலாம். அன்று தாரகாசுரனால் விடப்பட்ட சக்கரத்தைத் தன் மார்பிலே ஏந்தி அதை அங்கேயே பதித்துக் கொண்டதாகவும், பின்பு இத்தணிகைமலையானை திருமால் பூசித்தபோது, தன் மார்பகத்திலிருந்த சக்கரத்தை எடுத்துத் திருமாலுக்கு வழங்கி விட்டதாகவும் புராணம் கூறுகிறது. சக்கரம் பதிந்திருந்த இடந்தான் இன்று குழியாக இருக்கிறது. இம் மார்பகம் குழிந்த திருவடையாளத்தைக் கண்டு தொழுவோர் இடர் ஒழிந்து இன்பவீடு அடைவர் என்பது பக்தர்களது நம்பிக்கை. அதனால் நம்பிக்கை உடையவர்கள் எல்லாம் சென்று தொழ வேண்டியது அபிஷேக காலத்திலேயே.

இந்தப் பெருமானை மும்மூர்த்திகளும் வழிபட்டனர் என்பர். அதனால் அருணகிரியார் திரிமூர்த்திகள் தம்பிரானே என்று பாடுவர். நாமும் இத்திருமூர்த்திகள் தம்பிரானை வணங்கியபின் அவனுக்கு இடப் பக்கமும் வலப் பக்கமுமாகத் தனிக் கோயில்களிலே இருக்கும் தெய்வயானை வள்ளி இவர்களைக் கண்டு தொழலாம். தேவசேனையின் வலக்கரத்தில் நீலோற்பலமும் வள்ளியின் இடக்கரத்தில் தாமரையும் இருப்பதைத் தவிர இந்த அம்பிகைகளின் சிலா வடிவங்களில் சிறப்பான அம்சம் ஒன்றும் இல்லை. இதோடு மலராலும் நகையாலும் அலங்கரிக்கப்பட்டு உருத்திராக்கத்தைக் கொண்டே விதானம் அமைக்கப்பட்ட விமானத்தில் வள்ளி தேவசேனா சமேதனாக நின்று கொண்டிருக்கும் உற்சவ மூர்த்தியையும் வணங்கிவிட்டு வெளியே வரலாம்.

இக்கோயில் பழம் பெருமை வாய்ந்ததோடு தமிழ் நாட்டோடு நெருங்கிய தொடர்பு கொண்டும் இருக்கிறது. இன்னும் சில மாதங்களில் கோயில், கோயிலைச் சுற்றிய நகரம், நகரத்தைச் சுற்றிய தாலூகா எல்லாமே தமிழ் நாட்டோடு இணைந்து விடப் போகிறது. அன்று கைலையிலிருந்து தென்பொதிகை நோக்கி வந்த அகத்தியரை இடைநிறுத்தி இலக்கணம் கற்பித்து அனுப்பியவரே இத்தணிகைக் குமரன்தான். 'என்றுமுள தென் தமிழை அன்று முதல் இயம்பி இசை கொண்டவனு'க்குத்தானே அகத்தியன் பொதிகை வந்து சேருகிறான்.

ஆம்! தமிழைப் பொதிகைக்கு அளித்த பெருமையே இத் தணிகாசலத்துக்குத் தான். அத்தணிகை தமிழகத்தோடு இணைவதும் பொருத்தம்தானே.

# தமிழ்கூறும் நல்லுலகம்

சகடபுரம் ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் தமது பதரிகாச்ரம யாத்திரையை முடித்துக்கொண்டு 24-5-59 புது டில்லிக்குத் திரும்பினர். அங்கு ஒரு வாரம் தங்கிப் பின்னர் ஆக்ரா, கான்பூர், லக்னோ, அயோத்தி முதலிய புண்ணிய ஸ்தலங்கள் வழியாக காசி க்ஷேத்திரத்தை அடைந்தார். ஒரு வாரகாலம் அங்கே பல தீர்த்தங்களில் நீராடி, ஆலய தரிசனம் செய்து கொண்டு, கயா மார்க்கமாகத் தற்போது கல்கத்தா சேர்ந்துள்ளார்கள். அங்கே சாதுர்மாஸ்ய சங்கல்பம் செய்து கொண்டு இரண்டு அல்லது மூன்று மாதகாலம் தங்குவார்கள். தென் கல்கத்தா பகுதியைச் சேர்ந்த ராஜா வஸந்தராய் ரோட்டிலுள்ள 12-B, இல்லத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் தங்கியிருக்கிறார்கள். கல்கத்தாவில் வசிக்கும் பக்தகோடிகள் அனைவருக்கும் ஸ்ரீ சகடபுரம் ஸ்வாமிகளைத் தரிசிக்க இது ஒரு அரிய சந்தர்ப்பம்.



செகந்திராபாத் பொலாராம் ஸ்ரீ வேணுகோபால ஸ்வாமி தேவஸ்தானத்திலும், ஹைதராபாதில் வித்தில்வாடி ரங்கவிலாஸிலும் சமீபத்தில் திருமுறை திவ்யப் பிரபந்த விழாக்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டன. திருவாளர் சி. நா. சிவராமகிருஷ்ணன் அவர்கள் சைவ, வைணவ உபநிஷத்துக்களிலுள்ள பல விஷயங்களையும், பெரியோர்களின் ஜீவிய சரிதங்களையும் அழகாக எடுத்துரைத்தார்.

✿

சிருங்கேரி சங்கராச்சாரிய ஸ்வாமிகள் சென்றவருஷம் ஆகஸ்டுமாதம் காலடிக்கு விஜயம் செய்த பொழுது கொச்சியில் வேத ரஸிக சங்கத்தைத் துவக்கி வைத்தார்கள். இந்தச் சங்கம் வேத வகுப்பு நடத்தி வருகிறது. நூறு பேர்களுக்கு மேல் இவ்வகுப்பில் கலந்து கொள்கிறார்கள். அதோடு அவர்கள் சமூக நலத் தொண்டுகளும் செய்து வருவது பாராட்டத் தக்கது. இந்தச் சங்கத்தார் சங்கர ஜயந்தியைச் சமீபத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடினர்.

# வேங்கையின் மைந்தன்

"வேங்கையின் மைந்தன்" பவனி வந்தான். துடிப்போடு காத்திருந்த வாசக இதயம் துள்ளியது.

வீரத் திருவுடன் தமிழ்ப் பண்பும் இணைந்திலங்கும் வேங்கையின் மைந்தனைக் கண்டோம். சோழர்களுக்கென்றே வாழும் தியாக உணர்வைத் தென்னவன் இளங்கோவிடம் தரிசித்தோம். வண்டினங்கள் சுருதி கூட்டப் பறவையினங்கள் பாட்டிசைக்க இயற்கைக் கன்னியின் அழகில் மெய்மறந்தோம்.

சென்னை
5—7—59 மு. ஞானவல்லி

✿

'வேங்கையின் மைந்தன்' ஆரம்பத்திலேயே களைகட்டிவிட்டது. அகிலனின் பாவை விளக்கு என்றுமுள்ளத்தே ஒளி பரப்பிவருகிறது. வேங்கையின் மைந்தன் உணர்ச்சி ஊட்டுவான்.

திருவண்ணாமலை
7-7-59 குஞ்சு

✿

கோடையில் குற்றாலம் செல்ல வேண்டும் என்று நினைத்திருந்தேன். ஆசிரியர் "அகிலன்" அவர்களின் புதிய தொடர்கதையைப் படிக்கத் தொடங்கியபோது, குற்றாலத்து அருவியில் குளிப்பதைப் போன்ற உணர்வு! நீர் வீழ்ச்சியின் வெள்ளி மயமான வைர ஒளியின் ஜாலம் — கதைத் துவக்கம்! இரண்டு அத்தியாயங்களும் இதயத்தோடு இரண்டறக் கலந்துவிட்டன.

திருநெல்வேலி
3—7—59 "செல்வன்"

✿

"வேங்கையின் மைந்தன்" முதல் இதழிலேயே வீரநடை பயில ஆரம்பித்துவிட்டான்; இப்புது நாவலை ஆவலுடன் வரவேற்கிறோம்.

பெங்களூர்
6-7-59 சித்ரா ராமமூர்த்தி

✿

திரு அகிலன் தீட்டியிருக்கும் 'வேங்கையின் மைந்தன்' என்னும் சரித்திர நாவலின் ஆரம்பம் என் மனத்தை மிகவும் கவர்ந்துவிட்டது. நடையழகும்-சொல்லழகும் நாவலுக்கு மெருகிடுகின்றன!

திட்டச்சேரி
2-7-59 பொற்குணன்

✿

திரு அகிலன் அவர்களது மாபெரும் படைப்பான 'வேங்கையின் மைந்த'னை இன்று சந்தித்து அளவளாவினேன். நன்றியும் மெத்த மகிழ்ச்சியும் என் இதயத்தில் இணைந்து கூடியன.

அகிலன் தம்முடைய தாயகத்தின் அன்றைய மாண்புகளை மக்கள் உணர்ந்து நம் தமிழ் நாட்டில் அருளும் அன்பும் வீர உணர்ச்சியும் மறுமலர்ச்சி பெற்று நாடு புத்துயிருடன் காட்சியளிக்க வேண்டும் என்ற தூய நினைப்புடன் சரித்திரப் புதினத்தை எழுதியுள்ளார்.

புதுதில்லி
2-7-59 ஏ. ஆர். ராஜாமணி

✿

"பாவை விளக்கை" ஏற்றுவித்த திரு அகிலன் அவர்கள் சரித்திரக் கதை எழுதுவது இதுவே முதல் முயற்சி என்றாலும் முதல் வரியிலேயே வெற்றி பெற்றுவிட்டார் என்று நான் நினைக்கிறேன். திரு அகிலன் அவர்களின் கதைகள் முழுதும் உயிர் இருக்கிறது என்பது எனது முடிவு.

சமுத்திரம்
4—7—59 பி. பி. சம்பத்

✿

'கல்கியில் 'பாவை விளக்'கை எழுதிய திரு அகிலன் இப்போது சோழ நாட்டின் சரித்திரத்தை வரைகிறார். அவரின் ஒப்பற்ற இம்முயற்சி வெற்றி பெறும். ஓவியர் வினு அவர்களின் ஓவியங்களைப் பார்த்து எங்களையே மறந்து மகிழ்ச்சியடைகிறோம். இவ்விதமாக ஒப்பற்ற சரித்திர நாவல்களை வெளியிட்டு வாசகர்களை மகிழ்விக்கும் கல்கி பத்திரிகையை வாயார வாழ்த்துகிறோம்.

சென்னை
5-7-59 மா. சோமசேகரம்

✿

சமூக நாவல் மட்டுமல்ல, சரித்திர நாவலிலும்கூட ஒரு தனித் தன்மை உடையவர் அகிலன் அவர்கள் என்பதைச் 'சித்திரத்தில் மலர்ந்த செந்தாமரை' ஒப்ப அழகும் உயிர்க்களையும் கலந்து நிற்கும் அவர் படைப்பில் காண்பிக்கிறார்.

இலங்கை
3-7-59 க. சுப்பிரமணியம்

✿

"வேங்கையின் மைந்தன்" என்னும் கரும்பு, நுனியிலேயே, அதன் ஆரம்பக் கட்டத்திலேயே இனிக்க ஆரம்பித்துவிட்டது.

மதுரை
4—7—59 ஆர். ராமசாமி

✿

"வேங்கையின் மைந்தனை"க் கண்டேன். கவின்மிகு காவிரிக் கரை கண்டேன். வளம் மிகுந்த பாண்டி நாட்டுச் சோலையில் புகுந்தேன். வேளிர் குலத் தோன்றலான தென்னவன் இளங்கோவேளின் உள்ளத்தை உணர்ந்தேன். வீரமல்லனின் நிலையை அறிந்தேன். திரு அகிலனின் அருமையான தமிழ் நடையையும், அழகு பொருந்திய தெளிவான வர்ணனைகளையும் சுவைத்தேன்.

கோயமுத்தூர்
3—7—59 க. காளியப்பன்

# தீப்பொறி

அபர்ணா



'டிங்...'

டிக்கட் ஒன்று ஒரு ரூபாய் எழுபத்துநான்கு நயா பைசா விதம் இருபத்து மூன்றரை டிக்கட்டுகளுக்குக் கட்டணத்தைக் கணக்குப் பார்த்துக்கொண்டிருந்த கடேசன் தலை நிமிர்ந்து 'பிளாக் போனை'ப் பார்த்தான். பக்கத்து ஸ்டேஷனிலிருந்து வந்த அழைப்புக்குப் பதில் கூறிவிட்டு வந்து கட்டணத் தொகையை வசூலிக்கலாமா என்று ஒரு கணம் தயங்கினான். அதற்குள் டிக்கட் கொடுக்கும் ஜன்னலுக்கு வெளிப்புறத்திலிருந்து, 'எவ்வளவுங்க ஆச்சு?' என்று அந்தப் பிரயாணி அவசரப்படுத்தினார். மறுநாள் நடைபெற இருக்கும் மகனின் திருமணம் அன்றைக்கே, அந்த நிமிஷமே வந்துவிட்டதைப் போல் அவர் குரலில் அவசரம் தொனித்தது.

கடேசனுக்குக் கணக்கு சரியாக வரவில்லை. ஒவ்வொரு தடவை பெருக்கும்போதும் ஒவ்வொரு விடை வந்தது. கணக்கில் புலிதான். புதிய ஊர்; புதிய சூழ்நிலை. எங்கோ இருந்தவனை இந்த ஸ்டேஷனுக்குத் தள்ளி விட்டார்கள். மேலும், அன்றுதான் அந்த ஊரில் முதன் முதலாக அலுவலை மேற்கொண்டிருந்தான். காரணமில்லாத பரபரப்பிலும் கவலையிலும் தவறான விடைகளே தோன்றிக்கொண்டிருந்தன.

'டிங்...'

இரண்டாவது அழைப்பையும் அவன் பொருட்படுத்தவில்லை. உரிய கட்டணம் அந்தப் பிரயாணியிடமிருந்து வசூலித்துவிட்டுப் பின், 'பிளாக் போன்' அருகே வந்து சேர்ந்தான்.

'டிங்...'

அழைப்புக்குப் பதில் மணி கொடுத்துவிட்டுப் 'போனை' எடுத்து 'அஅ' என்று குரல் கொடுத்தான்.

தீப்பொறி பறப்பது போல் போனில் பதில் வந்தது. "எங்கேய்யா போயிருந்தீர். இத்தனை நேரம்?"

"எங்கேயும் போகவில்லை. இங்கேதான் இருந்தேன்."

"ஒரு தடவை கூப்பிட்டவுடனே பதில் சொல்றத்துக்கென்ன? உம்ம டியூடின்னுலே என் கை, காலெல்லாம் ஓய்ந்து, தொண்டை வறண்டுவிடும். போனைப் பக்கத்திலே வச்சிண்டு பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறீரோ?"

கடேசன் தனக்குள் சிரித்துக்கொண்டான்.

"சார், நான் கிருஷ்ணமூர்த்தி இல்லை."

"அவன், எங்கே போயிட்டான்?"

"இன்னிலேருந்து ஒரு மாசம் லீவு, அவருக்கு."

"போடு சக்கை! நீங்க யாரு?"

"நான் ஆர். எஸ். எம்."

"ரிலீவிங் ஆளா? சரிதான்! ஏன் ஸார்! நான் பாட்டுக்குக் கூப்பிடறேன், அரை மணி கழிச்சு மெள்ள வறீரே? உம்?"

"இல்லை, சார். இங்கே டிக்கட்டுத் தகராறு."

"டிக்கட்டு, பார்ஸல் எல்லாம் அப்புறம் பார்க்கணும். மொதல்லே, வண்டிக்கு ஸெக்ஷனை பிளாக் பண்ண வேண்டாம்? சரி, முதல்லே பிளாக் பண்ணும்; ஒன் நாட் நைன் பாஸஞ்சர்."

அந்த வண்டிக்கு ஸெக்ஷனை பிளாக் பண்ணிவிட்டு, டிக்கட் ஜன்னலுக்கு வந்தான், கடேசன்.

உறவு தெரிகிறவரைதான் கோபம் தாபம் எல்லாம் வந்து குறுக்கிடுகின்றன. உறவைப் புரிந்து கொண்டால் அதில் எத்தனை இன்பம்!

பக்கத்து ஸ்டேஷனில் அலுவலில் இருந்தவர் நாராயணசாமி என்பது தெளிவாகத் தெரிந்துவிட்டது, அவனுக்கு. உருட்டலும் மிரட்டலுமாக அவர் பேசிய தோர

ணையே அவரைக் காட்டிக் கொடுத்தது. 'நாராயணசாமி கொஞ்சம் அடாவடித்தனமாக நடப்பார். அதனால் பயந்து விடாதே' என்று கிருஷ்ணமூர்த்தி சொல்லியிருந்தார்.

** ** **

'பிளாக்' செய்யும் கருவியிலுள்ள விசையை அழுத்தி, அடுத்த ஸ்டேஷனை அழைத்தான், நடேசன். நான்கு தடவைகள் அறிவிப்பு மணி கொடுத்த பின்தான் நாராயணசாமி 'போனு'க்கு வந்தார்.

''என்ன?'' நடேசனின் இடது செவியில் இந்தச் சொல் இடிபோல் சென்று குடைந்தது.

''கூட்ஸ் வண்டி...''

''ஆஹா! கூட்ஸா? இருக்கட்டும். வாழைத்தார் 'புக்' பண்ணிண்டிருக்கேன். வந்துட்டேன்.''

ஐந்து நிமிஷமாயிற்று. ஆள் வரவில்லை. கூட்ஸ் வண்டி அவனுடைய ஸ்டேஷனை அடைவதற்கு இன்னும் சில நிமிஷங்களே இருந்தன. அந்த ஸ்டேஷனில் நிற்காத வண்டி, அது. நாராயணசாமி ஸெக்ஷனை 'பிளாக்' செய்யாத வரையில் அதை நேரே செல்ல அனுமதிக்க முடியாது. அதற்காக வண்டியை நிறுத்தி வைத்தால், மேலதிகாரிகள் கேள்வி கேட்பார்கள்.

மீண்டும் விசையை அழுத்தினான்;

பதில் மணி கொடுத்து விட்டுப் போனுக்கு வந்தார் அவர். ''என்ன ஆளைத் துளைச்சு எடுத்துடுவே போல் இருக்கே? நான் இங்கே சும்மாவா உட்கார்ந்திண்டிருக்கேன்? நாவலைப் படிச்சுப் பொழுது போக்கிறதுக்கு நான் ஒண்ணும் உன் மாதிரி சின்னப் பையன் இல்லே! இருபத்தேழு வருஷம் சர்வீஸ் ஆயிட்டுது.''

''ஸார்! அனாவசியமாகப் பேச வேண்டாம். நீங்கள் கூப்பிட்ட போது நான் இரண்டு நிமிஷம் தாமதமாக வந்ததற்கு எவ்வளவு பேச்சுப் பேசினீர்கள்? பிளாக் போனில் கூப்பிட்டால் உடனே பதில் கொடுக்க வேண்டும் என்ற சட்டம் உங்களுக்கும் பொருந்தும்.''

''ரொம்பக் கிறுக்கா இருப்பாய்போலிருக்கே?''

அவர் இப்படிச் சொன்னதும் நடேசன் உடம்பில் உஷ்ணம் பற்றிக் கொண்டது.

''அதிகமாகப் பேசுகிறீர்கள். உங்களுடைய விமர்சனம் கொஞ்சம்கூட அவசியமில்லாதது.''

''அட! எனக்குப் புத்திமதி சொல்ல வேண்டாம், நீ!''

''அதைத்தான் நானும் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.''

''ஏது, வார்த்தைக்கு வார்த்தை பதில் சொல்லிக் கொண்டிருக்கே?''

''நீங்கள்தான் முதலில் ஆரம்பித்து வைத்தீர்கள்.''

''சரி! பேச்சை நிறுத்தி விட்டு வண்டி நம்பரைச் சொல்லு. பிளாக் பண்றேன்.''

கூட்ஸ் வண்டி சென்றவுடனேயே, வழக்கம் போல் தாமதமாய் வந்து கொண்டிருந்த, சென்னை செல்லும் செங்கோட்டை பாசஞ்சர் வந்தது. தஞ்சாவூர் நோக்கிச் செல்லும் பிரயாணி வண்டியுடன் அங்கே 'கிராஸிங்' நடைபெற வேண்டும். எனவே, செங்கோட்டை பாஸஞ்சரைக் கிளைப் பாதையில் சௌனர்க்கு நிறுத்தி விட்டு, எதிரே வரும் வண்டியை நேர்ப் பாதையில் வாங்குவதற்குக் கைகாட்டியை இறக்கச் சொன்னார், நாராயணசாமி. அவர் திரும்பித் தம் அறைக்குள் நுழைகையில், 'செங்கோட்டை'யின் கார்டு வைத்தியநாதன், ''என்ன, நாணா?'' என்று அழைத்துக் கொண்டே அருகே வந்தார்.

''வைத்தாவா? ரொம்ப நாளாகக் காணவில்லையே?''

''காணாமல் என்ன? வந்திண்டிருக்கேனே!''

நாராயணசாமிக்குத் திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தது. ''பக்கத்து ஸ்டேஷன்லே யார் டியூடி?'' என்று கார்டைக் கேட்டார்.

''யாரோ பையன். புதுசா இருக்கான்.''

''அதை 'பிளாக்கி'லேயே தெரிஞ்சுண்டுட்டேன். சுத்தத் தத்தாரியா இருப்பான் போலிருக்கது.''

''அப்படியா? அவனைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே. ஜம்னு 'டிரஸ்' பண்ணிண்டு சுறுசுறுப்பா, சிரிச்சிண்டு இருக்கானே? பதவிசாகவும் இருப்பான்போலத்தான் தோன்றுகிறது. நீ சிடுமூஞ்சி. இடம் தெரியாமெ வாயைக் கொடுத்து விட்டு மாட்டிப்பே!''

''சரித்தாண்டா, போடா. இனிமேல்தான் எனக்கும் உனக்கும் நல்ல குணம் வரப்போறதாக்கும்!''

இருவரும் அறைக்கு வெளியே வந்தார்கள். தஞ்சாவூர் செல்லும் வண்டி வந்து சென்றதும், 'செங்கோட்டை'யும் ஸ்டேஷனை விட்டு நகர்ந்தது.

** ** **

'டிங்...'

''என்னப்பா?''

''மோட்டார் டிராலி, ஸார்!''

''டிராலியா? யார் வரா?''

''இஞ்ஜினீயர்.''

''ஓஹோ!''

ஸெக்ஷனை, டிராலிக்காக 'பிளாக்' பண்ணி விட்டு மீண்டும் போனிடம் வந்தார், நாராயணசாமி.

''உன் பேர், என்னப்பா?''

''நடேசன், ஸார்.''

''சொந்த ஊரு?''

''இந்தப் பக்கம்தான், 'திருவாரூர் பக்கத்திலே.''

''நெனச்சேன்.''

பேச்சை முடித்துக் கொண்டு தம் இடத்தில் வந்து அமர்ந்தார். நாற்காலியில் மாட்டியிருந்த வெள்ளைக் 'கோட்'



**நன்றி அறிவிப்பு**

17-6-59ல் எனது மகள் செல்வி சரஸ்வதிக்கும் செல்வன் பி. எஸ். வேலாமுக்கும் கோவை ஆவரம்பாளையத்தில் நடந்த திருமண விழாவிற்கு வருகை தந்தும், வாழ்த்துக்கள் அனுப்பியும், வெகுமதிகள் வழங்கியும் சிறப்பித்தவர்களுக்கு எனது நன்றி கலந்த வணக்கம்.

அன்பன்
ஆர். தண்டபாணி
மர வியாபாரம்
கஸ்தூரி நிலையம், ஆவாரம்பாளையம்
கணபதி போஸ்ட், கோவை-6

டில் பொத்தான்கள் எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்து நிச்சயப் படுத்திக் கொண்டார். மேசை மீது அங்கங்கே கிடந்த ரிஜிஸ்தர்களைக் கூடியவரையில் ஒழுங்காக அடுக்கி வைத்து விட்டு, 'கண்ணுசாமி' என்று குரல் கொடுத்தார்.

பாயிண்ட்ஸ்மேன் ஓடி வந்தான்.

"டிராலியிலே இஞ்சினீயர் வரார். கிழண்டை 'கேட்மேன்' கிட்டே சொல்லி வைத்துவிடு."

ஸ்டேஷனுக்குக் கிழக்கே, சற்றுத் தொலைவில் அமைந்திருந்த 'லெவல்-கிராஸிங்' கேட்டைக் காத்து வந்த 'கேட்மேனு'க்கு அறிவிப்புக் கொடுப்பதற்காகக் கண்ணுசாமி நகர்ந்தான்.

'டிங்...'

நாராயணசாமி, போனை எடுத்து 'ஹலோ' என்றார்.

"டிராலி அவுட்—பத்து இருபத்து மூன்று."

"சரி."

சில நிமிஷங்களுக்குப் பின் வந்த டிராலி, அந்த ஸ்டேஷனில் ஐந்தே நிமிஷங்கள் நின்று விட்டுத் தொடர்ந்து சென்றது.

இன்னும் முக்கால் மணி நேரத்துக்கு வேலை ஏதுமில்லை.

"கண்ணுசாமி! வாழைத்தாரை யெல்லாம் ஒழுங்கா எடுத்து வைச்சுக்கோ. தாமதம் ஆகாமல் அடுத்த வண்டியிலே ஏத்திப்பிடணும்" என்று உத்தரவு இட்டு விட்டு அறைக்குத் திரும்பினார்.

"வணக்கம், சார்" என்றபடியே தபால்காரர் அந்தச் சமயம் உள்ளே வந்தார்.

"என்ன, பாய்? கடிதமா?"

"ஆமாங்க."

தபால்காரர் கொடுத்த கடிதத்தைக் கையில் வாங்கிப் பார்த்ததும் நாராயணசாமிக்குப் பரபரப்பு உண்டாயிற்று. 'சர்'ரென்று உறையைக் கிழித்துவிட்டுக் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினார். ஆனால், படித்து முடித்ததும் அவர் முகத்தில் ஒருவிதத் தளர்ச்சி பரவியது.

இதே போன்ற பல கடிதங்களை அவர் பார்த்து விட்டார். அவருடைய குமாரத்தியைப் 'பெண் பார்ப்பதற்காக' மாதந் தவறாமல் ஒரு குடும்பம் வந்து போகிறது. அவர்கள் வருவதற்கு முன் ஆவல், வந்த பின் நம்பிக்கை, போய்க் கடிதம் எழுதிய பின் ஏமாற்றம்—இது சாதாரண நிகழ்ச்சி.

கடிதம் தந்த ஏமாற்றத்தில் மூழ்கிக் கிடந்த அவரை, 'டிர்ர்ர்ரிங்' என்ற கண்ட்ரோல் மணியோசை நினைவுலகுக்குக் கொணர்ந்தது.

"...ஆமாம், திருவாரூர்ப் பக்கத்திலே, உன் சொந்த ஊர் எது?"

"வலிவலம்!"

"வலிவலமா! அடேடே! எனக்குத் தெரிந்தவாளெல்லாம் அங்கே நிறைய இருக்கிறார்களே!"

"இருக்கலாம், ஸார்! ஆனால், எனக்கு ரொம்பப் பேரைத் தெரியாது. நான்




எங்கெங்கோ சுற்றிக் கொண்டே இருந்தேன். ஊர்ப் பக்கம் போய் வெகு காட்களாயிற்று."

"ஏன்?"

"என்னுடைய தகப்பனார் கூட்ஸ் கிளார்க்காக இருந்தார். மாற்றல் ஆகிற ஊருக்கெல்லாம் போக வேண்டியிருந்தது.

"ஓஹோ! சரி. அந்தப் பக்கத்திலே என்னமோ கூப்பிடறான். கேட்டுட்டு வரேன்."

"பார்ஸல் பாசஞ்சர் கிளாக் ஆகும்!"

"ஆமாம். கண்ட்ரோல்லே 'ரைட் டைம்'னுன்."

தன்னுடையதற்கு முந்திய ஸ்டேஷனுடன் பேசி விட்டுக் கண்ணுசாமியை அழைத்தார் நாராயணசாமி.

"'பார்ஸல்' கிளாக்கிறது. மணியை அடி, அப்பா!"

நாராயணசாமிக்குப் பின், மாலை அலுவல் பார்க்கவேண்டியவர் அந்தப் பார்ஸல் பாசஞ்சரில் வந்து இறங்கினார். இறங்கிய

வுடன் நேராக அவரிடம் வந்து, "ஸார், கடேசன் இப்போ டியூடியில் இருக்கிறானு?" என்று கேட்டார்.

"ஆமாம். உனக்கு அவனைத் தெரியுமா, என்ன?"

"தெரியுமாவா! இரண்டு பேருக்கும் சேர்ந்தாற் போல்தான் எஸ். எம். டிரெயினிங்!"

"அவனுடைய தகப்பனுர் கூட்ஸ் கிளார்க்காமே?"

"ஆமாம். உங்களுக்குக் கூட அவரைத் தெரிந்திருக்கலாம். எஸ். நாகநாதன் என்று பெயர்."

நாராயணசாமியின் கண்கள் அகல விரிந்தன.

"யாரு, 'எஸ். என்.'னு?"

"அவரேதான்!"

"நானும் அவனும், ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தெட்டிலே, தஞ்சாவூர்லே ஒண்ணு வேலே செய்தோம். நான் அப்போ பார்ஸல் கிளார்க். அவன் கூட்ஸ் ஷெட்டில் இருந்தான். பக்கத்து வீடு. அப்பவே, நாலைந்து வயசிலே ஒரு பையன் இருந்தான் அவனுக்கு. எனக்குக் குழந்தைகள் அப்போ இல்லே. என் மனைவி அந்தப் பயலே எடுத்துக் கொஞ்சிண்டிருப்பாள்."

"எஸ். என். இப்போ இல்லே ஸார்... ஓலைக்கோட்டிலே சீப் கூட்ஸ் கிளார்க்காக இருந்தபோது காலமாகி விட்டார்."

"தௌலா, தௌலா. அடப் பாவமே!"

"அப்புறம்தான், ரொம்பக் கஷ்டப்பட்டு, மாற்றல் வாங்கிக்கொண்டு இந்தப் பக்கம் வந்தான் இவன்."

நாராயணசாமி, எங்கோ பார்த்தபடியே, "நடேசனுக்குக் குழந்தைகள் உண்டோ?" என்று கேட்டார்.

"அவனுக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லே! சரி, நான் கொஞ்சம் வெளியிலே போய்விட்டு அரை மணியில் வந்துவிடுகிறேன்."

அவர் சென்றதும் நாராயணசாமி பினைக் போன் அருகே வந்து, அழைப்பு விசையை அழுத்தினுர்.

"ஸார்!" என்று பதில் வந்தது.

"ஏய், நீ எஸ். என். பிள்ளையாமே?"

"ஆமாம்."

"நானும் அவனும் ரொம்பச் சிநேகம். பாவம், காலமாயிட்டானுமே, அவன்? இப்பத்தான் கேள்விப்பட்டேன். அம்மா சௌக்கியமா?"

"சௌக்கியம்தான், ஸார்!"

"அம்மா எங்கே இருக்கா?"

"சிதம்பரத்தில், மாமாகிட்டே."

"ஹோட்டல்லேயா சாப்பிடறே?"

"உம்!"

"உடம்புக்கு ஒத்துக்காதே."

"கும்பகோணத்திலே வீடு பார்த்துக் கொண்டிருக்கேன். கிடைத்ததும் அம்மாவை அழைத்துக் கொண்டு வர வேணும்."

"என் மனைவிக்குத் தெரிந்தால் ரொம்ப சந்தோஷப்படுவாள்!"

"அம்மா கூடச் சொல்லிக் கொண்டிருந்தாள்."

"என்ன?"

"உங்கள் பெயரைச் சொல்லி, அப்பாவுக்குச் சிநேகம் என்று."

"பார்த்தாயா? இன்னும் ஞாபகம் வெச்சிண்டிருக்கா! அடுத்த தடவை அம்மாவைப் பார்க்கிறபோது நாங்களெல்லாம் விசாரிச்சோம்னு சொல்லு."

"சரி, ஸார்!"

"'அவளை' அழைச்சிண்டு நானே ஒரு நடை வந்து பார்க்கிறேன். என்ன? ஆமா, சாப்பிட்டு விட்டாயோ?"

"இனிமேல்தான் ஸார். ரிலீவர் வந்ததும் ஹோட்டலுக்குப் போகணும்."

"ரொம்ப நன்னுயிருக்கு! அடுத்த டிரெயின்லே ஏறி, இங்கே வந்து ஒரு பிடி சாப்பிட்டு விட்டுப் போ. இல்லாவிட்டால் அவள் என்னைக் கோவிச்சுப்பாள். கட்டாயம் வந்துடு. என்ன?"

அலுவல் முடிந்து 'குவார்ட்டர்ஸ்'க்குத் திரும்பிச் செல்கையில் நாராயணசாமியின் மனத்தில் ஆவலும் நம்பிக்கையும் கால் ஊன்றி நின்றன.

விஸ்டம் பல் வைத்தியரின் புத்திமதியைக்
கேளுங்கள்

# காலையிலும் இரவிலும்

# Wisdom REGD.

கொண்டு

பல் துலக்குங்கள்




பற்கள் ஆரோக்கியமாக இருக்க வேண்டுமானால் காலையிலும் இரவிலும்—முடியுமானால் சாப்பாட்டிற்குப் பிறகும் கூட — தவராமல் பல் துலக்க வேண்டியது அவசியம். பற்களின் இடுக்குகளிலிருந்து உட்கொண்ட ஆகாரத்தின் துளிகளை அறவே அகற்றும் பல் பிரஷ் உங்களுக்கு அவசியம் தேவை. சரிவர சுத்தம் செய்வதற்காகவே ஏற்பட்டுள்ள விஸ்டம் பல் பிரஷை தேர்ந்தெடுத்துக் கொள்ளவும்.

விஸ்டம் பிரஷின் பிரத்யேக அம்சங்களைக் கவனிக்கவும் — வாகவமாகத் திருப்ப ஏதுவான கைப்பிடி, வாயின் உட்புறமும் பல் வரிசைகளுக்கேற்றக் குறுகலான பிரஷ் நுனி, பற்களின் எல்லா பாகங்களையும் எட்டக்கூடிய நைலான் ரோமங்கள் — முதலியவை.

இந்த ரோமங்கள் சுலபமாக வளைந்து கொடுக்கும் தன்மை யுடையதால், நீண்ட காலம் விஸ்டம் பிரஷ் உழைக்கிறது. அருகாமையிலுள்ள கடையில் விஸ்டம் பிரஷ் ஒன்று வாங்கிக் கொள்ளுங்கள்.



# Wisdom REGD.

நீடித்து உழைக்கும்
டூத் பிரஷ்

## நன்றி அறிவிப்பு



எங்கள் செல்வி சரஸ்வதிக்கும் 87, கொழும்பு வீதி, கண்டி கருப்பையாஸ் வர்த்தக ஸ்தாபனத்தின் உரிமையாளராகிய செல்வன் எம். எஸ். கருப்பையாவுக்கும் 29-4-59ல் கண்டி நகரில் நடந்த திருமணத்துக்கு விஜயம் செய்தும் ஆசிச்செய்திகள் அனுப்பியும், கௌரவித்த நண்பர்கள் உறவினர்கள் அனைவருக்கும் எங்கள் இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ப. தெ. சிதம்பரம் பிள்ளையும் பாரியாரும்
செ. இஸ்காடு தோட்டம், ஹட்டன்
MAY FIELD ESTATE, HATTON - CEYLON

---

# தேன்கூடு

## அத்தியாயம் 29

## சுதந்திரப் பறவை

ஆர்வி

பாபுவின் சோர்ந்த முகத்தில் குளிர்ச்சியான காற்று வீசியது. அந்தக் காற்றின் இனிய ஸ்பரிசம் அவனுக்கு ஒரு புத்துணர்வைக் கொடுத்தது. அது அவனுடைய உடலைமட்டும் தீண்டிச் செல்லவில்லை; உள்ளத்தையே தொட்டு எழுப்பி விட்டுத்தான் சென்றது.

ஒரு கையிலே பையும் மறு கையிலே கொளகொள வென்ற படுக்கையுமாக அவன் பங்களாவை விட்டு வெளிப்பட்டு, சாலையின் இருண்ட பகுதியில் வந்து நின்றான். மனத்தை விட்டுப் பெரிய சுமை ஒன்று இறங்கியது போல் அவன் உணர்ந்தான். இந்த விநாடி முதல் அவன் முற்றிலும் புதிய மனிதன்; சுதந்தர முள்ளவன். இனி யாருக்கும் அவன் பணிந்தோ, பயந்தோ நிற்க வேண்டிய தில்லை. யாரும் அவனை அதட்டவோ, அதிகாரம் செய்யவோ முடியாது. நினைத்த இடத்துக்கு அவன் போகலாம், விருப்பமானவர்களுடன் தாராளமாகப் பேசலாம்; பழகலாம்......

பாபு அந்த இன்பமான காற்றை இழுத்துச் சுவாசித்துப் பெருமூச்சு விட்டான். ஒரு கொடியில் அவனுக்கு அந்தப் பங்களாவில் இருந்த தொடர்பு, உறவு எல்லாம் அறுந்துவிட்டது. பல ஆண்டுகளாகப் பழகிய இடத்தைவிட்டு வெளியேறும் வேளை வரலாம் என்று அவன் எண்ணிக்கூடப் பார்த்ததில்லை. அது அசாத்தியமாகவும் மலைப்பாகவும் இருந்தது. அந்த உறவைத் துணித்துக் கொள்ள அவனாக முன்வந்திருப்பானா என்பது சந்தேகந்தான். ஆனால் அதை மிஸஸ் மீனாட்சி, அவனுடைய எஜமானி, சிறிதும் தாட்சிண்யப்படாமல் செய்து முடித்துவிட்டாள். அவனைப்பற்றி நன்கு தெரிந்திருந்தும் அவள் அதை எண்ணிப் பார்த்தவளாகத் தெரியவில்லை. அவர்களுக்கு அதாவது பெரிய மனிதர்களுக்கு அதெல்லாம் கட்டாது. அவர்களுடைய சௌகரியத்துக்காகத்தான் வேலைக்காரர்களே தவிர, வேலைக்காரர்களுடைய சௌகரியத்துக்காக அவர்கள் இருக்க முடியுமா?

கண்களில் நீர் கசிய அவன் தனக்கென விடப்பட்டிருந்த அறையில் வந்து நின்றான். பார்த்துப் பார்த்துப் பழகிய சுவர்கள், ஜன்னல்கள் எல்லாம் வெறிச்சென்று தோன்றின. அவனுடையது என்று சொல்லிக்கொள்ள இருந்ததெல்லாம் தேய்ந்த சோப்புத்துண்டு, சீப்பு, காலைந்து துணிகள் அடங்கிய பையும் ஒரு படுக்கையும்தான். அழுக்குத் துணிகளை ஜமக்காளத்தினுள் வைத்துச் சுருட்டிக் கொண்டு, பிறந்து வளர்ந்த இடத்தை விட்டுப் போவது போல் திகைத்து நின்றான். இனி அந்த இடத்துக்கு அவன் வரப் போவதில்லை என்பதை அவனால் நம்பவே முடியவில்லை. அந்த அறையை விட்டு அசையக் கால்கள் தயங்கின. ஒரு கணம் மேலே என்ன செய்வது என்பது தீர்மானப் படாமல் மலைத்து நின்றான். போகும்போது யாரிடமாவது சொல்லிக் கொண்டு போனால் தேவலை என்றும் தோன்றியது. ஆனால் யாரிடம் போய் என்ன சொல்வது?

அந்த மலைப்பெல்லாம் எத்தனை அர்த்த மற்றது என்று இப்போதுதான் தோன்றியது! அந்தச் சுதந்திர வாடை அவன் உள்ளத்தில் அடங்கி ஒடுங்கிக் கிடந்த உணர்ச்சிகளைச் சிறிது சிறிதாகத் தலை தூக்கச் செய்தது. மிஸஸ் மீனாட்சியை அவன் சம்பளம் கொடுக்கும் வெறும் எஜமானியாக மட்டும் கருதியிருந்தால், அவன் பை இப்போது கனமாக இருந்திருக்கும், எதையும் பொருட்படுத்தாமல் நடந்திருப்பான். ஆனால் அவளைத் தாயைப் போல் எண்ணிப் பேணி வந்தான். பிள்ளையின் நெஞ்சு வேண்டுமானால் பாறையாக இருக்கலாம்; ஆனால் ஒரு தாயின் இருதயம் எப்படி இரும்பாக இருக்கும்? இத்தனை கடினமான இதயத்தை அவள் இவ்வளவு காலும் எங்கே ஒளித்து வைத்திருந்தாள்? அவன் வார்த்தையை மீறி வந்ததற்காக இத்தகைய கொடும் தண்டனையா? அதற்கு என்ன காரணம் என்று கூட விசாரித்தறியாமல் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று அவளால் எப்படி நடத்துகொள்ள முடிந்தது? பணம் இருந்துவிட்டால் குணம் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாமோ? இது ஒன்றுதான் முதலில் அவன் மனத்தைச் சிறிது



கலக்கியது. பிறகு அதுவும் தெளிந்து விட்டது. அவன் காட்டிய எல்லையற்ற அன்பு ஒன்றுதான் நெஞ்சில் வந்து நேராக நின்றது.

அவன் இப்போது வேகமாக நடக்கத் தொடங்கினான். அவனுடைய தெளிவற்ற சிந்தனையைப் போல் சாலை வழி மாளாது நீண்டு கொண்டே போயிற்று. பாரிஸ்டர்பங்களாவிலிருந்து ராமசுந்தரமோ, சேகரோ இன்னும் திரும்பிவரவில்லை. அப்படியானால் இன்னுமுமா உஷாவின் நாட்டியம் நடந்து கொண்டிருக்கும்? அது முடிந்திருந்தாலும் முடியாமல் இருந்தாலும் தந்தையோ மகனோ எதிரே வருவதற்குள் அவன் அந்தச் சாலையைக் கடந்து வெள்ளையன் தோட்டத்துப் பாதையை அடைந்து விட எண்ணினான். அவன் யார் கண்ணிலும் பட விரும்பவில்லை. ராமசுந்தரத்தின் வண்டி எதிரே வந்தால்கூடக் கவலையில்லை. அவர் வண்டி வழியில் நிற்காது. ஆனால் சேகரின் ஸ்கூட்டர் வந்தால் உண்மையில் சங்கடந்தான்.

"அம்மா கிடக்கிறாள்; நீ வாடா! நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்று அவனைப் பின்னாலேயே உட்கார வைத்து இழுத்துக் கொண்டு போனாலும் போய் விடுவான் சேகர். பாபு இப்பொழுது அதை விரும்பவில்லை. அவன் புறப்படு முன்பே சேகர் வந்து தடுத்திருந்தால் அவன் வெளியேறத் துணிந்திருக்க மாட்டான். ஆனால் இவ்வளவு தூரம் வந்த பிறகு, ஓரளவுக்கு மனம் துணிச்சல் பெற்ற பிறகு, அவன் திரும்பிச் செல்ல விரும்பவில்லை. யாருடைய ஆதரவையும் அன்பையும் பெரிதாக எண்ணி மதித்திருந்தானோ, அவளே இத்தனை இரக்கமற்ற முறையில் நடந்துகொண்டு விட்ட பிறகு, யாரை அண்டி அவன் இனி அந்த வீட்டில் இருப்பது? அதிலும் சேகரை நம்பியா அங்கே திரும்பிப் போவது? அதற்கு அவன் சிறிதும் தயாராக இல்லை. சேகரைப் பற்றி நினைத்தாலே இப்போது அவனுக்கு நெஞ்செல்லாம் கசந்தது.

அந்த வீட்டில் சேகர் மட்டும் தனிக் குணங்கள் கொண்டிருப்பானேன்? சகவாச தோஷத்தினாலா, அல்லது பிறவிக் குணமே அப்படியா? பாபுவுக்கு அது சரியாகப் புரியவில்லை. கூடா நட்பினால் பழக்க வழக்கங்கள்தான் மாறுமே தவிர, இயற்கையான குணம் மாறி விடுமா, என்ன? ஒருகாலும் மாறாது. அந்தக் குணங்களை ஓங்க விடாமல் அடக்கி ஒடுக்கி வேண்டுமானால் வைக்கலாம். ராமசுந்தரமும் மீனாட்சியம்மாளும் இன்று கண்ணியமானவர்களாக விளங்கினாலும் அவர்களிடம் புதைந்து மறைந்து கிடக்கும் தன்மைகளே ஓர் உருக்கொண்டு சேகராக வந்திருக்க வேண்டும் என்று பாபுவுக்குத் தோன்றியது. பயிற்சியினாலும் சந்தர்ப்ப விசேஷத்தினாலும் மனிதன் விரும்பத் தகாத இயல்புகளை வென்று நல்லவனாக இருக்க முடியும். சேகருக்கு அந்தப் பயிற்சியோ வசதியோ இல்லை. இனி அவன் எப்போது எவ்வாறு திரும்புவானோ, யார் சொல்ல முடியும்?

இன்று பாபு வெளியேற நேர்ந்ததற்கு அந்தச் சேகரே மறைமுகமான காரணம் என்பதும் புரிந்தது. எது எப்படியிருந்தாலும் இனி அவனுக்குக் கவலையில்லை. அவனுக்கு இன்று அடிமைத்தனத்திலிருந்தும் கோழைத்தனத்திலிருந்தும் விடுதலை கிடைத்து விட்டது. அவன் சுதந்திரப் பறவையாகி விட்டான். இனி அவன் இன்னொரு வீடு தேடிப் போய் ஊழியம் செய்யப் போவதில்லை. இன்று பையிலே போதுமான முதல் இருக்கிறது. தைரியமும் யோசனையும் சொல்ல நண்பன் சண்முகம் இருக்கிறான்; இப்போதைக்குத் தங்கியிருக்க இளைஞர் சங்கக் கொட்டகை இருக்கிறது. இதற்கு மேல் என்ன வேண்டும்! கூட்டை விட்டுத் திறந்து விடப்பட்ட கிளி மீண்டும் கூட்டுக்குள்ளேயே போய் உட்கார்ந்து கொள்ள



விரும்புமா? என்னதான் பாலும் பழமுமாகக் கிடைத்தாலும் கூட்டினுள் சிறைப்பட்டுக் கிடப்பதை யார் விரும்புவார்கள்? குப்பனிடம் போய்ச் சொன்னால் அவனுக்கு இது வருத்தமாகத்தான் இருக்கும். இப்பொழுது குப்பனுடைய சிபாரிசு இல்லாமலே அவன் எவ்வளவோ இடங்களில் போய் வேலைக்கு அமர்ந்துவிட முடியும். பெரிய இடங்களில் அவன் அவ்வளவு தூரத்துக்குப் பழகிப் பரிசயமாகி இருக்கிறான். ஆனால் அந்த எண்ணம் அவனுக்கு இப்போது சிறிதும் இல்லை. அந்த வயது தாண்டி விட்டது. கைநீட்டிப் பணம் வாங்குகிற பாவத்துக்காகக் கைகட்டி நிற்கிற எண்ணம் பறந்தோடி விட்டது. பாபு கையும் காலும் நடுக்க, வேகமாக நடந்து கொண்டிருந்தான். வளைக்கு வரிசைகளுக்குப் பின்னால் மண்டியிருக்க இருளைப்போல் எதிர்காலம் இருண்டு தோன்றியது. ஆயினும் ஒரு பொறி ஒளியில் தன் வழி தெரியும் என்ற நம்பிக்கையில் அவன் நடை விரைவாக விழுந்தது.

"டுர்...ர்ர்...ர்...ர்...டுர்ர்ர்ர்..."

பாபுவின் தைரியம், நம்பிக்கை, சிந்தனை எல்லாம் சட்டென அறுபட்டு நின்றன. எதிரே வருவது சேகருடைய ஸ்கூட்டர்தான். அவன் கண்ணில் படாமல் தப்பிக்க இனி ஒரு வழியும் இல்லை. காற்பது ஐம்பதுமைல் வேகத்தில் வந்து கொண்டிருந்த சேகரின் ஸ்கூட்டர் பாபுவின் அருகே வந்ததும் வண்டியில் அகப்பட்டுக் கொண்ட நாய் ஊளையிடுவது போல் கத்திக்கொண்டே நின்றது.

"என்னடா! கதை முடிஞ்சு போச்சா?" ஒரு காலை நிலத்தில் ஊன்றிக் கொண்டு உட்கார்ந்தவாறே கேட்டான் சேகர். எதையும் பொருட்படுத்தாத கவலையற்ற முகம்.

"கதையா, ஏது கதை?"

"பையையும் படுக்கையையும் எடுத்துக்கொண்டு பாத யாத்திரை கிளம்பிவிட்டாயே, அக்கதையைத்தான் கேட்கிறேன். வழியனுப்பு உபசாரம் ஏதாவது நடந்ததா? அல்லது ஒன்றுமே வேண்டாம் என்று நீயே புறப்பட்டுவிட்டாயா?"

அவன் சொன்ன விதத்தைக் கேட்டுப் பாபுவுக்குச் சிரிப்புத்தான் பொங்கி வந்தது.

"சரி, ஏறு பின்னாலே!"

"இல்லை; வேண்டாம். நான் அங்கே..."

"டேய்! ஏறுடா சொல்கிறேன்!" என்று கூறிக்கொண்டு அவன் கொண்டு கிடந்த படுக்கையைப் பற்றி இழுத்தான் சேகர்.

பாபு மறுத்துப் பேசவே அவன் இடம் கொடுக்கவில்லை. அதற்கு மேல் வேறு வழியின்றி, படுக்கையைப் பின் சீட்டில் போட்டு விட்டு அதிலேயே ஏறி உட்கார்ந்து கொண்டான்.

"சும்மா தோளைக் கெட்டியாப் பிடிச்சுக்கடா!" என்று சொல்லிக்கொண்டு வண்டியைக் கிளப்பினான் சேகர். "டொட்டொட்டொர்......" என்று எழுந்தது ஸ்கூட்டர்.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஸ்கூட்டர் பாபு போக வேண்டிய திசையாகவே வட்டமடித்துக் கொண்டு திரும்பியது. கனவைக் கலைத்தது போல் அவன் நினைவைப் பாழாக்கி விடுவானோ என்று பயந்த பாபுவின் நெஞ்சில் ஆறுதல் பிறந்தது.

"எண்டா, இப்ப உனக்கு எங்கே போகணும்? பாரிஸ்டர் பங்களாவுக்கா?"

# இருமலின் மூலகாரணத்தை அகற்றுங்கள்



SIROLIN
"ROCHE"
for COUGHS COLDS and all irritable and inflamed conditions of the Chest and Respiratory Tract

## ஸிரோலின் சாப்பிடுங்கள்

குடும்பத்தினர்
யாவருக்கும்
ஏற்ற
ஔஷதம்

ஸிரோலின் இருமலை நிறுத்து
வதோடு இருமலுக்குக் காரண
மான நீக்கிரைழக்கும் கிருமி
களைக் கொல்லவும் செய்கிறது.

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

"அங்கே எனக்கு என்ன வேலை? அவர்கள் பங்களாவுக்கு அருகில் இறக்கி விட்டு விட்டு விட்டால் போதும். அங்கிருந்து நான் குறுக்கு வழியாக நடந்து போய் விடுவேன்."

"வெள்ளையன் தோட்டத்துக்கா?"

"ஆமாம்."

"ஸ்கூட்டர் இருக்கும்போது குறுக்கு என்ன சுருக்கு? ஆனந்தமாய்ச் சுற்று வழியாகவே போவோமே!"

## அத்தியாயம் 30

# காரும் உயிரும்

சேகர் இல்லாதபோது அவன் மீது உண்டான கசப்பு இப்போது அடியோடு போய் விட்டது. அவன் பேச்சிலும் செயலிலும் ஒரு முரட்டுக் கவர்ச்சியும் சுவையும் இருந்தன. உஷாவைப் பற்றி மட்டும் அவன் பேச்சு எடுக்காமல் இருந்தால் அவனுக்கு வேறு யாரும் இணையாக மாட்டார்கள். அந்தப் பேச்சைத் தவிர்ப்பதற்காகவே பாபு வழியெல்லாம் வாயை மூடிக்கொண்டு வந்தான்.

"இனி மேல் என்னடா செய்யப்போகிறாய்?" என்று கேட்டான் சேகர்.

"ஏதாவது செய்ய வேண்டியதுதான். சும்மா இருந்தால் முடியுமா?"

"உஷாவுக்கு இது தெரிந்தால் வருத்தப்படுவாள். இல்லையா? இனி அவளை எங்கே சந்திப்பாய்?"

பாபு அதைப் பற்றி இது வரையில் யோசித்துப் பார்க்கவில்லை. அவன் முகத்தில் வெறுப்பு வாடை வீசியது.

"உன்னைத்தாண்டா பாபு!"

"காதில் விழுகிறது. அதற்குப் பதில் சொல்ல வேண்டாம் என்றுதான் சும்மா இருக்கிறேன். உஷாவை இனி எதற்காக நான் சந்திக்க வேண்டும்? ஏழைக்கும் பணக்காரிக்கும் என்ன நட்பு வேண்டியிருக்கிறது? பணக்காரர்கள் வீட்டுப் பழக்கமே இனி எனக்கு வேண்டாம்!"

"நான்கூட ஏழைதாண்டா!"

"இருக்கும், இருக்கும்!"

"ஏய்... என்று நினைக்கிறாயா? இந்த ஸ்கூட்டருக்குப் பெட்ரோல் போடக்கூட எனக்கு வழியில்லை, தெரியுமா? தம் அந்தஸ்தைப் பிறருக்குக் காட்ட அப்பா இதை எனக்கு வாங்கிக் கொடுத்து விட்டார். இதை விற்றுவிடுவேன் என்று மிரட்டியே எத்தனை நாளைக்கு நான் காலம் தள்ளிக்கொண்டிருக்க முடியும்?"

சேகர் சொல்வது உண்மைதான். ஆனால் எத்தனை பேர் இந்த ஊரில் பணமில்லாத பணக்காரர்களாக இருக்கவில்லை? அவர்களில் ஒருவனாகத்தான் சேகரும் தோன்றினான். எப்படியிருந்தாலும், கருணை என்று சிறிதும் இல்லாமல் நடந்து கொண்டுவிட்ட அவன் தாய் மீனாட்சியம்மாளை விட, வேலையை விட்டு விலகியது தெரிந்தும் தன்னை ஸ்கூட்டரில் ஏற்றிக்கொண்டு போகமுன் வந்த சேகரின் சுபாவம், மனிதத் தன்மை நிறைந்ததாக அவனுக்குத் தோன்றியது. அவன் யாராக இருந்தாலும் எண்ணத்தில் சிறிது மாறுபட்டவன் என்றே பாபு எண்ணினான்.

"உனக்கு யாரால் வேலை போயிற்று, தெரியுமா?"

பாபு வேண்டுமென்றே, "தெரியாது" என்று பதிலளித்தான்.

"எல்லாவற்றுக்கும் அந்த உஷாதான் காரணம். எனக்கு நன்றாகத் தெரியும்."

"எனக்கு அது தெரிய வேண்டியதில்லை. அவளால் எனக்கு இந்த வேலை போயிருந்தால் அவளுக்கு நன்றி செலுத்த நான் தயார்!" என்றான் பாபு.

"நீ இந்தப் பழமொழியைக் கேட்டிருக்கிறாயா? 'காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனானும்' என்று. பாவம், அம்மா நன்றாக ஏமாந்து போனாள். வேலை போனதற்காக நீ நன்றி செலுத்துவதானால் எனக்குத்தான் செலுத்த வேண்டும். சின்னப் பிள்ளைக்கு நிச்சயித்திருக்கும் பெண்மீது நான் ஒரு கண் வைத்திருக்கிறேன் என்று அவளுக்கும் அப்பாவுக்கும் எப்படியோ தோன்றி விட்டது! அதற்கு நீ பெரிதும் துணையாக இருப்பதாக அவர்களுடைய எண்ணம். இது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மைதான் நான் கண் வைத்திருப்பதும். அது எப்படியோ போகட்டும்; அதனால் உனக்கு வேலை போனதுதான் மிச்சம். அந்தப் பெண் உஷாவை பாரிஸ்டர் என்னவோ எங்கள் ரமேஷுக்குக் கொடுப்பதாயே இல்லை. இப்பொழுது சிங்கப்பூரிலிருந்து வந்திருக்கிறான் பார், ஒரு மைனர். அவனுக்குக் கொடுக்கப் போவதாக இப்பொழுதுதான் அவர்கள் வாயாலேயே சொன்னதைக் கேட்டு விட்டு வந்திருக்கிறேன்! இதற்கு என்ன சொல்கிறாய்?" என்றான் சேகர்.

பாபுவுக்கு ஒரு காரணமும் இல்லாமல் இந்தச் செய்தி சிறிது அதிர்ச்சியைக் கொடுத்தது. சேகரைப் போல் அவனால் இந்தச் செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியோடு பேச முடியவில்லை. "ம், இது நிச்சயமாகி விட்டதா, என்ன?" என்று பெருமூச்சுடன் கேட்டான்.

"என்னடா பெருமூச்சு விடுகிறாய்? நிச்சயமாகாவிட்டால் நீ இதைத் தடுத்து விடுவாய் போலிருக்கிறதே!"

"தடுப்பதற்கு நான் யார்? நான் அதற்காகக் கேட்கவில்லை. உண்மையைத் தெரிந்து கொள்ளத்தான் கேட்கிறேன்!"

"நாளைக்கு உஷாவையே கேட்டுத் தெரிந்து கொள்ளேன். இது உனக்குப் பெரிய காரியமா?" என்றான் சேகர்.

இவ்வளவு நேரத்துக்கு மேல் ஸ்கூட்டரின் சத்தம் கேட்பதையறிந்த சண்முகம், சங்கத்துக்குள்ளிருந்து வெளியே வந்து, "யார் அங்கே?" என்று கேட்டான்.

தோட்டத்திலுள்ள ஒரே இருட்டாக இருந்தது. ஸ்கூட்டரின் வெளிச்சம் அவன் முகத்தில் அடித்ததால் கண்கள் கூசின. அவன் கைகளால் கண்களை மறைத்துக் கொண்டு நின்றான்.

"நான்தான்—பாபு!"

"இன்னும் யார்?"

"சேகர் அண்ணு!"

சண்முகம் கொட்டகைக்குள் நுழைந்து விளக்கைத் தேடி ஏற்றினான். பாபு படுக்கையும் கையுமாக வந்திருப்பதைப் பார்த்து விட்டு, அவன் சேகரின் முகத்தைக் கவனித்தான். "என்ன விஷயம், பாபு! எங்கே போய் விட்டு வருகிறீர்கள்?" என்று கலவரத்தோடு கேட்டான்.

"இன்னும் புரியவில்லையா அப்பா, உனக்கு? பாபுவுக்கு இனி இங்கேதான் வேலை!" என்றான் சேகர்.

"அப்படியென்றால்?..." சண்முகத்தின் குரலில் பரபரப்பு காணப்பட்டது.

"வேலையை விட்டுவிட்டான்!"

சண்முகம் அதற்கு மேல் ஒன்றும் கேட்கவில்லை. "சரி; சாப்பிட்டு விட்டீர்களா?" என்று மட்டும் சற்றுப் பொறுத்துக் கேட்டான்.

தலையை ஆட்டினான் பாபு. ஆனால் சேகர் உடனே, "என்ன தலையை ஆட்டுகிறாய்? சாப்பிட்டு விட்டா புறப்பட்டாய்?" என்று கேட்டான்.

"ஆமாம், ஆனால் நீங்கள்?"

"இன்றுதான் அங்கே சரியான விருந்து ஆயிற்றே!"

வாசலில் ஏதோ படல் அசையும் சத்தம் கேட்பதை அறிந்து சண்முகம் எழுந்து வெளியே சென்றான். தேவானைதான் தலையைத் திருப்பிக் கொண்டு நின்றான்.

"ஸ்ஸ்...இப்படி ஓரமாகத் தனியா வந்திடு. உள்ளே வேறே ஆளு வந்திருக்கு!" என்று சண்முகம் ஒரு மரத்தடி ஓரமாக வந்து நின்றான்.

தேவானை தயங்கித் தயங்கி நடப்பதைக் கண்டு அவனுக்குக் கோபம் வந்தது. "எங்கே—இப்ப எதுக்காக வந்தே?" என்று பல்லைக் கடித்துக்கொண்டு கேட்டான்.

தேவானையிடமிருந்து விடை எதுவும் வெளிப்படவில்லை. அதற்குப் பதிலாக ஒரு கேவல்தான் வெளிப்பட்டது. சண்முகம் சட்டென்று ஒரு நெருப்புக் குச்சியைக் கிழித்து அவள் முகத்துக்கு எதிரே நீட்டிப் பார்த்தான். சிவந்த கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது.

சண்முகம் பதறிப் போய் நெருப்புக் குச்சியை அணைத்து எறிந்து விட்டு, "என்ன தேவானை! என்ன? என்ன ஆச்சு?" என்று அவள் தோளை உலுக்கியவாறு கேட்டான்.

தேவானை தெளிவாகப் பேசுகிற நிலையில் இல்லை. "பயமா இருக்கு. அத்தான்...தலை ஆடிக்கிட்டே இருக்கு; கண் மூடிக் கிடக்கு. சொட்டுப் பாலுகூட இறங்கல்லே...நெஞ்சு வரைக்கும் போன பாலு அப்படியே வெளியே வந்திட்டுது! நான் என்ன செய்வேன், அத்தான்! உன்னை எழுப்ப வேணும்னுதான் பார்த்தேன். ஆனா இந்த ராப்பொழுதை நான் எப்படிக் கழிப்பேன்!" என்று விக்கி விக்கி அழுதவாறே சொல்லி முடித்தாள்.

சண்முகம் பக்கத்துக் குடிசைக்கு விரைந்து சென்றான். தேவானையும் பின் தொடர்ந்தாள். அங்கே அவளுடைய தாய் மரணப் படுக்கையில் கிடந்தாள். இந்த இரண்டு நாட்களாகத் தேவானைக்கும் சண்முகத்துக்கும் வழக்கம் போல் சரியான பேச்சு வார்த்தை இல்லாததால் அவள் தாயின் நிலைமை இவ்வளவு மோசமான செய்தி அவனுக்குத் தெரியவில்லை.

"முந்தியே வந்து சொல்வதற்கு என்ன உனக்கு?" என்று கோபித்துக் கொண்டான் சண்முகம்.

தேவானை மூக்கைச் சிந்திப்போட்டாள்.

"சரி, இரு......யாராவது டாக்டர் வருவாரா, பார்க்கலாம்!" என்று சொல்லி விட்டு, சங்கத்துக்கு ஓடி வந்தான் சண்முகம்.

"இந்த நேரத்துக்கு மேல் எந்த டாக்டர் வருவார்? இந்தப் பக்கத்தில் யாரையும் எனக்குத் தெரியாது. பணத்தைப் பாராமல் விட்டெறிந்தால் ஒரு கால்......"

சேகர் வார்த்தையை முடிப்பதற்குள், பாபு சட்டைப் பையிலிருந்த நோட்டுகளை வெளியே எடுத்துக் காட்டி, "எவ்வளவு ஆனாலும் சரி; கிட்டத்தட்ட நூறு ரூபாய் இருக்கிறது. கவலையில்லை!" என்றான்.

சண்முகமும் தேவானையும் இந்த எதிர்பாராத நண்பர்களைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள்.

சேகர் ஸ்கூட்டரில் ஏறிக்கொண்டு புறப்பட்டான். ஏதோ அவனைத் தடுத்துச் சொல்ல வந்த பாபுவைப் பார்த்து, "டேய், சும்மா இருடா! நீ போனால் எந்த டாக்டர் வருவார்? நானே போனால்தான் நடக்கும்" என்று சொல்லிவிட்டுப் போனான்.

அரை மணி கழித்து மோட்டாரும் ஸ்கூட்டருமாகத் தேவானையின் குடிசை வாசலில் வந்து நின்றன. மோட்டாரில் வந்த லேடி டாக்டர் ராஜபூஷணம் ஊசி ஒன்றைப் போட்டாள். பாபுவை அவள் தெரிந்தவளாகவே காட்டிக்கொள்ளவில்லை. பீஸ் வாங்கிக் கொண்டதும் அதைக் கவனித்ததாகவும் காட்டிக் கொள்ளவில்லை. அவளுடைய கார் புறப்பட்டது. ஆனால் அதே சமயத்தில் உள்ளே படுத்துக் கிடந்த நோயாளியின் மூச்சும் புறப்பட்டு விட்டது! (தொடரும்)

# உங்கள் துணிகளில் அவைகள் வளருகின்றனவா ?



அநேகமாக அப்படித்தான்! வழக்கமாக இரவுகளிலே நடமாடும் கரப்பான் பூச்சிகளால் உங்கள் துணிகளும், புஸ்தகங்களும் சேதமடைகின்றன. சில்குகளிலும், கம்பளித் துணிகளிலும், மற்றுமுள்ள வீட்டுச் சாமான்களிலும் அவைகள் செழிப்புடன் வளருகின்றன. அழுக்குகளை புசித்து வளரும் கரப்பான் பூச்சிகளால் நோய்கள் பரவப்படுகின்றன. நோய்களை கொண்டு வருவதற்கும், மேலும் உங்கள் வீட்டுச் சாமான்களுக்கு சேதமேற்படுத்துவதற்கும் முன்னால் அவைகளைக் கொன்று விடுங்கள்

# டுகோன் பெய்ட்டினால் இப்பூச்சிகளைக் கொன்று விடுங்கள்!




கரப்பான் பூச்சிகளையும், ஈக்களையும், மற்றுமுள்ள பூச்சிகளையும் முதலில் ஆகர்ஷித்து, பிற்பாடு கொல்லும் ஒரு தனிப்பட்ட சேர்மானப் பொருள் டுகோன் பெய்ட்டில் சேர்க்கப்பட்டுள்ளது. டுகோன் பெய்ட் மிகச் சிக்கனமானது. பூச்சிகள் கூடுமிடங்களில் டுகோன் பெய்ட்டை கொஞ்சமாக உபயோகித்தால் போதும்... டுகோன் பெய்ட் அபாயமற்றது.



TB 1

| எளிதில் உபயோகிக்கக் கூடியது | தூவுவது சுலபம் | பலனளிக்கிறது |
|---|---|---|
| சரமான ஒரு துண்டு கடுதாசியில் டுகோன் பெய்ட்டைத் தூவுங்கள். | அக்கடுதாசியை பூச்சிகள் கூடு மிடங்களில் வையுங்கள். | பூச்சிகள் டுகோன் பெய்ட்டைச் சாப்பிட்டு, சில நிமிடங்களில் இறந்துபோய் விடுகின்றன. |

டுகோன் பெய்ட் பரிசீலனை செய்யப்பட்ட ஒரு பேயர் தயாரிப்பு—
சிக்கா பிரைவேட் லிமிடெட்டுக்காக தயாரிக்கப்பட்டது
விநியோகஸ்தர்கள்: ஜப்ரீ மேனர்ஸ் அன்டு கம். பிரைவேட் லிட்., பம்பாய்

# வேலைக்கு வந்தவள்!

ஸி. ஆர். ராஜம்மா

அவளிடம் வேலைக்கு வந்தவர்கள் எல்லாம் நிலைக்காமல் ஒட்டுதலின்றிப் போய்க் கொண்டே இருந்தனர். சிறுமி சீதா வேலையில் ஒட்டிக்கொண்டாள்! எப்படி முடிந்தது?

நாகராஜன் ஆபீஸிலிருந்து வந்த போது சுசீலா அவனை வரவேற்கப் புன்னகை தவழ வாசலில் வந்து நிற்கவில்லை. சமையலறையில் பாத்திரங்களின் ஓசை கேட்டது. நாகராஜன் தனக்குள்ளாகச் சிரித்துக்கொண்டு "சுசீ!" என்று அன்புடன் அழைத்தான்.

"கொஞ்சம் உட்காருங்கள். காப்பி கலந்து கொண்டு வருகிறேன்!" என்ற பதில் சுசீலாவிடமிருந்து வந்தது.

"ஏன் வேலைக்காரி வரவில்லையா?" என்றான் நாகராஜன். அவனுக்கு விஷயத்தை ஊகிக்க அதிக நேரம் பிடிக்கவில்லை. இருந்தும் கேட்டு வைத்தான்.

"போதுமே அவள் வேலை செய்கிற லட்சணம். இனிமேல் இந்த வீட்டு வாசற்படி மிதிக்காதே என்று சொல்லி அனுப்பி விட்டேன்."

"நீ அவளுக்குச் சொல்ல வேறு வேண்டுமா, அவளே மிதிக்க மாட்டாளே!"—நாகராஜனையும் மிஞ்சி வந்துவிட்ட வார்த்தைகள் அவை.

"ஆமாம்! நீங்களே இப்படிச் சொன்னால் மற்றவர்கள் என்னை ஏன் சொல்ல மாட்டார்கள்? நான் அத்தனை கொடுமைக்காரி! இல்லையா?" என்று முணுமுணுத்தாள் சுசீலா.

வெள்ளித் தம்ளரைக் கணவன்முன் நீட்டினாள் சுசீலா.

காப்பி என்ற பெயரில் அந்தத் திரவத்தைப் பருகிய போது, நாகராஜனின் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை.

அத்தோடு, அவள் சமைத்துத்தான் சாப்பிட்டாக வேண்டிய தண்டனையும் வந்து விடுமோ என்ற பயம் பிடிக்கவே, அவன் முகம் அஷ்ட கோணலாகக் கோணியது. அதற்கும் மேலாக, "இனிமேல் நானேதான் வீட்டு வேலைகளையெல்லாம் செய்யப் போகிறேன்" என்று அவள் சொன்னபோது தூக்கியே வாரிப் போட்டுவிட்டது நாகராஜனுக்கு.

"உண்மையாகவா சுசீலா, உன் உடம்பு என்னத்துக்காகும்?" என்றான்.

"எப்படி நாசமாய்ப்போனால் என்ன? நீங்கள்தான் நல்ல வேலைக்காரியாகக் கொண்டு வரமாட்டேன் என்கிறீர்களே!" என்றாள் சுசீலா.

"நல்லவள் என்றால் அவள் எப்படியிருக்க வேண்டும், சுசீலா? ஏற்கெனவே நம் வீட்டைப் பற்றி வெளியில் என்ன பிரஸ்தாபம், தெரியுமா?"

"யாரும் நிலைத்து நிற்க மாட்டார்கள் என்பார்கள். அவர்கள் என்ன, நீங்களேதான் சொல்லுகிறீர்களே! வேலைக்காரர்களிடம் எனக்குப் பழகத் தெரிந்தால்தானே?" என்று முகத்தைத் தொடுத்தாள் சுசீலா.

"சரி போனதெல்லாம் போகட்டும். ஹோட்டல் சாப்பாடு எடுக்கலாமா இனிமேல்?"

"வேண்டாம், வேண்டாம், இதோ பாருங்கள், நான் சற்றுமுன் போய்ப் புத்தகங்கள் வாங்கி வந்து விட்டேன். அதைப் பார்த்துச் சமையல் செய்துவிடுகிறேன்" என்றாள் சுசீலா.

சுசீலா பெரிய இடத்துப் பெண்; படித்தவள். நாகராஜனுக்கோ கை நிறையச் சம்பளம் வந்தது. சொந்தம், பந்தம் என்று ஒட்டிக் கொள்ள மனிதர்கள் இல்லை. ஆறு மாதங்களுக்கு மேல் ஒரு வேலைக்காரி கூட அங்கு தங்கவில்லை. ஒரு வாரம், ஏன் ஒரே நாள் வந்து தங்கிப் போனவர்களும் உண்டு. சுசீலாவுக்குத் தனக்காகவும் ஒன்றும் தெரியாது; வேலைக்காரர்களையும் அவர்கள் போக்குப்படி செய்ய விடமாட்டாள்.

சுசீலா சமைக்க ஆரம்பித்து ஒரு வாரம் ஆகிவிட்டது. ஆபீஸில் அதிக வேலை என்று மத்தியானம் சாப்பிட வருவதை ஒத்திப் போட்டான் நாகராஜன். இரவு எந்த விதச் சாக்கும் சொல்ல முடியாமல் போய்விட்டது. "நான் இத்தனை கஷ்டப்படுகிறேனே! யாரையாவது வேலைக்குக் கொண்டுவந்து வைக்கக் கூடாதா?"—ஒரு நாள் சுசீலாவுக்கே அலுத்து விட்டது; நாகராஜனைக் கேட்டாள்.

"நான் நாலைந்து பேரிடம் கேட்டுப் பார்த்து விட்டேன், சுசீ! 'நாகராஜன் வீட்டிலா, ஐயோ! யார் போவார்கள்?' என்று கேட்கிறார்களாம், என்ன செய்ய

லாம், சொல்லு'' என்றான் அவன். இருந்தாலும் அன்று ஆபீஸ் விட்டு வரும்போது அவன் தனியாக வரவில்லை. தன்னோடு ஒரு சிறுமியையும் அழைத்து வந்தான். அவளுக்குப் பன்னிரண்டோ, அல்லது பதின்மூன்றோதான் வயது இருக்கும். ஆனால் அதற்குத் தகுந்த வளர்த்தியில்லாமல் இருந்தாள். ''இந்தப் பெண் யார், இவள் என்ன வேலை செய்யப் போகிறாள்? நான் இவளுக்கும் சேர்த்து வேலை செய்ய வேண்டுமா?'' என்று முணுமுணுக்க ஆரம்பித்து விட்டாள் சுசிலா.

''இதோ பார், சுசி! இந்தப் பெண் வேலைக்கு வேண்டாம் என்றால் உடனே விலக்கிவிட முடியாது. எங்காவது அநாதைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்க முயற்சி எடுத்துக்கொண்ட பின்தான் இவளை இங்கிருந்து அனுப்ப முடியும்!''

''அப்படியா? அடப்பாவமே! சம்பளம் என்ன பேசியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் சுசிலா.

''அதைப் பற்றி உனக்கென்ன? நாம் ஒன்றுமே கொடுக்க வேண்டியதில்லை.''

வேண்டா வெறுப்பாகத்தான் சீதாவை வேலைக்கு எடுத்துக் கொண்டாள் சுசிலா. இவள் என்ன செய்து புரட்டிவிடப் போகிறாள் என்று எண்ணியிருந்த சுசிலா சற்று ஏமாந்துதான் போனாள். அனுபவம் கற்றுக் கொடுத்த பாடத்தின் மூலம் அச்சிறுமி எல்லா விஷயத்திலும் தேர்ச்சியே பெற்றி ந்தாள்.

இந்த அமைதி அதிக நாட்கள் நீடிக்கவில்லை. ஒருநாள் சுசிலா தன் அழகிய முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு ''இந்தப் பெண் எந்த விஷயத்துக்குமே வாயைத் திறக்கமாட்டேன் என்கிறதே! அது என்ன அத்தனை கர்வம்?'' என்றாள்.

''ஐயோ! அவள் ஊமையாயிற்றே! அத்துடன் காது வேறு கேளாது. அப்படிப்பட்டவர்கள்தான் நம் வீட்டுக்கு லாயக்கு. அந்தத் தகுதி இருப்பதால் தானே நான் இங்கே அழைத்து வந்தேன்?'' என்றான் நாகராஜன்.

சொல்லுவதைத் தன் புத்தி நுட்பத்தைக் கொண்டுதான் புரிந்து கொண்டு வேலை செய்கிறாள் என்று கண்டபோது சுசிலாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவளுடைய இயற்கையான குறை வேறு



அவளை இரங்கச் செய்தது. ஆனால் ஒரு நாள் கவிலா பெரிய புகாருடன் நாகராஜனிடம் வந்தாள். "இந்தப் பெண்ணை இன்று என்னுடன் கடைத்தெருவுக்குக் கூட்டிக் கொண்டு போயிருந்தேன். உன் பெண்ணா என்று ஒருத்தி கேட்கிறாள்! அதனால் இனிமேல் இவள் இந்த வீட்டில் வேலைக்கு இருக்கக் கூடாது" என்றாள்.

"நல்ல காலம், உன் பேத்தியா என்று கேட்காமல் இருந்தார்களே?" என்று கூறி நாகராஜன் சிரித்தான்.

"நீங்களும் நானும் ஒன்றாகப் போனால் அப்படிக் கேட்பார்களோ, என்னவோ!" என்றாள் சீதா எரிச்சலுடன்.

"இனிமேல் அப்படியே போகலாமே!" என்ற நாகராஜன், பேச்சை ஹாஸ்யமாக்கிவிட முனைந்தான். அவள் பேச்சு அவன் நெஞ்சிலும் ஊவா முள்ளைப் போல் தைக்காமல் இல்லை. காரணம், கவிலா அவனுக்கு இரண்டாவது மனைவி. நாகராஜனுக்கு அப்படி ஒன்றும் வயதாகவில்லை என்றாலும், இரண்டாவது என்றால் இரண்டாவதுதானே?

"மற்றவர்கள் எதிரில் இந்தப் பெண் என்னிடம் அத்தனை உரிமை கொண்டாடுகிறது! அதனால்தான் அவர்கள் அப்படிக் கேட்கிறார்கள்!" என்று குறைப்பட்டாள் கவிலா.

"........."

"என் பெண் என்றால், பெரிய இடத்துப் பெண்களின் களை முகத்தில் தெரிகிறது என்றுதானே அர்த்தம்!"

"அதை உன்னைக் கேட்ட பெண்மணியையே போய்க் கேள்!"

"இனிமேல் வெளியே சாமான் வாங்கப் போகும்போது கூட இவளை அழைத்துச் செல்வதற்கில்லை. எங்கேயாவது அனுப்ப வழி பாருங்கள்."

"உடனேயே அது முடியக்கூடிய காரியமில்லை என்று ஆரம்பத்திலேயே சொன்னேனே, கவி! கொஞ்சம் பொறு. செய்து விடுகிறேன்!"

'ஆரம்பத்திலேயே நீங்கள் அந்த வார்த்தையைப் போட்டு வைத்ததால்தான் நான் உங்கள் தயவை இந்த விஷயத்தில் நாடுகிறேன். இத்தனை நாட்கள் வரை வேலைக்காரர்களை வெளியேற்ற நீங்களா வந்தீர்கள்?" என்றாள் கவிலா.

சிரித்து விட்டான் நாகராஜன்.

"வேலைக்காரர்களை நீக்குவதற்கு நான் வேண்டியதில்லை. ஆனால் கொண்டு வந்து அமர்த்த நான்தானே வேண்டும்?" என்றான் அவன்.

"பின்னென்ன? எத்தனை விலை கொடுத்து வாங்கினாலும் காலைக் கடிக்கும் செருப்பைக் கழற்றிப் போடுவதுதானே புத்திசாலித்தனம்!"

"கடிக்காமல் அதைப் பக்குவப்படுத்திச் சரியாக்கி அணிந்து கொள்வது அதைவிடப் புத்திசாலித்தனம், கவிலா!"

"எனக்கு அப்படிப்பட்டதிர்ப் பந்தம் இல்லை. இந்தப் பெண் சீதாவுக்கு ஏதாவது வழிபாருங்கள்" என்றாள் கவிலா.

நாட்கள் மெல்ல நகர்ந்தன. சீதாவைப் பற்றிச்








"அப்பா! இந்தக் கணக்கு சரிதானு, பார்!"
"சரி! சரி!"

---

சுசிலாவிடமிருந்து வரும் புகார்கள் மெல்லக் குறையத் தொடங்கி அறவே நின்றும் விட்டன. சீதாவின் ஆதரவு இல்லாமல் அவளால் இருக்க முடியாது போல் தோன்றியது. சுசிலா வளர்த்த நாய்கூட வீட்டில் இல்லை. காரணம், அது கர்ப்பமாகி விட்டது என்று சுசிலா அதை விற்று விட்டாள். தாய்மை அடைகிறவர்கள் மேல் அவளுக்கு அத்தனை கோபம். கல்யாணமாகிக் கிட்டத்தட்ட ஒன்பது வருஷங்கள் ஆகியும் தனக்கு அந்தப் பேறு கிடைக்காதது அவளுக்கு அடங்காத எரிச்சலைத் தான் உண்டாக்கி இருந்தது.

அன்று நாகராஜனுக்குச் சுசிலாவே சாப்பாடு பரிமாறினாள்." சீதாவைக் கண்ணிலேயே காணுமே! என்ன அந்தப் பெண்ணுக்கு நீயே ஏதாவது ஏற்பாடு பண்ணி விட்டாயா?" என்று கேட்டான் நாகராஜன் சந்தேகத்துடன்.

"எந்தப் பெண்?" என்றாள் சுசிலா ஒன்றும் தெரியாதவள் போல்.

"அதுதான் வேலைக்காரி!"

"பிறக்கும் போதே அவள் வேலைக்காரியாகப் பிறக்கவில்லை. அவளுக்குப் பெயர் இல்லையா?" சுசிலாவின் இந்தத் தத்துவம் நாகராஜனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சிறிது நேரத்துக்குப் பின் அவளே தான் மறுபடியும் பேசினாள்: "சீதாவுக்கு ஜுரம் இரண்டு நாட்களாக."

"அடேடே, அப்படியானால் நீயா சமைத்தாய்?" என்றான் நாகராஜன். உண்மையிலேயே சாப்பாடு ருசியாகத் தான் இருந்தது.

"ஆமாம்! சீதாவின் பொறுமை எனக்கு எத்தனையோ விஷயங்களைக் கற்றுக் கொடுத்திருக்கிறது. இனிமேல் பெரியவர்கள் யாரையாவது வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டியதுதான். சீதாவுக்கு இந்த விஷயத்தில் எல்லாம் என்ன தெரியும்?" என்றாள் சுசிலா.

நாகராஜன் மனைவியின் முகத்தை உற்றுக் கவனித்தபோது அவள் முகம் சிவந்தது. தான் தாயாகப் போகிறோம் என்ற கர்வம் அதில் பளிச்சிட்டதைக் கண்ட நாகராஜன் வாய்விட்டே பலமாகச் சிரித்து விட்டான்.

"ஆமாம்! சொல்வது காதிலேயே கேளாத இந்தப் பெண்ணை வைத்து ஒன்றும்செய்யமுடியாதுதான்" என்றான்.

"இன்னும் என்னை ஏமாற்றப் பார்க்க வேண்டாம். சீதா அப்படி நடிக்க வேண்டும் என்று உபதேசம் செய்தது நீங்கள் தானே? வெகு நாட்களுக்கு முன்பே நான் இதைத் தெரிந்து கொண்டு விட்டேன்!" என்றாள் சுசிலா.

"நீ தெரிந்து கொள்ளாத ஒன்று இருக்கிறது, சுசி. உன் மனம் பக்குவப் பட்டு விட்டது. அதனால் சொல்கிறேன். சீதா என் மகள்தான். அநாதைப் பள்ளியில்வளர்ந்தவள்தான். இங்கே அழைத்து வந்தேன். நிலைமை சரியாக வில்லை என்றால் மறுபடியும் அங்கேயே சேர்த்து விட எண்ணினேன். காரியம் வெற்றியாக முடிய வேண்டும் என்பதற்காகப் பாச உணர்ச்சியைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தேன். அவளிடம் உனக்குப் பிடிப்பு விழுந்துவிட்டது. இல்லையா, சுசி?" என்று உணர்ச்சியுடன் நாகராஜன் கூறிய போது சுசிலா தலைகுனிந்தாள். எத்தனை அடக்கமில்லாமலும் பொறுமையில்லாமலும் நடந்து கொண்டு விட்டோம் என்று எண்ணவே, அவளுக்கு என்னமோ போல் இருந்தது. யாராலும் கட்டுப்படுத்த முடியாத அவள் குணத்தை வயிற்றிலிருக்கும் சிறிய சிசு கட்டுப்படுத்தி வழிக்குக் கொண்டு வந்து விட்டது என்பதை நம்பவே ஆச்சரியமாக இருந்தது நாகராஜனுக்கு.

சுசிலாவின் முயற்சியால் புது வேலைக்காரி வந்து விட்டாள். ஆனால் சுசிலாவைப் பற்றி அவள் புகழுகிற புகழை மற்றவர்கள் கேட்டால்... சிறுமி சீதாவுக்கு இப்பொழுதுதான் இந்தப் புது உறவு தெரிய வந்தது. ஆனால் அதில் அவள் மனம் லயித்ததைவிட, சின்னஞ் சிறு குழந்தை ஒன்று தன்னை அக்கா என்று அழைக்கப் போகும் முறையில் தான் அவள் ஆச்சரியம் அடைந்தாள்!





# மாஸ்டா பல்புகள்

பிரகாசம் அதிகம் நீடித்து உழைக்கும்







**அஸோஸியேடட் எலெக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்**

தலைமை ஆபீஸ்: க்ரவுன் ஹவுஸ், 6 மிஷன் ரோ, கல்கத்தா.

கிளைகள்:
பம்பாய், புதுடெல்லி, மதராஸ், பங்களூர், கோயம்புத்தூர், நாகபுரி.

டீலர்கள்:

AIC 208 TM

பி. நடேசன் அண் கோ., லிமிடெட், 10, மவுண்ட் ரோடு, சென்னை-2 ● பேசம்ரச பிரதர்ஸ், 392, தங்கசாலை தெரு, சென்னை-1 ● குட்மேன் அண் கோ., 31, டூப்ளே தெரு, பாண்டிச்சேரி

---

# பிரகாசிக்க

உங்கள் பித்தளை, செம்பு சாமான்களை தினசரி **பிராஸோ** வால் துலக்குங்கள்






உங்கள்
கேசத்திற்கும்
தலைக்கும்
ஆரோக்கியத்தையும்
போஷாக்கையும் அளியுங்கள்!

கால்கேட் ஹேர் டானிக் லெனோலின் என்ற ஓர் அற்புதமான எண்ணெய்யுடன் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இது தலையில் இயற்கையாக உண்டாகும் எண்ணெய்களை வற்றாது புதிப்பித்து... கேசத்தை ஆரோக்கியத்துடனும், சேர்த்தியாகவும் இருக்க உதவுகிறது.

COLGATE
COLGATE HAIR TONIC Lanolin

புதிய **கால்கேட்**
**ஹேர் டானிக்**
லெனோலின் கலந்தது

---

எப்பொழுதும்
உங்களுடைய
சேவைக்கு **I.O.B.**

Safe Deposit Locker

**தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்**

THE INDIAN OVERSEAS BANK LIMITED, MADRAS
IOB

IOB-6-5A

## 111. நெளியும் புழு




"நெளிந்து நெளிந்து செல்லும் புழுவைப் பார்த்திருப்பீர்களே !"

"தினமும் நூறுதரம் பார்த்திருக்கிறேன். இதற்கு என்ன 'உயிர்க் காலே' ஜுக்குப் போக வேணுமா என்ன ?"

"சந்தோஷம், இந்தப் புழு நெளிவதால்தானே ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குச் செல்வது ? அது எப்படி என்று விளங்கும்படி சொல்லுங்கள், பார்ப்போம் !"

"புழு நெளிவதை விளங்கும்படி சொல்வதா ? புரியவில்லையே !"

"நான் சொல்கிறேன். முதலில் தலைப் பக்கத்தைக் கெட்டியாக ஊன்றிக் கொள்ளும். பிறகு வால் பக்கம் நுனியைத் தலைப் பக்கத்து நுனிக்கு எவ்வளவு அருகில் கொண்டுவர முடியுமோ, அவ்வளவு அருகில் கொண்டு வரும். அப்போது உடல் பாகம் வளைத்த வில்லைப் போல் முதுகுப்புறத்தில் ஒரு கூன் போடும். தன் உடலைத் தானே இரண்டாக மடித்துக் கொண்டது போலத் தோன்றும். அப்போது வால் பாகத்து நுனியைக் கெட்டியாக ஊன்றிக் கொண்டு தலைப் பக்கத்து நுனியைக் கூடிய மட்டும் நீட்டி மறுபடியும் அவ்விடத்தில் தலைப் பக்கத்து நுனியைக் கெட்டியாக ஊன்றிக் கொள்ளும். இதற்குள் ஏறத்தாழத் தன் உடல் நீளத்தில் மூக்கால் பாக நீளம் முன்னேறி நகர்ந்து விட்டிருக்கும். இப்படித்தான் புழு நெளிந்து நெளிந்து செல்வது. இப்படிப் புழு நெளிவதைப்போலத்தான் நமது சிறு குடல் பெருங்குடல் மலாசயம் ஆகியவை சதா நெளிந்து இயங்கிக் கொண்டே இருக்கின்றன. ஆனால் குடல் தன்னிடத்திலிருந்து வேறிடத்துக்கு நகர்ந்து விடுவதில்லை. குடலினுள்ளிருக்கும் பொருள் மட்டும் சிறிது சிறிதாக வெளியே செல்லும் மார்க்கத்தை நோக்கி உந்தப்படும். இவ்வாறு சிறு குடல், பெருங்குடல் ஆகியவை நம்மையுமறியாமல்-தாமாகவே நெளிந்து கொண்டே இருக்கும். இவ்வித நெளிவு, அசைவு, இயக்கம், ஸங்கோச விகாஸம் ஆகியவற்றை 'அநாதீன சேஷ்டை' என்று நமது சாஸ்திரங்கள் சொல்லும். கை கால்களை நாமாக மடக்குவது, நீட்டுவது, உயர்த்துவது, தாழ்த்துவது போன்ற இயக்கங்கள் நாம் இஷ்டப்பட்டபோது இஷ்டப்பட்டபடி இயக்கப் படுபவையானதால் இவற்றை 'ஆதீன சேஷ்டை' என்று நமது சாஸ்திரங்கள் சொல்லும். இவ் வகையான அசைவு, நெளிவு, இயக்கம் முதலியவை மாம்ஸங்கள் (Muscles), மாம்ஸ கண்டரங்கள் (Muscle Tendons) ஆகியவற்றின் ஒத்துழைப்பால் ஏற்படும் செயல்களல்லவா ? இவ்வகைச் செயல்களின் இரண்டு வகைகளை ஆதீன சேஷ்டை (Voluntary Movement) அநாதீன சேஷ்டை (Involuntary movement) மேலே விளக்கியாயிற்று. மேலும் காலின சேஷ்டைகள் (Rythmic movement) தாது பரிணாமபர சேஷ்டைகள் (Trophic movements) என்றெல்லாம் விவரிக்கப்பட்டுள்ள மாம்ஸங்கள் அவற்றின் கண்டரம்பேசிகள் ஆகியவற்றைச் சம்பந்தித்த இயக்கங்களைச் சமயம் வரும் போது பிரஸ்தாபிக்கலாமே ! எல்லா விதமான இயக்கங்களுக்கும் ஒரு விஷயம் பொதுவானது. இந்த இயக்கங்கள் சரிவர நடக்க வேணுமானால் இயங்கும் மாம்ஸ (Muscle)ங்களுக்கு ஓரளவு நெய்ப்புத் தன்மை இருத்தல் அவசியம். இயங்கும் யந்திரங்களுக்கு எண்ணெய் விட்டாலல்லவா சரிவர இயங்கும் ? அதே போலத்தான் சரீரத்தின் மேற்புறமும் உட்புறமும் எண்ணெய்ப் பசை போதுமான அளவு இருந்தால்தான் மேலே விவரித்த பலவிதமான இயக்கங்களும் சரிவர நடைபெறும். குடல் இயங்கினால் தான் மலம் வெளியாகும். குடலின் இயக்கத்தைப் புழு நெளிவதற்கு ஒப்பிட்டுச் சொல்லலாம். இவ்வித நெளிவு அல்லது இயக்கம் சரிவர நடைபெறக் குடலுக்கும் உட்புற நெய்ப்பு அவசியம் வேணும். அது இல்லாவிட்டால் எண்ணெய் இல்லாத யந்திரம்போல் இயக்கத்தின் தரம் குறையும்.

இதனால் மலபந்தம் ஏற்படுவது சகஜந்தானே ; மேலும் வெளியே போக வேண்டிய மலாம்சங்கள் குடலின் உள்ளே நிற்பதால் என்னகும் தெரியுமா? குடலிலுள்ள உறிஞ்சிகள், மலாம்சத்திலுள்ள ஈரத்தை [ஜலாம்சத்தை] அதிகமாக உறிஞ்சி ஏற்கும். இதனால், மலம் மேன்மேலும் கடினமாகிக் களிமண் போலாகி, அதுவும் மாறிக் கல்லுருண்டைகள் போலாகும். பிறகு மலம் வெளிப்படுவது மிகவும் கஷ்டமாகிவிடும். மலம் தடைப்படுவதால் அது மேன் மேலும் அழுகிக் கெடவும் ஏராளமான



"ஏங்க! என்னைச் சந்தேகப் பேர்வழின்னு சொல்றீங்க?"

"ஐயோ! நான் சந்தேகம்கிற வார்த்தையே சொல்லல்லியே!"

வாயுக்கள் ஏற்படவும் நேரிடும். மலத்தில் திரவாம்சம் குறையக் குறைய இந்த வாயுக்கள் பிரிக்கப்பட்டு இங்குமங்கும் சஞ்சரிக்கவும் அதைத் தொடர்ந்து வேறு விதத் தொல்லைகள் ஏற்படவும் செய்யும். உறிஞ்சிகளால் கிரஹிக்கப்பட்ட உபரி திரவங்கள் மட்டுமென்ன பரிசுத்த மானவைகளா? இல்லை. அழுகிக் கெடுற்ற கழிவுப் பொருள்களில் எத்தனையோ விதமான விஷப் பொருள்களும் உண்டாகியிருக்குமே! இவ் விஷங்களோடு கூடிய திரவத்தை உறிஞ்சிகள் ஏற்பதால், விஷங்கள் சரீரத்தில் பரவ நேரிடுகிறது. ரத்த அமுக்கம், மயக்கம், தூக்கமின்மை, மார்வலி, பசியின்மை இப்படிப் பல தொந்தரவுகள் இதனால் உண்டாகும். இவற்றுக்கெல்லாம் மூல காரணம் என்ன? உட்புற வறட்சிதான். அவ்வறட்சியைப் போக்கவும், நெய்ப்புத் தன்மையை உண்டாக்கிக் குடலைச் சரிவர இயக்குவதற்கும் செய்வதுதான், இந் நிலையில் முதன் முதலில் செய்யத் தக்கதாகும். இவ் வகையில் பயன்தரத் தக்க சில மருந்துகளைச் சொல்லியாயிற்று.

வெங்காயத்தில் வெள்ளை வெங்காயம் என்று ஒருவகையுண்டு. இது பூண்டு அல்ல. இந்த வெள்ளை வெங்காயத்தை நெய்யில் வறுத்து அதற்குச் சம பாகம் பனங்கற்கண்டைச் சேர்த்து அந் நெய்யையே விட்டு அரைத்து லேஹியம்போல் வைத்துக் கொள்ளவும். இதில் வேளைக்குக் கால் அல்லது அரை தோலா விதம், தினம் 2 வேளை சாப்பிட்டு, மேலே சிறிது பாலைப் பருகி வருவதால் உஷ்ணம் தணியும், உடல் வறட்சி தீரும், குடல்களில் நெய்ப்புத் தன்மை பெறும், மலபந்தம் நீங்கும். குடல் மலாசயங்களின் அழற்சி தீரும். மூலத்தின் உபாதையும் கணிசமாகக் குறையும்.

பொதுவாகவே வெங்காயத்தைத் தினசரி ஆகாராதிகளில் தாராளமாகச் சேர்த்து வருவது.

தனியா 2 பங்கு, சுக்கு 1 பங்கு என இட்டுக் காய்ச்சிய ஜலத்தையே காய்கறிகள் வேக விடுவதற்கும், ரஸம், குழம்பு முதலானவை வைப்பதற்கும் உபயோகிப்பது.

தாராளமாக மோர் சேர்த்து உண்பது (அதிலும் நாயுருவிக் கஷாயத்தை ஜலத்துக்குப் பதிலாகத் தயிருடன் சேர்த்துக் கடைந்த மோரானால் மிகவும் உத்தமம்) ஆகியவை மூலத்துக்கு நல்லது. பொதுவாக, கீரை இனுசுகளை ஆகாராதிகளில் சேர்த்து வருவதால் மலபந்தம் ஏற்படாது.உட்புற வறட்சி குறையும். குடலினுள்ள அழற்சியும் குணமாகும். முக்கியமாக மணத்தக்காளிக் கீரை குடலின் அழற்சியை ஆற்றுவதில் சிறப்பு வாய்ந்தது. மலபந்தத்தை நிவர்த்தி செய்யும்.

காசினிக்கீரையைக் கறி செய்து ஆகாராதிகளில் சேர்த்துக் கொண்டால் ரத்த மூலத்தில் — வெள்ளம் வெள்ளமாகப் போகும் ரத்தத்தையும் உடனே கட்டுப் படுத்தும். முதலில் தொடர்ந்து சில தினங்கள் உபயோகித்துப் பிறகு வாரத்தில் ஒன்றிரண்டு நாள்விதம் ஏற்று வருவது மிகவும் நல்லது.

சேராங் கொட்டையை (விஷப் பொருளென்று பயப்பட வேண்டாம். இதன் பால் மேலே தெறிக்காதபடி ஜாக்கிரதையுடன் கையாண்டால் பயப் படவே அவசியமில்லை.) குறுக்கில் ஒரு முறையும் நெடுக்கில் ஒரு முறையும் வெட்டுக் கத்தியின் ஒரே வீச்சில் வெட்டவும். நாலு துண்டாகுமல்லவா? இதில் ஒரு துண்டை எடுத்து ஒரு ஆழாக்குப் பாலிட்டு அத்துடன் ஒரு ஆழாக்கு ஜலமும் சேர்த்துக் காய்ச்சவும். ஜலம் சுண்டிப் பால் மட்டும் இருக்கும் நிலையில் இறக்கி, சேராங்கொட்டைத் துண்டை எடுத்தெறிந்து விட்டு, பாலை ஆறிய பின் பருகவும். இதனால் ரத்த மூலம் காலக்கிரமத்தில் சமனமாகும்.

கொம்பரக்கைப் பொடி செய்து ஒன்றிரண்டு சிட்டிகை விதம் தினம் 2, 3 வேளை தேனில் குழைத்தோ பாலை அனுபானமாக்கியோ பருகிவர ரத்தப் போக்கும், மலம் போன பிறகு வயிற்றில் உண்டாகும் கடுப்பு வலியும் குறையும்.

காட்டாத்திப் பூவின் கஷாயத்தைக் குடிப்பதாலும் இலவன் பிசின் என்னும் கடைச் சரக்கைக் கொம்பரக்குக்குச் சொன்ன விதம் உபயோகிப்பதாலும், அதே பலன் கிடைக்கும்.

காலையில் இருக்கும் புதுமலர்ச்சி
நாள் முழுவதும் இருக்க

# பாண்ட்ஸ்

ட்ரீம்ப்ளவர் டால்க்




நாள் முழுவதும் புதுமலர்ச்சியுடனும்
குளுமையுடனும் இருக்க, ஸ்நானத்திற்குப்பின்
பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்
உபயோகியுங்கள்!

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்
இன்பகரமான பரிமளமுள்ளது; மற்றும்
வியர்வையை உறுஞ்சும் தன்மையுடையது.
அது உங்களுக்கு நாள் முழுவதும்
நீடித்திருக்கும் புத்துணர்ச்சியை அளிக்கும்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

# அவர் செய்த அற்புதம்

கோமதி சுவாமிநாதன்

[செல்வந்தர் அனந்தராமன் வீட்டு ஹால். இரண்டு மூன்று நாற்காலிகள் ஒரு சிறு டீபாய், ஒரு மேஜை, ரேடியோ முதலிய பொருள்கள் அந்த ஹாலை அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன. ரேடியோவுக்குப் பக்கத்தில் ஒரு மேஜையில் விளக்கும் இருக்கிறது.

ஹாலில் நுழைந்த அனந்தராமன் மேஜை விளக்கைப் போட்டு விட்டு ரேடியோவையும் இயக்கிவிட்டு நாற்காலியில் வந்து உட்காருகிறார்.]

**ரேடியோ ஒலி :** (சில வினாடிகளில் திடீரென்று) நீ மடையன்! மூடன்! புத்தியில்லாதவன்! மண்டு!

**அனந்தராமன் :** (திடுக்கிட்டு) ஹா, நானு....

**ரேடியோ ஒலி :** (தொடர்ந்து) ஏன் திகைக்கிறாய்? ஏன் விழிக்கிறாய்? உன் வாழ்நாளில் முன்யோசனையுடன் ஏதாவது காரியம் செய்திருக்கிறாயா? சொல்! சொல்!

**அனந்தராமன் :** (ரேடியோவை 'டக்' என்று நிறுத்தி விட்டு) அக்கிரமம்! அநியாயம்! இந்த அனந்தராமன் முன் நின்று பேசவே யாரும் பயப்படுவார்கள்! இந்த ரேடியோ நிகழ்ச்சி என்னடாவென்றால் என்னை நேரடியாகவே தாக்குகிறது. என்ன நிகழ்ச்சியாக இருக்கும்? (இரைந்து) சுப்பையா! சுப்பையா!

[வேலைக்கார சுப்பையா தலையில் தலைப் பாகையைச் சுற்றிக் கொண்டே ஓடி வருகிறான்.]

**சுப்பையா :** (வந்து கொண்டே) வந்தேனய்யா! வந்தேனய்யா!

**அனந்தராமன் :** என்னடா! தெருக்கூத்திலே வரும் கள்ளபார்ட்காரன் மாதிரி 'என்ட்ரன்ஸ் ஸாங்' பாடிக் கொண்டு வருகிறாய்? ஓடிப்போய் வானொலி வாங்கிக்கொண்டுவா! ஜல்தி!

**சுப்பையா :** (தலைப்பாகை நீக்கித் தலையைச் சொறிந்து கொண்டு) எஜமானே, சில்லறை தறீங்களா? இல்லே! அம்மாகிட்டே வாங்கிக்கவா?

**அனந்தராமன் :** சில்லறை எதற்கு? அப்படியே வாங்கியாச்சு! சமையலறையிலே இருக்கும் அம்மாவைக் கேளு.

**சுப்பையா** (தயக்கத்துடன்.) ஐயா சைவம் என்று நினைத்துத்தான் வேலைக்கு வந்தேன்.

**அனந்தராமன் :** (எரிச்சலுடன்) அந்த நினைவுக்கு இப்போது என்னடா ஆபத்து வந்தது?

**சுப்பையா :** ஐயா தான் கோழி வாங்கி வரச் சொன்னீங்களே! இந்தச் சுப்பையா கோழி முட்டையைக் கூடக் கையாலே தொட்டதில்லீங்க!

**அனந்தராமன் :** (சிரித்துக் கொண்டே) உன் காதுக்குள்ளே கட்டெறும்பைத் தான்டா விரட்ட வேண்டும்! நான் கேட்டது வான்கோழியுமில்லே! வாலறுந்த ஆடுமில்லே. ரேடியோ நிகழ்ச்சிகள் பார்க்கிற (இரைந்து) வானொலி! வானொலி!

[அனந்தராமனின் பெண் வான்மதி உள்ளிருந்து வருகிறாள்.]

**வான்மதி :** கூப்பிட்டீர்களா அப்பா!

**அனந்தராமன் :** கூப்பிடவில்லே! கூப்பாடு போட்டேன். வானொலிப் புத்தகம் எங்கே? அதைத் தேடினால் இங்கே வான்கோழி ஓடுகிறது. வான்மதி நுழைகிறாள். அப்புறம் என்னதான் வருமோ?

**வான்மதி :** அப்புறம் ஒரு 'விளம்பரம்' வரும் பத்திரிகையிலே! 'எங்கள் வீட்டு வானொலியைக் காணோம்! தேடிக் கண்டு பிடித்துத் தருவோர்க்கு மூன்று நயா பைசா அன்பளிப்பும் நன்றியும் வழங்கப்படும்' என்று மூன்று ரூபாய் செலவழித்து ஒரு விளம்பரம் கொடுப்பீர்கள். உங்களுக்கா தெரியாது? அட்வர்டைஸ்மெண்ட் அனந்தராமன் என்று சும்மாவா ஊரில் சொல்லுகிறார்கள்?

**அனந்தராமன் :** ரைட்! ரைட்! நல்ல வேளையில் நினைவூட்டினாய். உன் 'மாட்ரிமோனியல்' விளம்பரமும் சீக்கிரம் வந்தாக வேண்டும். நானே எழுதுகிறேன்.

**வான்மதி :** (நாணத்துடன்) போங்கப்பா! உங்களுக்கு வேறு வேலையே இல்லே!

**அனந்தராமன் :** நல்ல பையனைப் பார்த்து உன் காலில் கட்டுவதுதான் என் வேலை. மாப்பிள்ளை என்று ஒரு பயல் வந்து அவனை விரட்டு விரட்டென்று விரட்டிப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ரொம்ப நாட்களாக ஆசை!

**வான்மதி :** அதையும் ஞாபகமாக விளம்பரத்தில் உடனே சேர்த்து விடுங்கள், அப்பா!



**அனந்தராமன்:** என்னம்மா! கேலி பண்ணுகிறாய்? மாப்பிள்ளைப் பையனைக் காரில் என்னுடன் உட்கார வைத்துக் கொண்டு, காரை அறுபது மைல் எழுபது மைல் வேகத்தில் விரட்டிப் பார்ப்பேன்! வேறொன்றுமில்லை. பயப்படாதே! என் என்..! முதலில் நான் சொல்லும் மற்றொரு விளம்பர 'மாட்டர்' எழுதிக் கொள்!

**வான்மதி:** (பேப்பரையும் பேனாவையும் எடுத்து) எழுதி விட்டேனப்பா!

**அனந்த:** (திடுக்கிட்டு) என்னம்மா! நான் சொல்லவே யில்லை! அதற்குள் எப்படி எழுத முடியும்?

**வான்மதி:** என்ன பிரமாதம்? நம்முடைய பங்களாவுக்கு வெள்ளையடிக்க வேண்டுமென்று காலையில் சொல்லிக் கொண்டிருந்தீர்கள். 'ஒரு மாடி, இரண்டு ஹால், மூன்று வராண்டா, எட்டு அறைகள் உள்ள பங்களாவுக்கு வெள்ளையடிக்க டெண்டர்கள் கோரப்படுகின்றன. வேலையின் உத்தேச மதிப்பு முப்பத்தி ஏழரை ரூபாய். விண்ணப்பப் பாரங்களுக்குக் கால் ரூபாய் செலுத்தி.....

**அனந்த:** வெள்ளையடிப்பதும் கொள்ளையடிப்பதும் கொஞ்சம் பொறுக்கட்டும். இதை அதைவிட முக்கிய விஷயம். எழுது! அழகாகவும் பார்வையாகவும், கம்பீரமாகவும்....

**வான்மதி:** (எழுதிக் கொண்டே) உள்ள நாய் ஒன்று.....

**கப்பையா:** (முன்னால் வந்து) அவசியம் நம்ப பங்களாவுக்கு வேண்டும் அம்மா!... பங்களாவுக்கு அழகு 'பார்க்கிங் டாக்'னு பழமொழிகூடச் சொல்லுவாங்க!

**அனந்த:** ஷட் அப்! எழுதம்மா! கம்பீரமாகவும் வேளைக்கு இரண்டு படி பால் கொடுக்கக்கூடியதாகவும் உள்ள உயர்ந்த ரகப் பசு ஒன்று தேவை. விண்ணப்பதாரர்கள் நேரில் நற்சாட்சிப் பத்திரங்களுடன் வந்து...

**வான்மதி:** நான் நினைத்தேன். 'கொம்பில் நற்சாட்சிப் பத்திரங்களைக் குத்திக் கொண்டு வர வேண்டும்' என்று எழுதவா?

**அனந்த:** நான்சொன்னால்! நானே எழுதிக் கொள்கிறேன்! ஏதோ குழப்பம். மாடு எப்படி நேரில் வீடு தேடி வரும்? எப்படி விளம்பரத்தைப் பார்க்கும்?

*[தாமே எழுத ஆரம்பிக்கிறார். வான்மதியும் கப்பையாவும் சிரித்துக் கொண்டு இளைப்புகிறார்கள்.]*

## 2

*[ஒரு வாரம் கழித்துப் பகல் வேளை. அனந்தராமன் ஏதோ யோசனை செய்து கொண்டிருக்கிறார். தோட்டக்காரக் குப்பன் அப் பக்கமாகப் போகிறான்.]*

**அனந்த:** தோட்ட வேலை யெல்லாம் எப்படியடா இருக்கிறது?

**குப்பன்:** பிச்சுப்பிட்டேனுங்க எசமான்!

**அனந்த:** யாரை?

**குப்பன்:** வேண்டாத தழைகுழைகளையெல்லாம்தானுங்க!

**அனந்த:** நல்ல வேலை! யாரையாவது அடித்து விட்டு வந்து ஒளிந்து கொள்ளத்தான் இடம் பார்க்கிறாயோ என்று நினைத்தேன்.

**குப்பன்:** கொன்னுப்பிட்டேனுங்க, எஜமான்! கொன்னுப்பிட்டேன்.

**அனந்த** (திடுக்கிட்டு)**:** யாரைக் கொன்றாய்? கொலைகாரா!



**குப்பன்:** பெருச்சாளியை எஜமான்! தோட்டத்திலே கரங்கம் தோண்டி நாசம் செய்து கொண்டிருந்ததில்லே? ஒரே போடா போட்டுட்டேன்!

**அனந்த:** இலை வை! போய் வேலையை..

**குப்பன்:** இலையயும் வைக்கட்டேன் யஜமான்! விடுவேனு?

**அனந்த** (பதறி)**:** என்னடா?

**குப்பன்:** செத்ததைக் குப்பைக்கு யஜமான்! (தோட்டத்தின் பக்கம் பார்த்து) ஐயையோ! என் குடிசைப் பக்கம் காத்து அடிக்குதே!

*[ஓடுகிறான். உட்பக்கமிருந்து சமையல்காரச் சாம்பு கையில் கரண்டியுடன் வருகிறான்.]*

**சாம்பு:** யஜமான்!

**அனந்த:** கர்ண கவச குண்டலத்தோடு பிறந்தானும்! இந்தச் சாம்பு கையில் கரண்டியுடன் பிறந்திருக்கிறான். நீ என்னடாப்பா சொல்லப் போகிறாய்? பிய்த்தாயா? கொன்றாயா? இலை வைத்தாயா?

**சாம்பு!** நானு? நறுக்கினேன்! வேகவைச்சேன்! தாளிச்சேன்! உங்களுக்கு மிகவும் பிடித்த கருணைக் கிழங்குக் கூட்டு இன்றைக்கு! ஆறிப் போவதற்குள் சாப்பிட வந்து விடுங்கள்! (மெதுவாக) எனக்கும் பசிக்கிறது.

**அனந்த:** நீ போ! இதோ நான் வருகிறேன்! நம்ப வான்மதி விவாக விளம்பர சம்பந்தமாக ஏதோ பதில்கள் வந்திருக்காப்




"டேய்! டேய்! என்னடா இது?"
"கொஞ்சம் அப்படியே இருப்பா! எனக்கும் 'டென்சிங்' மாதிரி மலே ஏறணும்னு ஆசையா இருக்கு அப்பா!"

---

போலிருக்கிறது. பிரித்துப் பார்த்து விட்டு வருகிறேன். அதற்குள் இலையைப் போட்டுத் தயாராக இரு.

**சாம்பு:** கவனமாகப் பாருங்கள்! நம்ப சின்ன அம்மாவுக்கு ருசியான சாப்பாடு என்றால் ரொம்பப் பிரியம். மாப்பிள்ளைக்கும் அந்த ருசி இருக்க வேண்டும் பாருங்கள்! சும்மா ரொட்டித் துண்டையும் வெண்ணெயும் மழ மழ வென்று விழுங்கும் சீமைக்குப் போய்வந்த பிள்ளையாண்டானாக இருந்தால் அவனுக்குச் சுண்டைக்காய் வற்றல் குழம்பின் அருமை எப்படித் தெரியும்? ஓரளவு நல்ல பதார்த்தங்களைத் தயார் பண்ணத் தெரிந்த ஆசாமியாக இருந்தால்கூட நலம்!

**அனந்த:** மாப்பிள்ளை ஒரு சாப்பாட்டு ராமனாகவும் இருக்க வேண்டும். சமையல் நிபுணனாகவும் இருக்க வேண்டும். அப்படித் தானே?....உன்னைப்போல!

**சாம்பு:** (வெட்கத்துடன்) நானும் ஒரு கலைஞன்தானே?

**அனந்த:** பேஷ்! பேஷ்! உனக்குப் பொன்னாடை போர்த்த வேண்டியதுதான். இல்லை! தங்கக் கரண்டியும் தங்கத் தூக்குச் சட்டியும் பரிசளிக்கலாம். கப்பையா...... கப்பையா!

[சாம்பு போகிறான். கப்பையாவுக்குப் பதிலாகச் சில நாட்கள் வேலைபார்க்கும் கப்பன் தலையை நீட்டுகிறான்!]

**கப்பன்:** யஜமான்!

**அனந்த:** ஓ! நீ புது வேலைக்காரனா? கப்பையாவின் லீவு 'வேகன்ஸியில்' வேலை பார்க்கிறவன்! உனக்கு சர்வீஸ் ரிஜிஸ்டர் போட்டாக வேண்டும்!

**கப்பன்:** எனக்கெதுக்குங்க ரிஜிஸ்டர் நோட்டுக! நான் தகராறு எல்லாம் பண்ண மாட்டேன். கப்பையா அண்ணே வந்த வுடனே நான் போய் விடுகிறேன்!

**அனந்த:** அட சீ! ஒருவனை நான் இங்கே வேலை பார்த்தாலும் முறைப்படி பார்த்தாக வேண்டும். இந்த அனந்தராமன் ஒரு ரிட்டயர்ட் சர்க்கார் இஞ்சினீயர்! சர்க்கார் பந்தாவிலேதான் இங்கே எல்லாம் நடக்கும்! உன் பெயரென்ன? மறந்து போச்சு.

**கப்பன்:** கப்பனுங்க!

**அனந்த:** வாட்? கப்பன்! பப்பன்! டப்பன்!

**கப்பன்:** எஜமானுக்கு என் பெயர் நீளமாக இருக்குமென்று தோணினால் 'கப்'னு கூப்பிடுங்க! பக்குன்னு ஓடி வரேன்!

**அனந்த:** அட மக்கு! பழைய பெயரை யெல்லாம் நாகரிகமாக மாற்றி வைத்துக் கொள்ளும் காலம் இது! களை பிடுங்கின காத்தாயி எல்லாம் ஒரு சினிமாவிலே எக்ஸ்ட்ரா வாக இடுப்பை நீட்டினதும் கனகாம்பரமாக மலர்ந்து விடுகிறாள்! நீ என்னடான்னா கப்பன் பப்பன் என்கிறாய்! உன்னை நாகரிகமாக கிரேஷ்னு கூப்பிடப் போகிறேன்!

**கப்பன்:** ஐயோ! வேண்டாம் எஜமான்! அந்த இஷ் புஷ் எல்லாம் என் காதிலேயும் நுழையாது! மனசிலேயும் நிற்காது.

**அனந்தராமன்:** சரி தொலை!...எழுதப் படிக்கத் தெரியுமா?....?

**கப்பன்:** கொஞ்சம் கொஞ்சம் தெரியும்.

**அனந்தராமன்:** நல்லது!......சின்னம்மாவைக் காணோம்!....இந்தக் கவரை யெல்லாம் பிரித்து மூணு பிரிவாக வை. சின்னம்மா கல்யாண விளம்பரம், பங்களாவுக்கு வெள்ளை யடிக்கிற சமாசாரம், பசுமாடு விஷயம், மூன்றுக்கும் பதில்கள் வந்திருக்கும்! அதை யெல்லாம் தனித் தனியாக எடுத்து வை.

[கப்பன் கீழே உட்கார்ந்து கவர்களை உடைத்துக் கடிதங்களைப் பிரிக்கிறான்]

**கப்பன்** (சிலநிமிடங்கள் கழித்துத் தலையைச் சொறிந்து கொண்டே): யஜமான், நீங்க சொல்றாப்போலே ஒன்னும்சரியாக வரலியே!

**அனந்தராமன்:** என்னடா உளறுகிறாய்? படிக்கத் தெரியவில்லை என்றால் வைத்து விட்டுப் போ!

**கப்பன்:** எழுதியிருக்கிறது எல்லாம் தெளிவாகத்தான் இருக்கு, யஜமான்! ஆனால் விஷயம்தான் புதிதாக இருக்கு!

**அனந்தராமன்:** இவர் பெரிய கொலம்பஸ்! கண்டுபிடித்து விட்டார்!....அந்தக் கடுதாசியை வாசிடா!

**கப்பன்** (ஒரு கடிதத்தை எடுத்து): அன்பார்ந்த ஐயா! உங்கள் விளம்பரத்தைக் கண்ணுற்றேன். என் பெண் மல்லிகா எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்திருக்கிறாள். சங்கீதமும் வரும். வீட்டுக் காரியங்களில் நல்ல தேர்ச்சி உண்டு. போதுமான நகைகள் போட்டிருக்கிறோம். புகைப்படம் இணைக்கப் பட்டிருக்கிறது. பதில் எழுதுங்கள்—அன்புள்ள அப்பாசாமி.

**அனந்தராமன்:** வாட் நான்சென்ஸ்! விளம்பரத்தைச் சரியாகப் படிக்காமல் மடமட வென்று பதில் எழுதிவிட்டானா மடையன்?..'

# உங்கள் இஷ்டப்படி உபயோகிக்கலாம்

நல்லவேகமான காற்றும் குறைந்த செலவும் உள்ள இந்த ஆல்-பர்பஸ் விசிறி, இதுவரை கண்டிராத வியாபகத்தன்மையில் சிறந்ததாகும்.

நம்பிக்கையூட்டும் விசிறி இது: தொன்றே "ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு விசிறி."











16" ஸ்வீப் ஏ. ஸி.

விலை ரூ. 70/-
எக்ஸைஸ் வரி ரூ. 5/-
உள்ளூர் வரி தனி













**Orient**

**ஓரியண்ட் ஆல்-பர்பஸ் விசிறிகள்**
சொல்வதைக் காட்டிலும் சேவையில் மிக்கவை

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.
6, கோர் பிபி லேன், கல்கத்தா-11.



"என்னைக் கல்யாணம் பண்ணிண்ட மறு வருஷம் என் கணவர் லக்ஷாதிபதி யாகி விட்டார்!"

"நிஜமாகவா!"

"ஆமாம்! அதற்குமுன்னே அவர் கோடீசுவரராக இருந்தார்!"

காமாலைக்காரனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள் என்பார்கள்! மகளைப் பெற்ற அந்த மகானுக்கு மாட்ரிமோனியல் விளம்பரமெல்லாம் பெண்கேட்டுத்தான் வரும் என்ற நினைவு போலிருக்கிறது!...நான் மாப்பிள்ளைக்காக வல்லவா விளம்பரம் பண்ணியிருக்கிறேன்!... டேய் சுப்பா!....விலாசம் நமக்குத்தானா?

சுப்பன்: அக்கக் கோத்தாப்போலே எஜமான் பேருதான் போட்டிருக்கு!....இந்தக் கடுதாசியைப் படிக்கிறேன் கேளுங்க!.... அன்புடையீர்!.....மாடி வராண்டாவில் மாட்டுக் கொட்டம் கட்ட கார்ப்பரேஷன் அனுமதி பெற்றிருக்கிறீர்களா? அப்படியானால் நானும் விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டும். எருமை மாட்டை மாடியில் ஏற்றி இறக்க என்ன வழியைக் கையாளலாம்? - அன்புள்ள பால்கார பரமசிவம்.

அனந்தராமன் (திடுக்கிட்டு): என்ன? மாடியிலே மாட்டுக் கொட்டகையா?....அந்த எருமை மாடு என்னவோ பேத்தி யிருக்கிறதே!...என்ன இன்றைக்கு ஒரே பைத்தியக்காரக் கடிதங்களாக வந்திருக்கின்றன?

சுப்பன்: இந்தக் கடுதாசியிலேயும் எஜமான் பேரைத் தெளிவாகத்தான் எழுதியிருக்கான்! இந்த மூணாவது லெட்டருலே....

அனந்தராமன்: அவன் என்ன எழுதியிருக்கான்!

சுப்பன்: ஐயா! தங்கள் விளம்பரத்தில் கண்டிருக்கும் பசுவைப் பார்க்க எப்போது வரலாம்? இரண்டு படி பால் நிஜமாகவே தினம் கறக்குமென்பதற்கு உத்தரவாதம் கொடுப்பீர்களா? - இப்படிக்கு தண்ணீர்க் குழாய்த் தெரு தம்புசாமி.

அனந்தராமன்: (தலையிலடித்துக்கொண்டு) கர்மம்! கர்மம்!...எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் ஜம்பமாகப் பதில் எழுதியிருக்கிறார்கள்.

[வாண்மதி வெளியிலிருந்து வருகிறாள்]

வாண்மதி. பிரமாதம் அப்பா! பிரமாதம்!

அனந்தராமன்: நான் பதில் எழுதிக் காண்பிக்கிறேன்! அப்புறம் சொல்லாய் அற்புதம் என்று!...

வாண்மதி: (திடுக்கிட்டு) யாருக்குப் பதில்?

அனந்தராமன்: அப்படியானால் நீ இப்போது எதற்குப் பிரமாதம் என்றாய்?

வாண்மதி: நீங்கள் கொடுத்திருக்கும் விளம்பரங்களுக்கு! நான் நேற்று பார்க்கவில்லை!...இன்று என் சிநேகிதிகள் பார்த்து விட்டுப் பேசமுடியாமல் சிரித்தபோதுதான் விஷயம் புரிந்தது!

அனந்தராமன்: ஏன் சிரிக்கிறார்கள்? விளம்பரத்தின் மதிப்புத் தெரியாத மண்டுகள்!... விளம்பரத்தின் மூலம்தான் நல்ல சரக்கை விற்கவோ, வாங்கவோ முடியும்!...

வாண்மதி: அதற்காகத்தான் பசுமாட்டை விற்கப் போவதாக விளம்பரம் செய்திருக்கிறீர்களா? நம்மிடம் ஏது பசு மாடு? ஒரு வேளை கமிஷன் வியாபாரமோ?

அனந்தராமன்: அபத்தம்! பசுமாடு வேண்டுமென்று விளம்பரம் செய்திருக்கிறேனா! நீயும் அந்தத் தம்புசாமி கோஷ்டி போலிருக்கிறது!

வாண்மதி (கைப்பையிலிருந்து பேப்பரை உருவி): நீங்கள் பத்திரிகையில் அச்சான உங்கள் விளம்பரத்தைப் படிக்கவே யில்லையா?

அனந்தராமன்: நான்தானே அதை எழுதினேன்! பிறகு நான் ஏன் அதைத் திரும்பிப் படிக்கிறேன்!

வாண்மதி: அப்படிச் சொல்லுங்க! நான் படிக்கிறேன் கேளுங்கள்:

"பி. ஏ. ஹானர்ஸ் பாஸ் செய்து செல்வமாக வளர்ந்து இருபத்திரண்டு வயதை எட்டிய பிள்ளைக்கு மணமகள் தேவை. தந்தை ரிட்டயர்ட் கெஜட்டட் ஆபீசர். — அனந்தராமன் த. பெ. 99.

அப்புறம்

"மூன்று ஹால், இரண்டு மாடி, நாலு வராண்டா, மாடியில் மாட்டுக் கொட்டம், எட்டு அறைகள் முதலியவை கொண்ட கட்டடத்துக்கு வருடாந்திர ரிப்பேர் செய்து வெள்ளையடிக்க டெண்டர்கள் கோரப்படுகின்றன. மேற்தளத்தில் மாட்டுக் கொட்டம் வேண்டாம்.

கடைசியாக,

"கம்பீரமாகவும் சாதுவாகவும் வேளைக்கு இரண்டு படி பால் கறக்கக் கூடியதுமான ஒரு நல்ல உயர்ந்த ஜாதிப் பசுமாடு உடனே விற்பனைக்கு இருக்கிறது. தயாராக உள்ளவர்கள் விசாரிக்கவும்.........போதுமா?

அனந்தராமன் (தலையைச் சொறிந்தபடி): ஒரே குழப்பம் வாண்மதி; குழப்பம்! மூன்று விஷயங்களையும் ஒன்றுக்கொன்று தகராறு பண்ணி விட்டேன்! இப்போ என்ன பண்ணுவது?

வாண்மதி: நல்ல அப்பா! உடனே, பிள்ளைக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. வீட்டுக்கு வெள்ளை யடித்தாகிவிட்டது. மாடு விற்கப்பட்டு விட்டதுன்னு மூன்று விளம்பரங்கள் கொடுங்கள்! அந்த நாளிலே, அறுநூறு அடி நீளம் நாற்பதடி அகலம் பாலம் கட்டவேண்டிய இடத்தில், நாற்பதடி நீளம் அறுநூறு அடி அகலம் கட்ட வேண்டும் என்று உத்தரவு போட்ட இஞ்சினீயரல்லவா? அட்வர்டைஸ்மெண்ட் அனந்தராமனே, ஜொக்கோ!

[சிரித்துக் கொண்டே உள்ளே போகிறாள். அனந்தராமன் விளம்பரப் பகுதியைப் பார்த்து விழிக்கிறார்.]

Printed and Published by R. Anantanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

ஆரோக்கியத்தை விரும்புவோர் எப்பொழுதும்
**லைப்பாய்** உபயோகித்தே நீராடுவோர்

விளையாடும்போதும் சரி, வேலை செய்யும்
போதும் சரி, அழுக்கிலிருந்து நாம் தப்ப
முடியாது. நம் ஆரோக்கியத்திற்கு நிரந்தர
மாக ஆபத்து விளைவிக்கும் நோய்க்
கிருமிகள் அழுக்கில் இருக்கின்றன.
அக் கிருமிகளைக் கழுவிக் களைந்து
உங்கள் ஆரோக்கியத்தைப் பாது
காப்பது லைப்பாய் சோப்.

அன்றாடம் லைப்பாய் சோப்
தேய்த்துக் குளித்து உங்கள்
ஆரோக்கியத்தைக் காத்
துக் கொள்ளுங்கள்.
லைப்பாய் ஸ்நானம்
புதுமலர்ச்சி யூட்டுகிறது.






இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# நாளொரு மேனியாக...

சரும
அழகினை
ஓங்கச்
செய்வது

## ரெக்ஸோனு சோப்

ரெக்ஸோனுவில் 'கேடில்' என்ற
விசேஷப் பொருள் அடங்கியுள்ளது;
எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த
விசேஷத் தைலமே 'கேடில்'
என்பது. அந்த எண்ணெய்கள் உங்கள்
சருமத்திற்கு ஊட்டமளிப்பவை.

உங்கள் எழிலுக்கு . . .
ரெக்ஸோனு




RP. 160-X32 TM